# மங்கையர்க்கரசி

அல்லது

# பாண்டிமாதேவி

ஸ்ரீமான் - மா. துரைசாமி முதலியார்

இயற்றியது.




ஸ்ரீ பாலசுப்ரமண்யம் கம்பெனி

இராயப்பேட்டை, சென்னை.

1924



[விலை அணா 5.

செந்திலாண்டவன் திருவடி துணை.

# முன்னுரை.

சிறு பிள்ளைகளுக்கு மத ஸம்பந்தமான வசன நூல்கள் வேண்டுமென்று கூறும் இந்த சமயத்தில், நண்பர் மா. துரைசாமி முதலியார், மங்கையர்க்கரசி என்னும் இச் சிறுநூலை எழுதியது காலத்திற் செய்த ஒரு செய்கையாதலின், அதுகண்டு நான் மகிழ்ச்சியடைகின்றேன்.

சிறுவர்களுக்கென்று நூல் எழுதுவதற்கு இலக்கிய இலக்கணங்களிலே வல்லமையிருந்தால் மாத்திரம் போதாது. சிறுபிள்ளைகளின் மனம் எதனை எதுவரையில் கிரகித்துக்கொண்டு பயன் அடையுமோ அதற்கேற்றபடி, சொல்லும் பொருளும் வாக்கியமும் சுவை பெற அமைத்தற்குரிய தனியான ஓர் உணர்ச்சியும் வேண்டும்.

அந்த முறையை மேற்கொண்டு மத ஸம்பந்தமான நூல்களை எழுதுவது சிரமமென்பதை இப்படிப் பட்ட முயற்சியில் ஈடுபட்டார் நன்குணர்வர். இந்த நூலில் முதலியார் அவர்கள், வாக்கியங்களையும் சொல்லையும் பொருளையும் ஒழுங்கு படுத்தி அமைத்திருக்கிறார். இந்த நூல் ஆண் பெண் இருபாலர்க்கும் உபயோகமா

கக் கூடியது. இதனால் நமது மத உண்மைகள் பல இனிது விளங்கும்; கற்புடைய பெண்களின் குண விசேஷங்களும் அவர்களுடையப் பெருமையும் இனிது புலனாம். பெண்களுக்குக் கல்வியறிவிருப்பதனால் அவர்களுக்கு அவ்வறிவு தம் வாழ்க்கையில் எவ்வளவு தூரம் பயன்படுகிறதென்பதை இந்நூல் விளக்கும்.

இதனைக் கல்வி யிலாகா அதிகாரிகள், பள்ளிக் கூடங்களில் பிள்ளைகளுக்குரிய உப பாடபுத்தகமாக உபயோகிப்பார்களானால் அப்பிள்ளைகள் மத உணர்ச்சியும் நல்ல ஒழுக்கமும் பாஷா ஞானமும் பெறுவார்களென்பதில் ஐயமில்லை.

திரு. அ. சுப்ரமணிய பாரதி.

முருகன் துணை.

"அருளா ரடிபோற்று மன்பர்க் கருள்சேய்
அருளே நமக்காதிக் கம"—திருவலங்கற்றிரட்டு.

ஒருவர் நல்ல வழியை நாடுவதற்குத் துணைகள் பல உள. அவற்றுள் செயற்கரிய செய்யும் பெரியோர் சரிதங்களும் ஒன்றும். பெரியோர் என்பார் ஆண் பெண் ஆகிய இரு வகுப்பினருள்ளும் இருக்கின்றனர். பெரியோராகிய பெண்மணிகளுள் மங்கையர்க்கரசி அம்மையார் என்பவர் ஒருவர் இருந்தார். அவ்வம்மை யார் சோழ மன்னனுடைய புதல்வி; பாண்டியன் மனைவி. அவர் உயர்ந்த நற்குணங்கள் பலவும் அமை யப்பெற்று விளங்கினார்: கற்பு நிலையிற் சிறந்திருந் தார்; தெய்வ பத்தியில் இணையற்று நின்றார்; பாண்டி நாட்டிற் சைவசமயத்தை நிலை நிறுத்தினார்; தங் கணவனைப் பிறவிக் கடலினின்றுங் கரை யேற்றினார். மங்கையர்க்கரசியாரைச் சைவசமய ஆசிரியர்களுள் ஒருவராகிய திருஞானசம்பந்த சுவாமிகள் புகழ்ந்து பாடினார்; பெரிய புராணம் அருளிய சேக்கிழார் பெரு மான், "மங்கையர்க்குத் தனியரசி யெங்கள் தெய்வம்" என்று துதித்தார்; அவர் சைவ நாயன்மார் அறுபத்து மூவருள் ஒருவராகவும் இருக்கின்றார். ஆகலின், அவர் பெருமை அளவிடக் கூடாததேயாம். இவ்வளவு அரும்பெருஞ் சிறப்பு வாய்ந்த அரசியார் தோன்றிய

பெண்வகுப்பிலே பிறந்தவர்களெல்லாரும் அவரைப் பின்பற்ற முயலுவது அவர்களுடைய பெருங்கடமை யாகும்.

மங்கையர்க்கரசி யம்மையாருடைய இச்சரித்திரம், "பெண் மக்களே! கடவுள் வழிபாட்டைக் கைவிடாதிர்கள்; தெய்வத் தன்மை பொருந்தி யிருங்கள்" என்று கூறுகிறது. இது, யாவருக்கும் பயன்பட வேண்டுமென்று எளிய நடையில் எழுதப்பட்டுள்ளது. ஆகலின், இதனை யாவரும் படித்துணர்வதோடு தங்கள் மக்களுக்கும் இளமையிலேயே போதித்து வருதல் பெருநலந் தருவதாகும்.

இதனை எழுதுமாறு ஊக்கியும், எழுதிய பின்னர் வெளிவரச் செய்தும் உதவிய நண்பர் வரகவி-ஸ்ரீ திரு. அ. சுப்பிரமணிய பாரதியார் அவர்களுக்கு எனது வந்தனங்கள் உரியனவாகும்.

இங்ஙனம்:

மா. து.

உ

முருகன் துணை

# மங்கையர்க்கரசி

## அல்லது

# பாண்டிமாதேவி

---

## சோழநாட்டியல்

நாம் வசிக்கும் நாட்டிற்கு இந்தியா என்று பெயர். இதற்குப் பரதகண்டம் என்றும் ஒரு பெயர் உண்டு. இதன் தென்பாகம் எல்லாவளங்களும் பொருந்தியது. இங்குச் சேர சோழ பாண்டிய நாடுகள் சிறந்து விளங்கின. இவற்றுள் சோழநாடு இயற்கை வளங்கள் எல்லாமுடையது. இந்த நாட்டைத் தமிழ்க் கிழவியாய ஔவையார், "சோழ வளநாடு சோறுடைத்து" எனச் சிறப்பித்துப் பாடினார்; கவிச்சக்கரவர்த்தியாய கம்பர், இந் நாட்டையும், இதிற் பாயும் நதியையும், இந் நாட்டு அரசனையும் புகழ்ந்து, "தண்ணீருங் காவிரியே தார்வேந்தன் சோழனே, மண்ணாவ துஞ்சோழ மண்டலமே" என்று புகழ்ந்தார். இங்கு, குடகு மலையிலிருந்து கடுகி வருகின்ற காவிரியாறு பாய்கின்றமையின் பொய்கைக ளெங்கும் செந்தாமரைப் பூக்கள் மலர்ந்து பிரகாசிக்கும்; நீரோடைகளெங்கும் நீலோற்பல மலர்கள் நிரம்பி யிருக்கும்; கழனிகளெல்லாம் பல வருக்கத்து நெற்பயிர்களுங் கரும்பும் நிரம்பிப் பச்சென்றிருக்கும்; உழவுப்

பெண்கள் பாடும் பாடல்களும், ஏர்பூட்டி நின்றோர் ஏரைப்பாடும மங்கலப் பாட்டுகளும், வயல்களில் நீர பாயும் ஓசையும், பலவேறு வகைப்பட்ட பறவைக் கூட்டங்களின் இனிய குரல்களும் எல்லோருடைய செவிகளுக்கும் இன்பந்தரும்; கிளிகளுங குயிற் கூட்டங்களும் இருக்கின்ற இளமரச சோலைகள் பல நெருங்கி யிருக்கும். சோழநாடு, இவ் வளங்களோடு, குடிவளத்திலுங் குறைவில்லாதது.

## சோழன் செங்கோல்

சிறப்புகள் பல அமைந்துள்ள சோழநாட்டை ஆத்திமாலை சூடும் அரசர் பலர் ஆண்டு வந்தனர். அவர்களுள் ஏறக்குறைய 1300-ஆண்டுகளுக்குமுன் அரசாண்ட சோழமன்னன் கல்வி கேள்விகளில் தேர்ச்சி பெற்று அளவிலா அறிவுடையவனாய் விளங்கினான். அவன் பகைவர்களுக்குப் பயப்படாதவன்; ஏழைகளுக்கு இல்லையென்னாது கொடுப்பவன்; தருமவழியில் நடப்பவன்; தைரியத்திற் சிறந்தவன்; நற்குணத்திற்கு நாயகன்; கடுஞ்சொல் சொல்லாதவன்; எல்லா உயிர்களுக்கும் இனியவன்; அவன் நீதிமுறை தவறாது வாழ்ந்து வந்தமையின் அவனுடைய குடிமக்கள்,

> "உறுபசியும ஓவாப் பிணியுஞ் செறுபகையுஞ்
> சேரா தியல்வது நாடு."

என்று திருவள்ளுவர் கூறியருளியபடி, நோயற்ற வாழ்வோடுங் குறைவற்ற செல்வத்தோடும் இருந்தார்கள். இவ்வளவு புகழ் வாய்ந்த புண்ணியன் பிறவியால் மனிதனேயாயினும,

"முறைசெய்து காப்பாற்று மன்னவன் மக்கட்கு
இறையென்று வைக்கப் படும்."

என்ற குறள் வாக்கின்படி குடிகள் அவனைக் கடவுளென்று கொண்டாடினார்கள். சோழ பூபதியும் அவனுடைய குடிமக்களும் உலக வாழ்க்கையில் உயர்ந்து விளங்கியது போலவே கடவுள் வழிபாட்டிலும் சிறந்து விளங்கினார்கள்.

## சோழனுக்கு உற்ற துணை

சோழ மன்னனுடைய மனைவி கற்பிற் சிறந்த கண்ணகியை யொத்தவள்; தன் கணவனை தான் வழிபடுந் தக்க தெய்வமென அவனுடைய பாதங்களில் வீழ்ந்து வணங்குபவள்; காதலனுக்கு வரும் இன்ப துன்பங்களை அவனோடு கலந்து அனுபவிப்பவள்; கணவனைத் தன் நெஞ்சினும் கண்ணினும் கனவிலும் பிரியாதவள்; அந்த அம்மையார் அரச பத்தினியே யாயினும் பெருமை பாராட்டல், பெரியார்ப் பிழைத்தல் முதலிய கெட்ட குணங்களைக் கனவிலும் அறியாதவள்; குடிமக்களிடத்தில் தாயைப்போல் தயையும் அன்பும் உள்ளவள். ஒருவனுக்குத் 'தவத்தளவேதான் தாரம் அமையும்' என்று பெரியோர் கூறுவது போல, சோழன் செய்த தவப் பயனாகவே அவ்வம்மையார் அவனுக்கு வாய்த்தாளெனல் வேண்டும்.

## பிள்ளைப் பேறு

சோழமன்னன் இவ்வுலகில் அடைதற்குரிய செல்வங்களில் ஏறக்குறைய எல்லாவற்றையும் அடைந்

னும், குழந்தையில்லை யென்னுங் குறையொன்றை உடையவனு யிருந்தான். ஆகவே,

“ பெறுமவற்றுள் யாமறிவ திலலை அறிவறிந்த
மக்கட்பே றல்ல பிற ”

என்ற புலவர் வாக்கை அவன் அடிக்கடி சிந்திக்க நேர்ந்தது. அதனால், பெரியார் கட்டளைப்படி அரசனும் அரசியும் நோன்பு பல நோற்று வந்தார்கள். அந்த நாட்டிலுள்ள மக்களும் மன்னனுக்கு நேர்ந்த குறையைத் தங்களுக்கு நேர்ந்ததாகவே யெண்ணித் தவஞ் செய்தார்கள். பிறகு, எல்லோருடைய தவங்களும் முற்றுப் பெறவும், உலகம் களிப்பெய்தவும், தருமம் மிகுந்து ஓங்கவும், அதருமம் அழியவும் அவர்கள் வழிபடு கடவுளாகிய பார்வதி பதியின் அருள் நோக்கத்தால் அரச பத்தினி கருப்ப முற்றுக் கருணை விருக்ஷத்தின் அருள் பழுத்ததெனை ஒரு பெண் குழந்தையைப் பெற்றாள்.

## பெண்ணின் பேதைப் பருவம்

மன்னனுக்குக் குழந்தை பிறந்ததும் மாநகரெங்கும் மகிழ்ச்சிக் கடலில் அமிழ்ந்தது. சோழமன்னன் தனக்கு அம் மகவைத் தந்த தெய்வத்தைப் போற்றித் தேவாலயங்களில் திருவிழாக் கொண்டாடினான் ; அறச் சாலைகளைப் பெருக்கி அளவற்ற தான தருமங்களை வழங்கினான்; தனக்குக் கீழ்ப்பட்ட சிற்றரசர்கள் தரும வரிகளை விலக்கினான்; சிறைப்பட்டிருந்தோர் யாவரும் களிப்புற் றிருக்குமாறு அவர்களை விடுதலை செய்தான. அரசன் குழந்தையைக் கண்டதும் அளவற்றிருந்த

மனக்கவலை சூரியனைக்கண்ட பனிபோல் அகன்றது. அவன் அடைந்த இன்பம், முன்னர் மலையரசன் உமா தேவியைத் தன் மகளாக அடைந்து எய்திய இன்பத்தை யொத்தது. சோழநாட்டுக் குடிமக்களும் தங்கள் மன்னன் அடைந்த செல்வத்தைத் தாங்களும் அடைந்தவர்களாக எண்ணிக் கொண்டாடினார்கள். பின்னர், சோழன் அரசாங்கத்திலுள்ள அமைச்சர், பண்டிதர், பெரியோர் முதலியவர்களோடு ஆலோசித்துத் தன் அருமை மகளுக்கு மங்கையர்க்கரசியென்று பெயரிட்டான்.

இறைவனருளாற் பிறந்த அந்தக் குழந்தை, கண்டார் யாவருங் களிப்புற்று மானுடக் குழந்தையோ தெய்வக் குழந்தையோவெனச் சந்தேகிக்கும்படி விளங்கியது. இயற்கை அழகுடைய அக் குழந்தையின் சிரித்த முகமும், குளிர்ந்த பார்வையும் பசித்தோர் முகவாட்டத்தையும் நீக்கி மலர்ச்சியைத் தந்தன. குழந்தை ஓராண்டிற்குள் யாவரையுங் கண்டு நகைத்தது; கவிழ்ந்தது; இருந்தது; அழகிய அரையிற் கட்டிய கிண்கிணியோசை கேட்கத் தவழ்ந்தது; எழுந்து இளநகை தோன்ற நின்றது; தளிர்போன்ற மெல்லிய பாதங்களிலே பூண்டுள்ள சதங்கை சத்தமிடத் தளர்நடையிட்டு நடந்தது; பவளவாய் மலர்ந்து தெள்ளமுதமென மழலைச் சொற்களைச் சொல்லியது. அரசன், தன் புதல்வியின் குதலை மொழிகளைக் கேட்டபோது, அடைந்த மகிழ்ச்சிக்கு அளவில்லை.

"குழலினி தியாழினி தென்பதம் மக்கள்
மழலைச்சொற் கேளா தவர்."

என்ற வள்ளுவர் வாக்குப்படி, மக்களுடைய மழலைச் சொற்களைக் கேட்டு அடையும் இன்பத்திற்குக் குழல், யாழ் முதலிய கருவிகளின் ஓசையாற் பெறும் இன்பம் தாழ்ந்த தென்னும் உண்மையை அரசன் அப்போது தான் உணர்ந்தான். குழந்தைகளின் சொற்களைக் கேட்டுக் குவியாத மனம் மற்றெதனாற் குவியும்? ஒன்றாலுங் குவியா தென்க. பிறகு குழந்தை, விளையாடும் பருவத்தை யடைந்ததும், பிற குழந்தைகளோடு சேர்ந்து சிறு வீடு கட்டியது ; சமையல் செய்தது ; தெய்வத்திரு உருவங்களுக்குத் தின்பண்டங்களைப் படைத்துத் திருவிழாக்கள் செய்தது ; இனிமையான பாடல்களைப் பாடி ஆடியது. இவை யாவும் மங்கையர்க்கரசியின் பெற்றோருக்கு மகிழ்ச்சியைத் தந்தன. அந் நகரத்துப் பெண்மணிகள் அரசன் அரண்மனைக்குச் சென்று, குழந்தையின் அருமைச் செயல்களைக் கண்டு மகிழ்ந்து, அழகிய ஆட்டக் கருவிகளையும் மணமுள்ள மலர்களையுந் தந்து, உச்சி முகந்து முத்தமிட்டுச் சென்றார்கள். இவ்விளையாட்டுக்கள் 'விளையும் பயிர் முளையிலே தெரியும்' என்ற முதுமொழிப்படி, அம்மையாருடைய பிற்காலச் செய்கைகளை முன்னரே விளக்கின.

## அரசி அருங்கலை கற்றல்

மங்கையர்க்கரசி நல்ல முத்துக்களாலாகிய ஆபரணங்களை அணிந்து, நலம் பொருந்திய ஆடைகளை உடுத்து நாளொரு மேனியும் பொழுதொரு வண்ணமுமாக வளர்ந்து வந்தாள். அம்மையாருக்கு ஐந்தாம் வயது தொடங்கியதும் அரசன் தன் புதல்விக்கு இருந்த

இயற்கை அறிவின் மிகுதியைக் கண்டு, அதைப் பல மடங்காகப் பெருக்கக்கருதிப் பெரியோர்களைக் கொண்டு வித்தியாப்பியாசஞ் செய்வித்தான்.

அறிவுடையோர் தங்கள் குழந்தைகளுக்குக் கல்வி புகட்டுவது அவர்களுடைய முதற்கடமையாகும். ஆனால், ஆண் மக்களைப்போல் பெண்மக்களுக்குக் கல்வி அவ்வளவு அவசியமன்றெனச் சிலர் கருதுகிறார்கள். யாவராயினுங் கடவுளை வணங்க வேண்டுவது அவர்கள் எடுத்த பிறவியின் பயனாகலின், அதற்கு ஏதுவான அறிவை வளர்ப்பதும் அவர்களுடைய கடமையாகும். அதுவுமன்றி, இவ்வுலக காரியங்களை நடத்துவதில் ஆண் பெண் ஆகிய இருபாலாரும் ஒருவருக்கு ஒருவர் துணையாகவே யிருக்கின்றார்கள். ஒரு கணவனும் அவனுடைய மனைவியும் இல்லற தருமத்தை நடத்தும்போது, கணவனுடைய குறைகளை மனைவியும், மனைவியின் குறைகளைக் கணவனும் நிரப்பக் காணலாம். கணவன் பொருளைத் தேடுகின்றான்; மனைவி அதனைப் போற்றி வீட்டுக் காரியங்களைத் தருமவழியிலே அழகாகவும் ஒழுங்காகவும் நடத்துகின்றாள்.

சைவப் பெரியாரா யிருந்த இளையான்குடிமாற நாயனாருடைய வரலாறு நன்கு கவனிக்கத் தக்கது. அவர் சிவனடியவர்களுக்கு உணவளிப்பதையே தம்முடைய விரதமாகக் கொண்டிருந்தார். அதனினுஞ் சிறந்த தருமம் வேறொன்று உண்டோ? ஒன்றுமில்லை. பணக்காரராயிருந்த அவர், மிகுந்த ஏழையாய பின்னரும் அத்தருமத்தை மாத்திரம் விடாமல் இயன்றவரை செய்துவந்தார். அப்போது, அவருடைய உறுதி நிலை

யை யறிந்த இறைவன், அந்நிலையை உலகத்தாருக்கு அறிவிக்கும் பொருட்டு, மழை பெய்துகொண்டிருந்த ஒரு நடு இராத்திரியில், பசியினால் களைப்படைந்துள்ள சிவனடியவரைப் போல் வந்தார். மாறனார், மழையில் நனைந்து வந்த அடியவரை உபசரித்து ஓரிடத்தில் அமரும்படிச்செய்து உள்ளேசென்றார்; அங்கே, பொருளில்லாமல்பட்டினியாயிருந்த மாறனாரும் அவர் மனைவியாரும் என்ன செய்வதென்று தோன்றாமல் திகைத்து நின்றார்கள். அப்போது மாறனாருடைய மனைவியாரே, வயலில் அன்று காலை விதைத்த நெல் முளையை வாரிக் கொண்டு வரும்படிச் செய்து, அதுகொண்டு உணவு சமைத்துத் தங்கள் விரதத்தை முடித்தார்கள். அந்த நேரத்தில் தக்கவாறு யுக்திகூறிய மனைவியார் இல்லையாயின் மாறனார் என்ன செய்திருப்பார்? இதனாலன்றோ "மனைக்கு விளக்கம் மடவாள்" "பாழே மடக்கொடி யில்லா மனை" "—விழைதக்க, மாண்ட மனையாளை இல்லாதான் இல்லகம், காண்டற் கரிய தோர் காடு" எனப் பெரியோர் வாக்கியங்கள் பல எழுந்தன.

இன்னும், பெண்கள் தங்களுடைய தாய் தந்தையருக்கும், சகோதர சகோதரிகளுக்கும், கணவனுக்கும், மாமன் மாமி முதலியோருக்கும், மக்களுக்கும், சுற்றத்தாருக்கும், பிறருக்கும் செய்யவேண்டிய கடமைகளை உய்த்துணர வேண்டும். ஆகலின், பெண் மக்களுங் கற்பது அவசியமேயாம். இல்லையாயின், அவர்கள் தங்கள் கடமைகளைச் சரியாகச் செய்ய முடியாமற் போமென்பது நிச்சயம். ஆனால், சில பெண்கள் கற்பதனாலேயே நல்ல

ஒழுக்கத்தினின்றுந் தவறுகிறார்க ளென்று சொல்லப் படுகிறது. அது, விளக்கிலேயே இருள் உண்டாகிற தென்பது போலிருக்கின்றது. அறிவுடையோர் அதனை ஒப்ப மாட்டார்கள். திருவள்ளுவதேவர்,

"விலங்கொடு மக்க ளனைய ரிலங்குநூல்
கற்றாரோ டேனை யவர்"

"கண்ணுடைய ரென்பவர் கற்றோர் முகத்திரண்டு
புண்ணுடையர் கல்லா தவர்"

என்று கூறிய பாடல்களிலே, கல்வி யில்லாதவர் மிரு கங்களுக்கு ஒப்பாவரென்றும், அவர்களுக்கு உள்ள கண்கள் புண்களே யென்றுங் கூறியுள்ளார்.

குஞ்சி யழகும் கொடுந்தானை கோட்டழகும்
மஞ்ச ளழகும் அழகல்ல—நெஞ்சத்து
நல்லம்யா மென்னும் நடுவு நிலைமையாற்
கல்வி யழகே அழகு"

என்ற நாலடி, கல்வி யில்லாத ஆண் பெண் ஆகிய இரு வகை மக்களுக்கும் உள்ள அழகும் அலங்காரங்களுஞ் சிறப்பாக மாட்டா வென்று கூறுகிறது. இன்னும், தமிழ்நாட்டுப் பெண்மணிகள் முன்னர்க் கல்லாதிருக்க வில்லை. ஔவையார், வெள்ளிவீதியார், காக்கைபாடினி யார் முதலிய பல பெருமாட்டிகள் பெரும் புலவர்களா யிருந்து, பல அருமையான நூல்களையும் இயற்றி யிருக் கின்றார்கள். மக்கள் இவைகளைச் சீர்தூக்கி நோக்காமல் பெண்மக்களுக்குக் கல்வி புகட்டா திருத்தல் மிகக் கொடிய செய்கையாம். நிற்க.

## அம்மையார் குணநலன்

மங்கையர்க்கரசி யம்மையார் கற்கத் தொடங்கிய சிறிது காலத்திற்குள் நீதி நூல்களையும், சமய நூல்களையும் விரைவாகக் கற்றுத் தேர்ந்தார்கள். அம்மையாருக்குக் கல்வி யறிவு வளர்ந்தது போலவே, பெண்களுக்கு இயற்கையாகவே உள்ள நாணம், அச்சம், மடம், பயிர்ப்பு என்னும் நான்கு குணங்களும் ஓங்கி வளர்ந்தன. இந்தக் காலத்தில் படித்த பெண்களுள் ஒரு சிலர் தங்களுக்குள்ள அந்த நான்கு குணங்களையும் இழந்து இருக்கின்றார்கள். நமது அம்மையாரோ தாம் கற்றதன் பயனாகவே அந் நற்குணங்களைப் பெரிதும் பெருக்கிக் கொண்டார்கள். அமைதியாக நடந்தல், மெல்லிய குரலோடு பேசுதல், அடக்கமாகவும் பொறுமையாகவு மிருத்தல் முதலிய குணங்கள் அம்மையாரை அழகு படுத்தின; அக் குணங்களைப் பெற்றோரும் மற்றோருங் கண்டு புகழ்ந்தார்கள். இன்னும், அரசியாருக்குத் தெய்வபக்தி மிகுதியா யிருந்தது; "ஆலயந் தொழுவது சாலவு நன்று" என்ற ஔவையாரின் அருள் வாக்குப்படி அரசியார் கோயிலுக்குச் சென்று, கடவுளை வழிபடும் வழக்கத்தையும் மேற்கொண்டிருந்தார்கள். மங்கையர்க்கரசி காலையில் எழுந்ததும் நீராடித் திருநீறு பூசிப் பூசைக்கு வேண்டிய பொருள்களை யெடுத்துக் கொண்டு, தோழியரோடுங் கோயிலுக்குச் சென்று, இறைவனை வணங்கி வந்ததன் பின்னரே, உணவருந்தி மற்றைக்காரியங்களைச் செய்வது வழக்கம். சிவனடியவர் எவரேனும் அரண்

மனைக்கு வந்தால், அம்மையார் பெற்றோர் உத்தரவு பெற்றுத் தாமே அவர்களுக்குப் பல உபசாரங்களையுஞ் செய்து உணவு படைப்பார்கள். சிவ பூசையினுஞ் சிவனடியவர் பூசை சிறந்த தென்பதை மங்கையர்க் கரசியார் உணர்ந்திருந்தார் போலும்! அம்மையார் இவ்வாறு வளர்ந்து வரும்போது, மங்கைப் பருவத்தை யடைந்து, அழகினுங் குணத்தினுந் தெய்வ பக்தியினுஞ் சிறந்து, பெண்ணரசி என யாவரும் போற்றுமாறு விளங்கினார்கள். பெற்றோரும் தம் புதல்விக்குத் தக்க தலைவனைத் தேடவேண்டு மென்னுங் கடமையை உணர்ந்து அது பற்றி முயற்சி செய்து வந்தார்கள்.

## அரசிக்குத்தக்க அரசனைத்தேடல்

சோழ மன்னன் மிகச் சிறப்பொடு வாழ்ந்து வரும்போது, பாண்டி நாட்டைக் கூன்பாண்டியன் என்னும் அரசன் ஆண்டு வந்தான். அவன் இளைஞனாகையின் தோள்வலிமை மிகுதியால், தமிழ் நாட்டிற் பெருமை பெற்று விளங்கும் மற்ற இரண்டு மன்னர்களாகிய சேர சோழர் மீது படை யெடுத்தான். சேரனும் சோழனும் அவனோடு எதிர் நிற்க இயலாமல் தோல்வி யடைந்தார்கள். பிறகு, வெற்றி பெற்ற கூன்பாண்டியன் சேர சோழ நாடுகளையுந் தன் ஒருகுடைக்கீழ் அரசு புரிந்தான். அப்போது சேர பூபதி அளவிலாப் பொருள்களையுஞ் சேனைகளையும் கொண்டுவந்து பாண்டியனுக்குக் காணிக்கையாகக் கொடுத்துத் தன்னுடைய நாட்டைப் பழமைபோலக் கைக்கொண்டான்; சோழனோ, கூன்பாண்டியன் அதுவரை மணம் புரிந்து

கொள்ளாமலிருந்தமையின் அவனைத் தனக்கு மருமகனாக்கிக் கொண்டு தன்னுடைய நாட்டைப் பெற எண்ணித் தன் கருத்தைத் தன்னுடைய மனைவி, மந்திரிமார் முதலிய யாவருக்கும் வெளியிட்டான்.

“ பெண்ணுதவுங் காலை பிதாவிரும்பும் வித்தையை
எண்ணில் தனம்விரும்பும் ஈன்றதாய—நண்ணிடையில்
கூறிய சுற்றங் குலம்விரும்புங் காதனது
பேரழகு கண்விரும்பும் பெண்.”

என்றபடி, பாண்டியன், செல்வம் குணம் கல்வி அழகு இவைகளில் மிகச் சிறந்தவனாய் நமது மங்கையர்க்கரசியாருக்குத் தக்க கணவனுமாய் விளங்கினமையின் யாவரும் சோழன் கருத்துக்கு இசைந்தார்கள். சோழன் எல்லோருடைய இணக்கத்தையும் பெற்றபோதிலும மங்கையர்க்கரசியாரின் சம்மதத்தையும பெறக் கருதி, அந்த அம்மையாரை அழைத்துத் தன் எண்ணத்தைத் தெரிவித்தான். அறிவிற் சிறந்த அரசியார் தன் அருமைப் பிதாவைப் பார்த்துத் “தங்கள் கருத்தின்படியாகுக” என்று கூறினார்கள். பின்னர், சோழ மன்னன் அரசாங்கத்திலுள்ள பெரியோர்களை யழைத்து, இது செய்தியைப் பாண்டியனுக்கு அறிவித்து மணம் பேசும்படி யனுப்பினான். அவர்கள் இந் நற்செய்தியைப் பாண்டியனுக்குச் சொல்லவும், அவன் அம்மையாரின் அரும் பெருங் குணங்களை முன்னரே கேள்வியுற்றிருந்தவனாகலின், “கும்பிடப்போன தெய்வங் குறுக்கே வந்தது” என எண்ணித் தான் மங்கையர்க்கரசியை மணந்து கொள்ள முற்றிலும் உடன்படுவதாகத் தெரிவித்தான். பாண்டியன் அனுமதியை அவர்கள் பெற்று

வந்ததும், அம்மையாருக்குத் திருமணம் நடத்த நாள் குறிப்பிடப்பட்டது.

## திருமணச் சிறப்பு

மந்திரிமார் திருமணநாளைக் குறித்து மண ஓலைகளைத் திசைதோறும் அனுப்பினார்கள்; மங்கையர்க்கரசியாருக்குத் திருமணமென்று நகரமெங்கும் பறையறைவித்து அதற்கு வேண்டியவைகளைச் சேகரிக்கலானார்கள். மண முரசைக் கேட்ட நகரத்து மக்களெல்லாரும் மகிழ்ச்சியுற்று மணவாழ்த்துக் கூறினார்கள். குடிமக்கள் திருமண நாளை எதிர்பார்த்துக்கொண்டே இருந்தமையின், சிலர் அம்மங்கலநாள் என்றென்றார். சிலர் அந்நாளைக் குறிப்பிட்டுக் கூறினார். சிலர் மங்கையர்க்கரசியாரின் விவாகரு சமீபித்ததனால் தானே நடக்குக தோள்கள் துடிந்தனவென்றார். இவ்வாறு மங்கையர்க்கரசியின் மணத்தைப் பற்றியே பேசிக்கொண்டிருந்த அவர்கள், திருமணநாள் நெருங்கியதும் ஒருங்குகூடித் தெருக்களெங்கும் பந்தரிட்டுப் பாளையுடைய கமுகு, சுவைக் கரும்பு, வாழை முதலியவைகளால் அழகு செய்து, தோரணங்கள் பலவற்றைத் தொங்க விட்டார்கள்; வீட்டுத் திண்ணைகளில் பல அழகிய பாவை விளக்குகளை வரிசைவரிசையாக நிறுத்தினார்கள்; தாங்களும் தங்களுடைய பழைய ஆடை அணிகலன்களை வெறுத்துப் புதியன தரித்தார்கள். அரண்மனையும் மிக அழகாக அலங்கரிக்கப்பெற்றது. மாப்பிள்ளையும் பெண்ணும் இருத்தற்குரிய மண்டபம் மங்களகரமாக அமைக்கப்பட்டது.

திருமணத் திருமுகத்தைக் கண்ட கொங்கர், சிங்களர், பல்லவர், சோனகர், சாளுவர், கருநடர், கலிங்கர், தெலுங்கர் முதலிய பன்னாட்டரசர்களும் விரைவில் வந்து சேர்ந்தார்கள். மதுரையை ஆளும் மன்னவனும் தன்னுடைய நால்வகைச் சேனைகளும் பரிசனங்களுஞ் சூழச் சோழனுடைய நகரத்தை நோக்கிப் புறப்பட்டான். அவன் சோழனுடைய வளநகரைச் சேர்ந்ததும், சோழனும், அவனுடைய அமைச்சரும், மற்றுமுள்ள பலநாட்டு அரசர்களும் அவனை எதிர் சென்று அழைத்தார்கள். கூன்பாண்டியன் பட்டணத்திற்குள் வரும் போது அவ்வூரார் யாவரும் தங்கட்குத் தோற்றிய வாறெல்லாம் பேசிக்கொண்டார்கள்: சிலர் மங்கையர்க்கரசியம்மையார் பாண்டியனையடைய என்ன தவஞ்செய்தார்களோவென்றார்; சிலர் பாண்டியன் மங்கையர்க்கரசியாரை மனைவியாகப் பெறுவதற்கு நோற்ற நோன்பு யாதோ வென்றார்; சிலர் அம்மையை அரசியாக அடைய மதுரை செய்த தவம் எதோவென்றார்; சிலர் இத்திருமணத்தைக் காண நாம் என்ன நல்வினை செய்தோமோ வென்றார்; சிலர் கன்னியின் அழகுக்கேற்ற கணவன் இப் பாண்டியனே என்றார். இவர்கள் இவ்வாறு சொல்லிக் கொண்டிட பாண்டியன் மீது மலர் மாரி பொழிந்தார்கள்; ஆலத்தியெடுத்தார்கள்; பிறகு எல்லோருமாக அரண்மனையை யடைந்து கலியாணமண்டபத்தி லிருந்தார்கள். அப்போது அங்கிருந்த வேதியர்கள் மந்திரத் தீ வளர்த்து, முழுமுதற்கடவுளாய சிவபரம்பொருளை வந்தித்து, மங்கலவாழ்த்து ஒலிக்க, மலர்மாரி பொழிய மணவினையை முடித்து வைத்தார்கள். அது காலை, மண

மக்கள் இருவரையும் ஒருங்கே கண்டவர்கள், "இவர்கள் இவ்வுலகிற்குப் பதியாய ஐயனும் இவ்வுலகையீன்ற அம்மையுமோ?" என்று கூறி வாழ்த்தினார்கள்.

இங்ஙனம் விதிமுறை வழுவாமல் மணவினை முடிந்ததும் அங்குவந்திருந்தோரெல்லோரும் சிலநாளிருந்து தங்கள் தங்களுடைய ஊருக்குப் புறப்பட்டுச் சென்றார்கள். சோழபூபதியும் தன் அருமைப் புதல்வியைப் பாண்டியனோடு மதுரை மாநகருக்கு அனுப்பவேண்டிய முயற்சிகளைச் செய்து, பாண்டியன் மனமும் தம் புதல்வியின் மனமும் மகிழும்படி அளவிறந்த பொருள்களை வரிசையாகக் கொடுத்தான். இன்னும், குற்றமற்ற குணத்தின் மேம்பட்டவரும், பல கலைகளிலும் வல்ல அறிவுடையவரும், சிவபெருமானிடத்து நீங்காத அன்புடையவருமாகிய குலச்சிறை யென்னும் மந்திரியாரையும் அனுப்பினான். பாண்டியனும் தம்முடைய சேனைகளோடும் பரிசனங்களோடும் மங்கையர்க்கரசியை அழைத்துக்கொண்டு மதுரைக்குச் சென்றான். மதுரையிலுள்ள மக்களெல்லோரும் தம்முடைய அரசனையும் அரசபத்தினியையும் எதிரேசென்று வரவேற்று வாழ்த்துக் கூறினார்கள். அவர்கள் அம்மையாரைக் கண்டதும், நம அரசனுக்கு நக்கவள் இவள்; இவள் அருந்ததியோ, அநசூயையோ, கலைமகளோ, திருமகளோ அல்லது மலைமகளோ என்று புகழ்ந்து போற்றினார்கள். நிற்க.

## அரசியின் சமய நிலை

மன்னர் மன்னனாகிய கூன் பாண்டியனும், மங்கையர்க்கரசியாகிய பாண்டிமா தேவியும் பூவும் மணமும

போலும், உடலும் நிழலும் போலும் வாழ்ந்து வந்தனர். சோழபூபதி அனுப்பிய அமைச்சர் குலச்சிறையாரிடத்தில் கல்வி கேள்வி அறிவு இவைகள் மிக்கிருந்தமையைக் கண்ட கூன் பாண்டியன், தமக்கு மந்திரிமார் பலர் இருந்த போதிலும் அவரை முதன் மந்திரியாராக்கிக்கொண்டு அரசு செய்து வந்தான். குலச்சிறையாரும் அம்மன்னன் ஆட்சிச் சக்கரம் போன்று அவனுக்கு உறுதியானவைகளைச் செய்தும், உலக நடக்கையறிந்து ஒழுகியும், குடிகளைக் காத்தும் வந்தார். பாண்டியன் அரசு செலுத்தி வரும்போது சைவசமய விரோதிகளாகிய பௌத்தர்களும் சமணர்களும் தங்கள் கொள்கைகளைத் தமிழ் மக்களுக்குப் போதித்து, அவர்களைத் தங்கள் சமயங்களிற் சேர்க்கப் பெருமுயற்சி செய்து வந்தார்கள். அவர்கள் புத்தர், வர்த்தமான மஹாவீரர் என்பவர்களைப் பின்பற்றியவர்கள். முதலில் புத்தரும், வர்த்தமான மஹாவீரரும் வேதநெறி தழுவியே இருந்தார்கள். ஆனால், அவர்கள் அந்த வைதிக நூல்களில் நம்பிக்கை இல்லாமையினாலோ, அவற்றிற் சொல்லப்பட்டுள்ள பேரின்ப நிலையைத் தம் எண்ணப்படி குறித்த காலத்திற்குள் எளிதாக அடையக் கூடவில்லை என்பதனாலோ, புதிய மதங்களை உண்டாக்கி அவைகளுக்குத் தாங்கள் தலைவர்களாக இருக்க வேண்டுமென்னும் ஆசையினாலோ தங்கள் தங்கள் சொந்த அறிவைக் கொண்டே மதங்களை ஏற்படுத்தினார்கள்.

சமணர்கள் சமயவாதம் செய்வதில் வல்லவர்களாக இருந்தனர். ஆனால், அவர்கள் சைவர்களை மயக்கிச் சம

னார்களாக்கி வந்தார்கள். மங்கையர்க்கரசி அம்மையாருடைய மனமும் அவர்கள் சொற்களால் சமண சமயமே உயர்வுடையதெனக் கருதி, உண்மை நிலைபெற்றதும் பழமையாக உள்ளதுமாகிய சைவ சமயத்தினின்றும் நீங்கினள். அந்தோ! ஒவ்வொருவரும் தாங்கள் செய்துள்ள வினைக்குத் தக்கவாறன்றோ மதங்களைத் தழுவுகின்றார்கள்! தீவினையை யாரே விலக்குவார்? இன்னும், ஒரு மதத்தின் உயர்வும் தாழ்வும் பெரும்பாலும் அரசனைப்பற்றியே இருந்ததலால், பாண்டியன் சென்றவழியே அவனுடைய குடிகளுஞ் சென்றார்கள். ஆகவின், அவர்கள் வேதத்தில் சொல்லப்பட்டுள்ள திருநீறு உருத்திராக்கம் முதலியனவற்றை அணிந்துகொள்ளாமலும், சிவாலயங்கட்குச் செல்லாமலும் இருக்க நேர்ந்தது. அவர்களுள் துறவிகளானோர், சமண நூல்களில் கூறியபடி மயிர்பறித்த தலையோடு அருகனுடைய குடையாகிய அடையாளத்தை மார்பு, தோள், நெற்றி முதலிய இடங்களில் எழுதிக்கொண்டு, பாயை ஆடையாக உடுத்து, தடுக்கு ஒன்றைக் கக்கத்தில் இடுக்கிக் கையிலே மயிற்பீலிக் கற்றையையும் காண்டல் நீரையுந் தாங்கி, 'கடவுள் உண்டு என்றால் உண்டு; இல்லை என்றால் இல்லை' யென்று பொருள் படும்படி 'அத்தி' 'நாத்தி' என்று சொல்லித் திரியலானார்கள். சமணக் கோயில்களும் சமண முனிவர்கள் வசிக்கும் இடங்களுமே மதுரையெங்கும் நிறைந்தன.

கூன்பாண்டியன் சைவ சமயத்தைக் கைவிட்ட போதிலும் சோழமன்னன் பெற்ற செல்வப் புத்திரியாகிய மங்கையர்க்கரசியாரும், மேன்மை பொருந்திய

மந்திரியாகிய குலச்சிறையாரும் சைவசமய உண்மைகளைச் செவ்வையாகக் கற்றுணர்ந்திருந்தமையால் அவர்கள் சமண வலையில் அகப்படவில்லை. அவர்கள் சிவபெருமானுடைய திருவடிகளில் உறுதியான அன்புடையவர்களாக இருந்தார்கள். ஆனால், அவர்கள், சைவர்களாக இருப்பதைப் பாண்டியன் அறிந்தால் கோபிப்பானென்று அஞ்சி, அவனுக்குத் தங்கள் நிலைமையைத் தெரிவித்துக் கொள்ளாமல் இருந்து வந்தனர். அவர்கள் சிவசின்னங்களை யாவருமறிய அணியவில்லை யாகலின் பாண்டியனும் அந்தச் செய்தியை அறியவில்லை. பாண்டியன் சிவபெருமானை வழிபடாது புறச் சமயத்தைத் தழுவி இருப்பினும்,

> "அந்தமிலான் முதற்றெய்வம் பதியிரண்டாந் தெய்வமென
> அவரைப் போற்றிச்
> சிந்தைதனில் நினைந்தொழுகுஞ் சேயிழை பூவையர்கடெல்லாந்
> தெய்வ மாகும்"

என்றபடி, மங்கையர்க்கரசியார் தம்முடைய கணவனைப் போற்றி வந்ததோடு, பாண்டியதேசத்திற்குவந்த தீமையைப் பலமுறையும் எண்ணி வருந்தியும், பாண்டியனை மறுபடியுஞ் சைவசமயத்திற்குத் திருப்பித் தரும்படிச் சிவபெருமானை இடைவிடாது சிந்தித்தும் வந்தனர்.

## அம்மையார் சைவரைச் சந்தித்தல்.

ஒருநாள் பாண்டிமா தேவியார் சுந்தரேசப்பெருமானுடைய கோயிலுக்குச் சென்று பெருமானைப் பூசித்துப போற்றி, 'சமணர்களை ஒழியவேண்டும்; சைவப் பயிர் தழைக்க வேண்டும்' என்று மிகவும் வேண்டிக்

கொண்டு திரும்பினர். அப்போது திருநீறும் உருத்தி ராக்கமும் அணிந்த வேதியர் ஒருவர் ஆலயத்திற்குள் புகுந்தார். அம்மையார், சைவர் ஒருவரை அங்கே கண் டதும் மிகவும் மகிழ்ந்து, அவரை அன்போடு அருகே அழைத்து, அவருடைய ஊர்முதலிய வரலாறுகளை விசாரித்தனர். அந்த அந்தணர் தாம் இருப்பது சோழ நாடென்றும், சிவ தலயாத்திரையின் நிமித்தம் புறப் பட்டதாகவுஞ் சொன்னார். அது கேட்ட அம்மையார் தாம் பிறந்த நாடாகிய சோழநாட்டின் நலத்தையும், அங்கு சைவ சமயம் உள்ள நிலைமையையும் உரைக்கும் படி கேட்டார்கள். அதற்கு அப் பெரியார், 'யாவும் நல மே' என்று கூறி, அப்போது சைவசமய ஆசிரியர்க ளாகிய திருஞான சம்பந்த சுவாமிகளும், திருநாவுக்கரசு சுவாமிகளும் சிவபெருமானுடைய திருவருளால் நிகழ்த் திய அற்புதங்களையும் எடுத்து விளக்கினார்.

## ஆளுடைய பிள்ளையாரை அழைத்தல்

மெய்ச் சமயமாகிய சைவ சமயத்தை வளர்க்கும் பொருட்டு சிவபாத விருதயர் செய்த தவப்பயனாய்த் தோன்றிய திருஞான சம்பந்தப் பெருந்தகையின் வர லாற்றைக் கேட்டுப் பேரானந்தமுற்ற அம்மையார், சமண சமயத்தினின்றும் சைவ சமயத்திற்கு வந்த நாவுக்கரசருடைய சரித்தத்தைக் கேட்டதும், அதினும் பலமடங்கு அதிக மகிழ்ச்சியை அடைந்தார்கள். இதற் குள் குலச்சிறையாரும் அங்கு வந்து அரசியாரைப் பணிந்து நின்றார். மந்திரியாரைக் கண்டதும், அம்மை யார் அந்தணர் கூறியவைகளை அவருக்குக் கூறித் திரு

மறைக் காட்டிலுள்ள திருஞானசம்பந்த சுவாமிகளுக்குத் திருமுகம் எழுதி, உடனே அவரை மதுரைக்கு அழைக்கும்படி கட்டளை யிட்டார்கள். அறிவிலே சிறந்த அமைச்சரும் அங்ஙிருந்தவாறே,

"வெங்குரு வேந்த ரடிபணிந் தடியேன்
குலச்சிறை விளம்புவிண் ணப்பம்
இங்கெழுந் தருளிச் சமணிருள் ளொதுக்கி
யெம்மிறை மகற்கு நீறளித்துப்
பொங்கிரும் பணைசூழ் தென்றமிழ் நாட்டைப்
புநிசா தனவழி நிறுத்தி
யெங்களைக் காக்க - - -
- - - "

என்று திருமுகமொன்று எழுதி அனுப்பினர். திருமுகங்கொண்டு திருமறைக் காட்டிற்குச் சென்ற ஏவலாளர்கள் மறைக்காட்டை யடைந்து அருட் செல்வராய ஆளுடைய பிள்ளையாரைக் கண்டு வணங்கினர்கள். சுவாமிகள் அவர்களை ஆசீர்வதித்து இருக்கச்செய்து, அவர்கள் வந்த வரலாற்றை வினவினர். ஏவலாளர், "சுவாமி! நாங்கள் பாண்டிய மன்னனுடைய வேலைக்காரர்கள். மன்னனுடைய மனைவியாரும், மந்திரி குலச்சிறையாரும் எங்களை இங்கு அனுப்பினர்கள். அவர்கள் அனுப்பிய இத்திருமுகத்தால் யாவும் தெரியவரும்" என்று கூறித் தாங்கள் கொண்டுபோன கடிதத்தைக் கொடுத்தார்கள். சுவாமிகள் அந்தக் கடிதத்தைப் படித்து உணர்ந்ததும், மன்னன் கூன்பாண்டியன் நிலைமையையும், மற்றோர் நிலைமையையும் பற்றி ஏவலாளரைக் கேட்டருளினர். ஏவலாளர்கள் பாண்டியனும் அவனுடைய

நாடும் சமணர்களால் நிலைமாறியிருக்குந் தன்மையை நன்கு விண்ணப்பஞ் செய்து சுவாமிகளை மதுரைக்கு எழுந்தருளும்படி இரந்து வேண்டினார்கள். ஆங்குச் சூழ்ந்து நின்ற சிவனடியவர்களும் இச்செய்தி கேட்டு, உடனே எழுந்து, சுவாமிகளைத் தொழுது, " சுவாமி! தேவரீர் பாண்டிநாட்டிற்கு எழுந்தருளி, நமது நாதன் சிவபெருமானை நண்ணாத சமணர்களை வென்று, அரசனுக்குத் திருநீறு சாற்றி, அந்த நாட்டிலே சிவமணங் கமழும் வண்ணம் திருவுளங்கொண்டருளல் வேண்டும்" என்று வேண்டிப் போற்றினார்கள். ஆளுடைய பிள்ளையாரும் அதற்கு உடன்பட்டு, உடனே எழுந்து, தம்மோடிருந்த திருநாவுக்கரசு சுவாமிகளோடு கோயிலுக்குச் சென்று, சிவபெருமானை வணங்கி வெளியே வந்து, பாண்டிநாட்டுச் சைவ சிகாமணிகளின் விண்ணப்பத்தை நாவுக்கரசருக்குக் கூறினார்.

நாவுக்கரையனார் சமணர்களுடைய வஞ்சனைகளை உணர்ந்தவராகலின், சீகாழிப் பெருமானை நோக்கி, " சுவாமி! சமணர்கள் இரக்கம் என்பதொரு சிறிதும் இல்லாதவர்கள்; பாதகத்துக்கு அஞ்சாதவர்கள். அவர்களோடு பலநாள் பழகிய எனக்கு அவர்கள் செய்த தீத்தொழில்கள் பல; தேவரீர் அங்குப் போதல் தகாது" என்றார். வாகீச முனிவர் கூறியவைகளைக் கேட்ட சம்பந்தர், " பாண்டிநாட்டிலுள்ள அந்தத் தீயர்களையொழித்துச் சைவ சமயத்தை வளர்க்காது பிறிதொன்றுஞ் செய்யேன்; மேலும் அளவுபடாத மகிமையையுடைய திருநீற்றைப் போற்றிவரும் மங்கையர்க்கரசி அம்மையார், குலச்சிறையார் என்னும் இருவரை

யும் அங்குச் சென்று காணக் கருதினேன்" என்று உரைத்தார்.

நாவுக்கரசர் கருணைவள்ளலாகலின், தமக்குச் சமணர் செய்துள்ள தீயசெயல்களை யெல்லாம் நினைந்து, அவர்கள் அவற்றை ஆளுடைய பிள்ளையாருக்குஞ் செய்தால் என்ன செய்வதெனப் பயந்து, தாமே சென்று அவர்களை அழித்து வருவதாகப் பிள்ளையாரிடந் தெரிவித்துக் கொண்டார். அதற்கும் காழிவள்ளல் இணங்கவில்லை. நாவுக்கரையனார் காழிப் பெருமானிடத்தில் வைத்த பேரன்பினால் இறைவனுடைய அருளின் வல்லமையை ஒரு சிறிது மறந்தனரோ? அல்லது பெருமான் குழந்தையாகலின் அவர் திருமேனி, நீற்றறையில் விடுதல், விஷத்தை ஊட்டல், கொடிய யானையை ஏவி மிதிக்கச் செய்தல், கல்லுடன் கட்டிக் கடலில் விடுதல் முதலிய பல துன்பங்களுக்கு உட்படுதல் கூடாதென இவ்வாறெல்லாந் தடை செய்தனரோ? அறியோம். பின்னரும், நாவுக்கரசர் சிவனடியவருக்கு நல்லநாள் தீயநாள் என்பதில்லை என்று அறிந்தும், அதனை அறியாதவரைப்போன்று சம்பந்தப் பெருந்தகையை நோக்கி, "தங்களுக்குக் கோள்கள் தீயனவாகலின் தற்போது போதல் தகாது" என்றார். அதனைக் கேட்ட ஐயன் "சமணர் செய்த வேதனைகளினின்றும் பிழைத்த தாங்கள் இறைவனுடைய திருவருளைப் பெறாதவரைப் போன்று பேசுவதென்? நாம் வழிபடுவது சிவபெருமானையேயாயின் நமக்கு யாதொரு பழுதும் வாராது" என்று கூறிச் சிவபெருமானைச் சிந்தித்து, நாள், கோள், நோய், இயக்கர், பூதப்பைசாசங்கள், கொடிய பிராணி

கள் ஆகிய இவைகளால் வருந் துன்பங்கள் யாவும் திரு வருள் வழியொழுகும் அடியவரை ஒன்றுஞ் செய்யா ; அவை அவர்களுக்கு நன்மையை விளைப்பனவே என் னுங் கருத்துக்கள் அடங்கிய,

"வேயுறுதோளிபங்கன்விடமுண்ட
கண்டன்மிகநல்லவீணைதடவி
மாசறுதிங்கள்கங்கைமுடி
மேலணிந்தென்னுளமேபுகுந்தவதனால்
ஞாயிறுதிங்கள்செவ்வாய்புதன்
வியாழம்வெள்ளிசனிபாம்பிரண்டுமுடனே
ஆசறுநல்லநல்லஅவைநல்ல
நல்லஅடியாரவர்க்குமிகவே"

என்றற் றொடக்கத்துப் பதிகத்தை யருளினார். அத் திருவருட் பதிகத்தைக் கேட்ட அப்பர் சுவாமிகள் சீகாழித் தலைவருடைய உறுதியை வியந்து பாராட்டி னார் ; அவருக்கு யாதொரு துன்பமும் வாராதென எண்ணினார் ; ஆனால் அவரைப் பிரிய மனமில்லாதவ ராய்த் தாமும் உடன் செல்ல எழுந்தார். அப்போதும் திருஞான சம்பந்தர் திருநாவுக்கரசரைத் தடுத்தார். சுவாமிகள் தடுத்தது சமணசமயத்தை மறுத்து ஒழிக்க இருவர் வேண்டா, ஒருவரே போதுமென் றெண்ணியே போலும் !

சம்பந்தப் பெருமான் பிறகு, வேதநூல் விருத்தி யடையவும், அதன் சாரமான சைவக் கொள்கை விளங் கவும் மீண்டும் திருக்கோயிலுள்ளே சென்று சிவபெரு மானைப் பாடித்துதித்து, திருநாவுக்கரசு சுவாமிக ளிடமும் விடைபெற்று, அடியார் கூட்டம் புடை

சூழ முத்துச் சிவிகையில் எழுந்தருளினார். மறைத் தலைவர் மதுரையை நோக்கிச் செல்லும் போது அடியார் கூட்டத்தினர் நான்கு பக்கங்களிலுஞ் சூழ்ந்து துதித்துச் சென்றனர். மங்கல வாத்தியங்கள் ஒலித் தன. சங்கம், காளம், தாரை முதலிய சின்னங்கள் முழங்கின. வைதிக சமயக்கொடிகள் பலவும் அசைந்து சென்றன. ஞானவள்ளல் இவ்வாறு போகும்போது வழியிலுள்ள தலங்கள் பலவற்றையும் வணங்கிக் கொண்டே சென்று, நீண்டு உயர்ந்த மலைகளையும், காடு களையும், வளம் நிறைந்த நாடுகளையுங் கடந்து பாண்டி நாட்டைச் சமீபிப்பவரானார்.

## நங்கை நற்குறிகளைக் காணல்

அப்போது பாண்டிநாட்டிலுள்ள பெரிய மலை களில் வசிக்கும் சமண முனிவர்கள் "யானைவரும் பின்னே மணி ஓசைவரும் முன்னே" என்னும் வாக் கியத்திற்கு இணங்கப் பின்னர் அனுபவிக்கப் போகின் றவைகளை முன்னரே கனவு மூலமாகப் பின் வருமாறு ஓர் இரவு கண்டார்கள்: "சமண முனிவர் வசிக்கும் இடங்கள், அவர்களுடைய கோயில்கள், அவர்கள் வழி படுகின்ற அசோகமரங்கள் ஆகிய இவைகளின்மேல் கூகை, ஆந்தை, கழுகு முதலிய தீய பறவைக் கூட் டங்கள் போர் செய்து கதறின; அவர்கள் கைகளி லுள்ள மயிற்பீலிக் கற்றைகள், தடுக்குகள், அரையி லுள்ள பாய்கள் முதலிய நழுவி வீழ்ந்தன; அவர்களு டைய கால்கள் தடுமாறின; இடது கண்கள் துடித்தன; சமண முனிவர்களும், தவப் பெண்களும் பொறுமை

முதலிய நற்குணங்களை விட்டுக் கோபம் முதலிய தீய குணங்களை யுடையவராய் ஒருவருக்கு ஒருவர் தீங்கு விளைத்துக் கொண்டனர் ; சிவனடியரெல்லாம் தங்கள் தவவேடம் பிரகாசிக்கத் திருவாலவாயிற் கூடினர் ; பாண்டியன் ஒரு கொடிய பெருநெருப்பில் விழுந்து அழுந்தி மறுபடியும் எழுந்தான் . இளமை பொருந்திய விடைச்சிறு கன்று ஒன்று வந்து சமணர் சபையைக் கலைத்தது ; அதனால் எல்லோரும் சிதறியோடிக் கிளைக ளில்லாத மரங்களிலேறி நின்றார்கள்.'' இக்கனவு சம ணர் எல்லோருக்குமே தோற்றமாயின. ஆகலின், அவர்கள் விழித்தெழுந்ததும், மருண்ட மனத்தினராய் என்ன செய்வதென்றறியாது அத் தீக்குறிகளை யெல் லாம் ஒருவரோடொருவர் சொல்லிக் கொண்டார்கள் ; எல்லோரும் ஒருங்கு கூடிக் கூன்பாண்டியனிடத்துஞ் சென்று கூறினார்கள்; அந்தக் கனவு நனவாவது திண்ண மென்று எண்ணிச் சிந்தை நைந்தவர்களாய், உணவுங் கொள்ளாமல் வருந்திக் கொண்டிருந்தார்கள்.

சமணர்களுடைய நிலைமை இவ்வாறிருக்க, நமது அன்னை மங்கையர்க்கரசியாரும், மந்திரி குலச்சிறை நாய னாரும் நற்குறிகள் பலவற்றை மேன்மேலுங் கண்டார் கள். ஆளுடைய பிள்ளையார் ஆலவாயைச் சமீபித்து விட்டாரென்னுஞ் செய்தியும் அம்மையாருக்கு எட்டி யது. அரசியார் நற்செய்தி கொண்டுவந்தவர்களுக்குப் பல பொருள்களைப் பரிசாகக் கொடுத்தனுப்பிவிட்டுத் திருஞானசம்பந்த சுவாமிகளுடைய தரிசனத்தை எதிர் பார்த்திருந்தார்கள்.

## ஞானசம்பந்தர் நல்வரவு

சுவாமிகள் வருவதைக் கேட்ட மந்திரியார் அரசியார் முன்வந்து வணங்கி நின்றார். உடனே, பாண்டிமாதேவியார் திருஞானசம்பந்த சுவாமிகளை எதிர்கொண்டழைக்கும்படி அவருக்குக் கட்டளையிட்டார்கள். குலச்சிறையார் அவ்வாறே அந்தக் கட்டளையைச் சிரமேற்கொண்டு, மதுரைமாநகருக்கு வெளியே சென்று ஆவலோடு எதிர்நோக்கி நின்றார். இதற்குள் நிறைந்த புகழையுடையவரும் தவமுதல்வருமாகிய சம்பந்தர் மதுராபுரியைச் சமீபித்தார். அவருடைய வருகைத் தோற்றம் கங்காநதி பெருக்கெடுத்து வருவது போன்றிருந்தது; அவருடைய முத்துச் சிவிகையைச் சூழ்ந்து வந்த அடியவர் திருமேனிகளில் ஒளி பொருந்தி விளங்கிய விபூதியின் வெண்ணிறம் பரிசுத்த கங்கையினிடத்தே மிதந்து செல்லும் பனிக் கட்டியைப் போன்றிருந்தது. அந்தக் கூட்டத்தின் நடுவே கோடி சூரியப் பிரகாசத்தோடு தோன்றிய சுவாமிகள் வெண்மையான பனிமலையின் மீதிட்ட ஞானமணி விளக்கினை யொத்தார். சம்பந்தர் கூட்டத்தின் முன்னர் ஒலித்துச் சென்ற முத்துச் சின்னங்கள் யாவும் திருஞான சம்பந்தர் வந்தார்; பாலறுவாயர் வந்தார்; முத்தமிழ் விரகர் வந்தார்; பரசமய கோளரியாய ஆளுடைய பிள்ளையார் வந்தார் என்று பன்னிப் பன்னி ஊதுவதுபோன்றிருந்தன.

மங்கையர்க்கரசியார் கட்டளைப்படிச் சுவாமிகளை எதிர்கொண்டழைக்கக் காத்திருந்த குலச்சிறையார் சிவ

னடியவர் கூட்டத்தைக் கண்ட மாத்திரத்திலேயே எதிர் நோக்கி வணங்கி அளப்பிலாக் களிப்பில் ஆழ்ந்தார். பின்னர், அவர் சுவாமிகள் சிவிகை அருகே வந்ததும் அவர் திருமுன்னே விழுந்து பணிந்தார். கீழே விழுந்து வணங்கியவர் எழுந்திராது கிடந்தமையின், அதுகண்ட அடியவர் அவருடைய நிலைமையைப் பிள்ளையாருக்கு அறிவித்தார்கள். அதுகேட்ட சுவாமிகள் சிவிகையினின்றும் இறங்கி விரைவாக வந்து தமது அருமைத் திருக்கரங்களால் குலச்சிறையாரைத் தொட்டு எழுப்பினார்கள். மந்திரியார் எழுந்து மறுபடியும் சுவாமிகளை வணங்கி நின்றார். அப்போது சண்பை வேந்தர் அவரை நோக்கி, "அன்ப! சிவபெருமானுடைய அருளின் துணையால் பாண்டிமாதேவியாரும் தாங்களும் நலமா?" என்று கேட்டருளினார். அதற்கு அம் மந்திரியார், "சுவாமிகள் இங்கு எழுந்தருளியதனாலேயே அம்மையாரும் அடிமையும் எக்காலத்தும் நலமுடையோம்; சமண சமயத்தினின்றும் நீங்கி வெண்ணீற்றின் ஒளியால் விளக்கமடையும் மேன்மையையும் அடியேங்கள் பெற்றோம்; இப்போது அரசியார் சுவாமிகளை எதிர்கொண்டழைத்து வருமாறு அடிமைக்குக் கட்டளையிட்டிருக்கின்றார்கள்" என்று கூறினார்.

சிவஞானப் பிள்ளையார், உயர்ந்த மதில் சூழ்ந்த மதுரைமாநகரைப் பார்த்து "இறைவனுடைய கோயில் எந்தப் பக்கத்திலுள்ளது?" என்று வினவியருளினார். உடனே குலச்சிறையார் சுந்தரேசப் பெருமானுடைய கோயில் இருக்குந் திசையைக் குறிப்பிட்டு, "சுவாமி அதோ தெரிகின்ற கோபுரமே நம்பெருமான் கோயில்"

என்றார். சுவாமிகள் அக்கோபுரத்தைக் கண்டதும் எட்டுறுப்பும் நிலத்திற்படிய வணங்கி எழுந்தார். அவ்வாறு எழுந்த சுவாமிகள் பாண்டிமாதேவியைப் பாராதிருந்தும், அவ்வம்மையாரையும் அமைச்சரையுஞ் சிறப்பித்து,

> "மங்கையர்க்கரசி வளவர்கோன்பாவை
> வரிவளைக்கை மடமானி
> பங்கயச்செல்வி பாண்டிமாதேவி
> பணிசெய்து நாடொறும் பரவப்
> பொங்கழலுருவன் பூதநாயகனால்
> வேதமும் பொருள்களு மருளி
> அங்கயற்கண்ணி தன்னொடுமமர்ந்த
> ஆலவாயாவது மிதுவே."

> "வெற்றவேயடியா ரடிமிசைவீழும்
> விருப்பினன் வெள்ளைநீ றணியுங்
> கொற்றவன்தனக்கு மந்திரியாய
> குலச்சிறை குலாவிநின் றேத்தும்
> ஒற்றைவெள்விடையன் உம்பரார்தலைவன்
> உலகினில் இயற்கையை ஒழிந்திட்டு
> அற்றவர்க்கற்றசிவ னுறைகின்ற
> ஆலவாயாவது மிதுவே."

என்று தொடங்கி ஒரு பதிகத்தை அருளிச் செய்தார். ஆ! மங்கையர்க்கரசி அம்மையாரும், குலச்சிறைநாயனாரும் செய்த தவமே தவம். சாமானிய நல்லிசைப் புலவரால் பாடப்பெறுவோரே செத்தும் சாகாதவரும், புகழுடம்போடு என்றும் இருப்பவருமாவரெனின், அருள் வள்ளல்களால் பாடப் பெற்றோர்

பெருமையை என்னென்பது? பிறகு சம்பந்தப் பெருமான் அங்கிருந்தும் சுந்தரேசப் பெருமானுடைய ஆலயத்திற்குச் சென்று திருக்கோபுரத்தை வணங்கி, இறைவனைத் தரிசிக்கவேண்டு மென்னும் பெரு விருப்போடு உள்ளே புகுந்து வலம் வந்தார். அச் சமயத்தே ஆளுடைய பிள்ளையாரை வரவேற்கும் பொருட்டுக் காத்திருந்த அரசியார் பெருமானைக் கண்ணாரக் காணும் பாக்கியத்தைப் பெற்றும், அவர் முன்பாகச் சென்று வணங்கி, அவருடைய திருவாக்கினைக் கேட்கத் தாமதித்தார்கள். ஏனெனின், சுவாமிகள் கடவுளைத் தரிசிக்கப் பெரு விருப்போடு சென்றமையின் அவரைத் தடை செய்தல் கூடாதென்று எண்ணி யிருந்தார்கள்.

ஆளுடைய பிள்ளையார் ஆண்டவனைக் கண்டு கண்களாலடையும் பயன் இதுவேயென்று எண்ணி, தேகம் புளகிப்ப, கண்களில் நீர் ஊற்றெடுத்துப் பெருக, துதிகள் பலவுஞ் செய்து வணங்கி வெளியே வந்தார். அப்போது சுவாமிகள் வருகையை எதிர்பார்த்து, இரு கைகளையுந் தலைமேற் குவித்து, ஓரிடத்திலே ஒதுங்கி நின்றிருந்த பாண்டிமாதேவியார் உடனே அவரெதிரிற் சென்று வணங்கினார்கள். அருகே இருந்த அமைச்சர் அம்மையாரைச் சுட்டி, "சுவாமி! இவர்கள் தாம் சோழ மன்னருடைய செல்வப் புதல்வியாராகிய பாண்டிமாதேவியார்" என்று சொன்னார். அதுகேட்ட ஆளுடைய பிள்ளையார் மிக மகிழ்ந்து அம்மையாரை எழும்படியாகக் கூறி யருளினார். எழுந்த அரசி தாம் நெடுநாளாகக்கொண்ட கருத்து நிறைவேறியதென எண்ணி, கண்களில் நீர் சொரியவும், வாய் குழறவும் தம்முடைய

மெல்லிய குரலினால், "அடியாள் செய்த தவப் பய னாகவே சுவாமிகளைத் தரிசிக்க நேர்ந்தது" என்று கூறி னார். அதற்குப் பிள்ளையார், "வேதத்தின உச்சியில் விளங்கும் பொருள் பரமசிவமென்று உணர்ந்த பெருந் தகையீர்! புறச் சமயிகளின் நடுவிலிருந்தும சைவ நெறித் திருத் தொண்டிலேயே வாழும் உம்மை யாம் காண வந்தோம்" என்று அருளிச் செய்தார். மங்கை யர்க்கரசி அந்த அமுத வாக்கினைக்கேட்டு மறுபடியும் தொழுது நிற்க, குலச்சிறை சமணரால் பாண்டி நாட் டிற்கு நேர்ந்த துன்பங்களை யெல்லாம் சுவாமிகளிடம் விண்ணப்பித்தார். பிறகு சுவாமிகள, மதுரைச் சைவர் கள் இருவருக்கும் தேறுதல் கூறி, "இறைவன் அருளால் உங்கள் நல்லெண்ணம நிறைவேறும்" என்று உறுதி உரைத்து, அம்மையாரிடம் விடை பெற்றுக்கொண்டு குலச்சிறையார் காட்டிய திரு மடத்திலே அடியவர் கூட்டத்தோடும் இனிதாக அமர்ந்தருளினார். சூரிய னும் மேல் திசையை அடைந்தான். மங்கையர்க்கரசி யார் சுவாமிகளுக்கு வேண்டிய உபசாரங்களை யெல்லாஞ் செய்யும்படி அமைச்சருக்கு ஆணைதந்து அரண்மனையை அடைந்தார்கள்.

### பிள்ளையார் வரவைப் பாண்டியன் அறிதல்

சீகாழிப் பிள்ளையார் அடியார் கூட்டத்தோடும் வந்திருப்பதைக் கண்டவர்களும் கேட்டவர்களுமாகிய சமணர்க ளெல்லோரும் அப்போதே கூட்டங் கூட்ட மாய்க் கூடினார்கள்; தாங்கள் முன்னமே கண்ட கனவு கள் மெய்யாய்விடுமோ என்னும் அச்சம் மேலிட்டமை

யால் யாவரும் அந்தக் கனவுகளைப்பற்றிப் பேசிக்கொண்டார்கள்; பிறகு ஞானசம்பந்த சுவாமிகளை நகரத்தினின்றும் நீக்குவதற்காகச் சூழ்ச்சிகள் பல செய்யத் துணிந்தார்கள். இன்னும், அச்சமயத்தில் திருஞான சம்பந்த சுவாமிகள் எழுந்தருளியிருந்த திருமடத்திலே அடியார்கள் ஓதிய தோத்திர ஒலி மதுரைமாநகரெங்கும் மணத்தது; ஆகலின் அவ்வோசையைக் கேட்ட சமணர்கள் சிறிதும் பொறுதவர்களாய் அன்று இரவே சுவாமிகளுக்குத் தீங்கு செய்யக் கருதினார்கள். ஆனால், தங்கள் எண்ணத்தை நிறைவேற்ற அரசன் அநுமதியைப் பெறுவது அவசியமென்றெண்ணி, அப்போதே எல்லோருமாகப் பாண்டியன் அரண்மனைக்குச் சென்று தங்கள் வரவை அறிவித்தார்கள். அரசனும் அம் முனிவர்களை அழைத்து, இருக்கை கொடுத்து இருக்கச் செய்து, அவர்கள் வாடிய வதனத்தோடு வந்த காரணத்தை வினவ, அவர்களுக்குள் பின்வரும் சம்பாஷணை நிகழ்ந்தது:—

பாண்டியன்:—அடிகளே! தாங்கள் இந்த இரவில் இங்கு வர நேர்ந்தது யாதோ?

சமணர்கள்:—அரசே! நம் நாட்டில் தகுதியல்லாத ஒரு தீங்கு வந்தது; அதனைத் தங்களுக்குத் தெரிவிக்கவே இங்கு வந்தோம்.

பாண்:—அப்படியாயின் அஃது யாதென்பதைக் கூறியருளல் வேண்டும்.

சம:—இன்று சைவ வேதியர்கள் மதுரைக்கு வந்தமையால் யாங்கள் கண்டு முட்டாயினோம்.

பாண்:—அந்தோ! யானுங் கேட்டு முட்டாயினேன். அச் சைவர்கள் யாவர்? எங்கிருந்து வந்தார்கள்? ஏன் வந்தார்கள்? யாவுந் தெரியச் சொல்ல வேண்டும்.

சம:—ஐய! சோழ நாட்டிலுள்ள சீகாழியில் சிவனிடத்தில் ஞானம் பெற்றவனென்னும் ஒரு சிறுவன் சிவிகையிலேறித் தங் கூட்டத்தினரோடு வந்திருக்கின்றான். அவன் நமக்கும் நம்முடைய சமயத்திற்கும் தீங்கு செய்ய வந்திருப்பதாகத் தெரிகிறது.

பாண்:—அப்படியா! இப்போது நாம் அதற்கு என்ன செய்யவேண்டும்?

சம:—அந்தச் சிறுவனை நாமாக வலிந்து துரத்த வேண்டாம். நம்முடைய மந்திரத்தினாலே அவன் தங்கியுள்ள மடத்தில் தீயை உண்டாக்கலாம். அப்போது அவன் அதற்குப் பயந்து போய்விடுவானென்று எண்ணுகின்றோம்.

பாண்:—ஓ! செய்யத்தக்கது அதுவானால் அவ்வாறே செய்யுங்கள்.

சம:—அப்படியே செய்கின்றோம்; போய் வருகிறோம்.

## அரசன் துயரத்தை அரசி களைதல்

அரசன் சமணமுனிவர்களுக்கு விடைகொடுத்து அனுப்பிவிட்டுத் துன்பத்தோடு அந்தப்புரத்தை அடைந்து, மங்கையர்க்கரசியாரிடத்தில் வழக்கம்போல் இனிமையாகப் பேசாமல், மௌனமாக வீற்றிருந்தான்.

அப்போது தேவியார் அரசனை நோக்கி, "தங் களுக்கு நேர்ந்தது யாது? அடிமையால் ஏதேனும் பிழை நேர்ந்ததுண்டோ? மனதிலுள்ளதைச் சொல் லியருளல் வேண்டும்" என்று வேண்டினார்கள். உடனே அரசன், மனைவியின் ஆறுமைக்கு இரங்கி, "மங் கள குணகரமே! பெண்கள் நாயகமே! என் வாழ்க் கைத் துணையே! என் கண்ணே! உன்னால் ஒரு குற் றமும் நேரவில்லை. சீகாழியிலே பிறந்த ஒருவன் சங்க ரனுக்கு அடிமையாய், அவனருளால் சமண முனிவரை வாதில் வென்று, சமண சமயத்திற்குத் தீங்கிழைக்க வந்திருக்கின்றானாம். இன்னும், அவனோடு சைவர்கள் பலர் வந்திருக்கின்றார்களாம். நீறுபூசிய அவர்களை நம் அடிகள் கண்டு முட்டாயினார். நான் அச்செய்தி யைக் கேட்டு முட்டாயினேன்" என்றான்.

பாண்டியன் கூறியவைகளைக் கேட்ட பத்தினியார் தம்முடைய உள்ளத்திலே, "அரசர், ஆண்டவனுக்கு அடிமைப்பட்ட அறிவுடைய பெரியோர்களை மரியாதை யில்லாமல் குறிப்பிடுகின்றாரே; அவர்களுடைய தரிச னத்தால் நம்முடைய துன்பங்களெல்லாம் ஒழிவதாயி ருக்க, அதற்கு மாறாக அவர்களைக் கண்டதால் சமணர் கள் முட்டாயினார்களென்றும், அவர்கள் வந்த செய்தி யைச் சொல்லக் கேட்டதனால் அம் முட்டு தம்மைக் கிட்டியதென்றும் அரசர் கூறுவது அநியாயமாக இருக் கின்றதே" என்று எண்ணி, யாது சொல்லுவதென்று தோன்றாமல் கலக்கமடைந்து மிகவும் வருந்தினார்கள்; ஆனால் அவ்வருத்தத்தை மன்னன் அறியுமாறு வெளிப் படுத்திக் கொள்ளவில்லை. பிறகு, அம்மையார் ஒருவா

றுகத் தெளிவடைந்து, தம்முடைய அபிப்பிராயத்தை அச்சமயத்தில் அரசனுக்கு அறிவிக்கவேண்டுமென்று தீர்மானித்து, "ஐய, அவர்கள கடவுளைக் குறித்து வாது புரிந்தால் அவ்வாதில் வென்றவர் பக்கம் நாம சேர்ந்து, அவர் சமயத்தைத் தழுவிக் கொள்வதே தகுதி என்று எண்ணுகிறேன். தாஙகள் அதற்காக வருந்தாமலிருக்க வேண்டுகிறேன்" என்று கூறியருளினார்கள்.

குலச்சிறையார், திருஞானசம்பந்த சுவாமிகளுக்கும் அடியவர்களுக்கும் வேண்டிய பணிவிடைகளை யெல்லாஞ் செய்துவிட்டு, அரண்மனைக்கு வந்து அதனை அம்மையாருக்கு விண்ணப்பஞ் செய்தார். குலச்சிறையார் கூறியவைகளைக்கேட்ட அரசியார், அரசனிடம நிகழ்ந்தவைகளை யெல்லாம அவருக்கு எடுத்துச் சொன்னார்கள். அப்போது அமைச்சர் மஙகையர்க்கரசியாரை நோக்கி, "அம்மணி! இப்போது நாம நம பெருமானுடைய அன்பரை வணஙகப பெற்றோம. சமணர்கள வஞ்சனை செய்வதில் வல்லவர், ஆதலால், அவர்கள் இனி என்ன செய்வார்களோ அறியோம" என்றார். உடனே, தேவியார், 'சமணர்களால் சம்பந்த சுவாமிகளுக்கு வந்தனும் தீங்கு நேருமாயின் நாம உயிர்விடுவதே துணிவு" என்று கூறிக் குலச்சிறையாருக்கு விடைகொடுத் தனுப்பினார்கள்.

## திருமடத்தில் தீயிடல்

திருஞானசம்பந்தர் எழுந்தருளியுள்ள திருமடத் தில் தீ இடுவதற்காகப் பாண்டியனுடைய அனுமதி யையும் பெற்றுச் சென்ற சமண முனிவர்கள், அன்று

இரவிலேயே தங்கள் சமய நூல்களிலே கூறியுள்ள மந்திரங்களைக் கொண்டு தீ இட முயற்சி செய்தார்கள். அந்தோ! இதுதானே சமணமுனிவர்கள் செய்யுந்தவம்! தவமல்லாத காரியங்களைச் செய்வதே அவர்களுக்குத் தவம் போலும்! ஆயினும் அவர்கள் செய்த முயற்சிகள் ஒன்றும் பயன்படவில்லை. உலக காரணரான சிவபெருமானுடைய திருமந்திரத்தை உண்மையான அன்போடு உச்சரிக்கும் அடியவர்களிருக்கும் திசைகளினும் மற்ற மந்திரங்களின் செயலானது வந்து சேருமோ? தங்கள் மந்திரங்கள் பலியாமையைக் கண்ட வஞ்ச நெஞ்சத்தையுடைய சமணர்கள் மனந்தளர்ந்து தாங்கள் செய்தது தகாதென்று உணர்ந்தார்கள்; அதனால் தங்களுக்கு என்னவருமோ எனவும் எண்ணி நடுங்கினார்கள். பின்னர் அதனோடு நில்லாது மேலே செய்வது என்னவென்று ஆலோசிக்க எல்லாரும் ஒன்றாய்க் கூடினார்கள்.

அப்போது அந்தக் கூட்டத்திலிருந்த ஒருவர், 'நம்முடைய மந்திரங்கள் பலியாமைக்குக் காரணமென்ன?' என்று கேட்டார். ஒருவர், 'நாம் அம் மந்திரங்களைத் தீய வழியில் உபயோகித்ததனாலேதான் அவை பலியாமற்போயின' என்றார். ஒருவர், 'மடத்திலுள்ள சைவச் சிறுவனுடைய தெய்வவலிமையால் பலிக்கவில்லையோ?' என்றார்; ஒருவர், 'நாம் ஏன் இத்தொழிலுக்கு உட்படுதல் வேண்டும்?' என்றார்; ஒருவர், 'சிறுவனை ஒழிக்காவிடில் நாமும் நமது மதமும் நாசமே' என்றார்; ஒருவர், 'நாம் அம்மடத்தில் தீ இடுவதாக அரசனுக்குச் சொல்லி விடவேண்டாமோ' என்றார். ஒருவர், 'நமமுடைய மந்திரங்கள் பலியாமையை அரசன் அறிந்தால், நம்மையும்,

நம் சமயத்தையும் ஒரு பொருளாக மதிக்கமாட்டான்; நம்முடைய விருத்தியையும் ஒடுக்குவான்' என்றார். இவ்வாறாகப் பேசிய அவர்கள், கடைசியாய், சிவனடியவரை ஒழித்தே தீரவேண்டுமென்றும், அதன் பொருட்டுக் கையினாலேயே அம்மடத்தில் தீ வைக்க வேண்டுமென்றுந் தீர்மானித்து அவ்வாறே செய்துவிட்டார்கள்.

திருமடத்தில் தீ பற்றத்தொடங்கியது. அதுகண்ட சிவனடியவர்கள் உடனே நெருப்பை அணைத்துவிட்டு அச்செய்தியைத் திருஞானசம்பந்தருக்கு அறிவித்தார்கள். சுவாமிகள் அச் செய்தியைக் கேட்டுத் திடுக்கிட்டு, "அந்தோ! சிவபெருமானுடைய அடியவர்கள் தங்கியுள்ள திருமடத்தில் தீ வைக்குஞ் செயலுஞ் செய்யத்தக்கதாமா! அஃது என் பொருட்டுச் செய்ததாயினும் இனி அடியவர்களுக்கு அத்தீங்கு நேரலாமா!" என்று கூறி, அவ்வாறு செய்தோர் யாவரென வினவினார். பிறகு மடத்தில நெருப்பிட்டவர் சமணரே யென்பதை அறிந்து அவர்கள் பாண்டியனுடைய அநுமதியைப் பெற்றே செய்திருப்பார்கள் என்றும் உணர்ந்தார்; ஆகலின் அந்த தீ பாண்டியனைப் பற்றும் பொருட்டு,

> "செய்யனே திருஆலவாய் மேவிய
> ஐயனே அஞ்சலென்றருள் செய்யெனை
> பொய்யராம் அமணர் கொளுவுஞ்சுடர்
> பையவே சென்று பாண்டியற் காகவே"

என்னுந் தொடக்கத்துத் திருப்பதிகத்தை அருளிச் செய்தார். அப்போதே ஆண்டவன் திருவருளால் சுரம் பாண்டியனைச் சுரநோயாய் பற்றியது. இவ்வாறு

பழிக்குப பழி செய்தல் பெரியோர்க்கு அழகாகுமா என்று சிலர் வினவலாம். தமக்கு யாவரேனும் தீங்கு விளைத்தால் சுவாமிகள் அதனைப் பொருட் படுத்தி இருக்கமாட்டாரென்பது உண்மை. மடத்திலே பற்றிய தீயை அணைக்காமலிருந்தால் சுவாமிகளோடு அந்த மடத்தில் தங்கியிருந்த சிவனடியவர் பலரும் வருந்தியிருப்பார்கள்; ஆகலின் பெருமான் அதனைப் பொறுக்கவில்லை. பெரியோர்கள், தாங்கள் துன்பத் தில் இடர்ப்பட்டாலும் தங்களை அடைந்தவர்களுக்குத் தீங்கு நேர்ந்தால் அதனை ஒருபோதும் சகிக்கமாட்டார்க ளன்றோ: ஸ்ரீமத-ஸ்காந்த மஹாபுராண மென்னும் முதல்வன் புராணத்துச் சம்பவகாண்டத்து சக-ஆம் அத்தியாயத்தில். —

"உலகில் எம்மைச் சரண மடைந்தோர்க்கு அச் சம் யாது? இச் சகத்தே எம்முடைய அடியார்க்குப் பிணியும் உண்டோ? மனிதப் பதடியாயுள்ள ஒருவன் அறிவீனத்தால் எம் அடியவரைப் பகைப்பானாயின் அவன் எம்மையே பகைத்தவனாவான்; எமக்கு அபரா தஞ் செய்தவனது செய்கையை யாம் மன்னிப்போம்; எம் அடியாரைப் பகைத்த துராத்துமாவின் செய்கை யை ஒருபோதும் மன்னிக்கமாட்டோம். இந்திரனால் ஆதரிக்கப்படினும் அவனைக் கண்டனஞ் செய்து விடு வோம்."

என்று முழுமுதற் பரம்பொருளாகிய முருகப் பெருமானே மொழிந்துள்ள கட்டுரைகளைக் கவனிக்க வேண்டும். இன்னும், திருஞானசம்பந்த சுவாமிகள்

கோபங்காரணமாகப் பாண்டியனுக்குத் தீங்கு செய்ய வில்லையென்று தெரிய வருகின்றது. சுவாமிகள் கோபித்திருந்தால் சமணர்கள் கொளுத்திய சுடர் பாண்டியனை முழு வேகத்தோடு சென்று பற்ற வேண்டுமென்று கூறியிருப்பார்கள். அவ்வாறன்றி, சம்பந்தப் பெருந்தகை கருணைவள்ளலாகலின், அச்சுடர் "பையவே சென்று பாண்டியற்காகவே" என்று அருளிச் செய்தார்கள். அவ்வாறு கூறியது, சமணர்களுடைய பொய்யுரையை மேற்கொண்டு செங்கோல் முறைமை தவறி நடத்தல் நன்று அன்று என்பதைப் பாண்டியனுக்கு அறிவுறுத்தவும், மங்கையர்க்கரசி அம்மையாருடைய மங்கல நாணைப் பாதுகாத்துச் சைவ சமயத்தை நிலை நிறுத்தவுமேயாம். சிவபெருமானுடைய திருவருளே திருநாவுக்கரசு சுவாமிகளைச் சூலைநோயாக வருத்தியது. இப்போது பாண்டியனைச் சுரநோயாகப் பற்றியதும் அத் திருவருளேயாம். ஆகலினாலேதான் அந்நோய் காரணமாகவே பாண்டியன் சுவாமிகளிடத்தில் திருநீறு பெறும் பாக்கியத்தையும், அதன் மேற் சிவநெறி பற்றும் செல்வத்தையும் பெற்றான்.

## வேந்தனை வெப்புநோய் பற்றல்

சம்பந்தப் பெருமான் எழுந்தருளியுள்ள திருமடத்தில் சமணர்கள் தீ இட்டார்களென்னும் செய்தி குலச்சிறையாருக்கு அப்போதே எட்டியது. அவர் மிகவும் வருந்தி, அந்த இரவிலேயே அரசியாருக்கு அச்செய்தியை ஏவலாளர் மூலமாக அறிவித்துவிட்டுத் தாம் திருமடத்திற்கு ஓடினார். அதுகேட்ட அம்மை

யாரோ, தம் உயிரை விடுவதைவிட மேற் செய்யத் தக்கது ஒன்றுமில்லை என்று எண்ணி மனங்கலங்கி னார்கள்; சுவாமிகள் நிலைமை என்ன வாயிற்றோ? அவர் கள் திருமேனிக்கு என்ன நேர்ந்ததோ? என்று பயந் தார்கள்; நெஞ்சம் பதைபதைக்க ஒன்றுந் தோன்றா மல் நின்றார்கள்; பிறகு, மடத்தில் நடைபெற்ற செயல் களை விசாரித்தறிய விரும்பினார்கள். இதற்குள் சூரிய னும் உதயமானான். மடத்திற்குச் சென்ற குலச்சிறை யார் சம்பந்த சுவாமிகளுக்கும் அவருடைய அடியவர் களுக்கும் யாதொரு தீங்கும் நேரவில்லை யென்பதை அறிந்து வந்தார். அப்போதுதான் பாண்டிமாதேவி யார் ஒருவாறு தெளிந்து பின் யாது நிகழுமோவெனச் சிந்தித்திருந்தார்கள். இவ்வாறு அம்மையார் சிந்தித் திருக்கும்போது பாண்டியன் சுரநோயால் வருந்துகின் றானென்னுஞ் செய்தி எட்டியது. உடனே, மங்கை யர்க்கரசியார் இருதலைக் கொள்ளி எறும்புபோல் மனம் ஊசலாடப் பதைபதைத்து மிகவிரைவாக அரசனிருக் கும் இடத்திற்குச் சென்றார். மந்திரியாரும் பாண்டிமா தேவியைப் பின் தொடர்ந்தார்.

அரசனைப் பற்றிய சுரநோய் உலர்ந்த விறகைப் பற்றி எரிக்கும் கொடிய தீயையே ஒத்திருந்தது; அவருடைய பக்கத்தில் வந்து நின்றவர்களும் அந்த வெப்புநோயினால் உண்டாகிய அனலுக்கு ஆற்றாது அகன்று சென்றார்கள். மன்னன் அறிவிழந்து, உணர்வு கெட்டுப் பேசவும் முடியாத நிலைமையிலிருந்தான். அர சனுடைய நிலைமையைக் கண்ட அரசியும் அமைச்சரும் தளர்வடைந்து அரண்மனை வைத்தியர்களை யெல்லாம்

அழைத்தார்கள். அவர்கள் வந்து மருந்துவ நூல்களிலே சொல்லியுள்ள மருந்துகள் பலவற்றைக் கொடுத்தும் அந் நோய் சிறிதும் தணியவில்லை. அது தோண்டப்படுகின்ற மணற்கேணியிலே நீர் அதிகரித்துக் கொண்டே செல்லுவதுபோல் அதிகரித்துக் கொண்டே சென்றது.

பாண்டியன் நிலைமையைக் கேட்ட சமண முனிவர்களும் அங்கு ஓடிவந்தார்கள். மருத்துவம் பயன்படாமல் போனதைக் கண்ட அச்சமணர்கள், அரசனுக்கு வந்த நோயின் வலிமையையும் அதன் வரலாற்றையும் அறியாமல், தங்கள் தேவனாகிய அருகனுடைய நாமங்களைச் சொல்லிக் கைகளிலுள்ள மயிற்பீலிக் கற்றைகளால் பாண்டியனுடைய தேகத்தைத் தடவினார்கள். அப்போது அந்தப் பீலிக் கற்றைகள் கருகித் தீப்பொறியைச் சிதற விட்டன. உடனே சமணர்கள் நடுக்கங் கொண்டு தங்கள் கைகளிலிருந்த கமண்டல நீரை அள்ளித்தெளித்தார்கள். அந்த நீரும் அக்கினியிலே சொரிந்த நெய்யை ஒத்திருந்தது. அப்போது பாண்டியன் சமண முனிவர்களை நோக்கி, " நீங்கள் இங்கு நில்லாது போய் விடுங்கள்." என்று கோபித்துக் கூவினான். அதுகேட்ட அம்முனிவர்கள், தாங்கள் முன்னிரவு செய்த தீய செயலின் பயனே அரசனைச் சுரநோயாகப் பற்றி இருக்குமோவென்று எண்ணித் திகைத்து ஒரு பக்கத்தில் நின்றார்கள்.

மங்கையர்க்கரசியார் மன்னனுக்கு வந்த நோயைக் கண்டு பயந்து, அமைச்சர் பெருமானை நோக்கி, " ஐய !

இச்சமணர்கள் நேற்றிரவு நமது சம்பந்த சுவாமிகளா தங்கியுள்ள திருமடத்தில் தீ இட்ட பாதகமே இறைவ னருளால் இவ்வாறு மூண்டது போலும். பெண்கள செய்த பாவம் புருடரைச் சேருவதாகச் சொல்லப்படு கிறதுபோல், குடிகள் செய்த பாவம் கோனையன்றோ சாரும்" என்றார்கள். அமைச்சர் நம் அம்மையாரை வணங்கி, "அம்மணி! ஆம்; யானும் அவ்வாறே எண் ணினேன்; சமணரால் இந்நோய் நீரப்பெறுது பின் னும் அதிகரிக்கும்; நமது பெருமான் வந்தால் இஃது எளிதில் நீரும்" என்று கூறினர். அம்மையார் நம் அதற்கு இசைந்தார்கள். உடனே, சிறிதுந் தாமதஞ் செய்யாது, இருவரும் பாண்டியன் பக்கம் செல்ல, அமைச்சர் அரசரை நோக்கி, "அரசர் பெருமானே! சமணர்கள், நேற்றிரவு நமது நகரத்திற்கு வந்த சிவன டியவர் ஒருவருக்குத் தீங்கு செய்ய எண்ணி, அவர் எழுந்தருளியுள்ள மடத்தில் நெருப்பிட்டார்கள். சிறி தும் பொருந்தாத அச்செய்கை தங்களுடைய அரசில் நடை பெற்றதனால், அதன் பயனே தங்களை வெப்பு நோயாய்ப் பற்றியிருக்கலாமென்று எண்ணுகிறோம்; ஆகவின், இந் நோய் சமணரால் நீராது; வளரும். திருஞானசம்பந்த சுவாமிகள் இங்கு வந்தால், அவரு டைய பார்வையால் இச்சுர நோய் மாத்திர மன்றித் தங்கள் பிறவி நோயும் அறும்" என்று சொன்னர். திருஞானசம்பந்தருடைய பெயரைக் கேட்ட அள விலே நோய் சிறிது நீங்கப்பெற்ற பாண்டியன், ஒதுங்கி இருந்த சமண முனிவர்களை அழைத்து, "என்னுடைய நோயை நீக்குவோர் பக்கமே நான் சேருவேன்," என்

றும், மனைவியாரையும் மந்திரியாரையும் நோக்கி, " நீங்கள் அப்பெரியாரை அழைத்து வாருங்கள்," என்றும் மெல்லிய குரலில் கூறினன். அது கேட்ட அவ்விருவரும் கரையை உடைத்துச் செல்லும் பெரிய வெள்ளத்தைப்போல் அடக்க முடியாத ஆனந்தத்தை அடைந்தார்கள்.

## அரசி சம்பந்தரை அழைத்தல்

அம்மையார், தம் கணவனைப்பற்றிய சுரநோய் எப்போது தீருமென்னும் கவலையைப் பெரிதுங்கொண்டிருந்தமையால், பெண் மக்கள் பலர் தம்மைச் சூழ்ந்து வர இரத்தினச் சிவிகை ஒன்றிலேறிச் சைவ முதல்வராய சம்பந்தர் இருக்கும் இடத்தை நோக்கிச் சென்றார். மந்திரியார் மாட மாளிகைகளும் கூட கோபுரங்களும் நிறைந்த அழகிய ஆலவாயென்னும் மதுரையம்பதியெங்கும் நன்கு அலங்கரிக்கும்படி ஏவுதல் செய்துவிட்டுத் தேவியாருக்கு முன்னதாகவே குதிரைமீது விரைந்து சென்று மடத்திற்கு வெளியே காத்திருந்தார். அம்மையார் திருமடத்தை அடைந்ததும் அமைச்சர், தங்கள் வரவை ஆளுடைய பிள்ளையாருக்கு விண்ணப்பஞ் செய்யுமாறு அடியவர்களை வேண்டினர். அடியவர்கள் அவ்வாறே விண்ணப்பித்தார்கள். சீகாழித் தலைவர், " அவர்களை இங்கே அழையுங்கள் " என்றருளிச் செய்தார். அடியவர்களும் அவ்வாறே அமைச்சரையும் அம்மையாரையும் அழைக்க, இருவரும் உள்ளே சென்றார்கள். அங்கே அரசியார் பிரகாசத்திலே பூரணசந்திரனையொத்த ஆளுடைய பிள்ளையாரைக் கண் களிக்கக்

கண்டு, அவருடைய திருவடிகளில் வீழ்ந்து வணங்கினார்கள்; சமணர்கள் செய்த அபராதத்தை நினைந்து மனந் தளர்ந்தவர்களாய்ச் சுவாமிகளுடைய திருவடிகளை விடாது பற்றிக்கொண்டு இருந்தார்கள். பிள்ளையாரும் அம்மையாரைப் பார்த்து, "அம்மணி! எழுந்திருங்கள். தங்களுக்கு நேர்ந்த துன்பம் யாது?" என்று கேட்டருளினார். அதற்கு அமைச்சர், "சுவாமி! தேவரீருக்குத் தீங்குசெய்ய எண்ணிய சமணர்கள், இரவு இவ்விடத்திலே செய்த வஞ்சகச் செயலைக்கேட்டு அம்மையார் மிகவும் வருந்தினார்கள். அவர்களுடைய கொடிய செய்கை சுவாமிகளை ஒன்றுஞ் செய்யவில்லையென்பது அறிந்து அவ் வருத்தத்தினின்றும் நீங்கினார்கள். இப்போது சமணர்களுடைய தீச்செயலே எங்கள் மன்னனைச் சுரநோயாகப் பற்றி இருக்கின்றது. அந்த நோய் எவ்வகைப்பட்ட மருந்துகளாலுந் தீரவில்லை. சமணர்களுடைய மந்திர தந்திரங்களும் அந்நோயை நீக்கவில்லை. ஆகலின், அரசனுடைய கட்டளைப்படியே சுவாமிகளை அழைக்க வந்தோம். சுவாமிகள் எழுந்தருளி அரசனுடைய நோய் தீருமாறு அருள்புரிந்தால் யாங்களும் உய்வோம்; எங்கள் நாடுஞ் சைவ நாடாய்த் திகழும்." என்று மிக்க பணிவோடு விண்ணப்பஞ் செய்துகொண்டார். அதனைக்கேட்ட சுவாமிகள், "அன்புடையீர்! அஞ்சவேண்டாம். அவ்வாறே செய்வோம். ஆவதும் அழிவதும் எல்லாம் சிவன் செயலாகலின், அவர் திருவுள்ளக் குறிப்பை அறிவோம்; எழுந்திரும்." என்று கூறிப் புறப்பட்டார்.

## சம்பந்தர் ஈசனருள்பெற்று எழுந்தருளல்

ஆளுடைய பிள்ளையார் அவர்களை அழைத்துக் கொண்டு, சுந்தரேசருடைய கோயிலுக்குச் சென்று, பெருமானை நோக்கி, "திருவாலவாயில் எழுந்தருளியுள்ள பெருமானே! முன்பு திருப்பாற்கடலில் தோன்றிய ஆலகால விஷத்தை அமுதெனன உண்டருளினீர். அது கண்டு அஞ்சிய தேவர்களுக்கு அமுதத்தைக் கொடுத் தருளினீர். மார்க்கண்டேயர் பொருட்டு இயமதருமனை உதைத்தீர். இவ்வாறு அடியேனுக்கு, இவ்வுலகம் நினை புகழும்படி தீங்கின்றி செய்ய வேண்டும். ஆகலின், வைதிக மார்க்கத்தில் நின்று தேவரீரை வழிபட்டு உய்யாது வஞ்ச நெஞ்சங்கொண்டு உழலும் சமணரை வாதுசெய்யத் திருவுள்ளமோ" என்று கேட்டு,

> " காட்டு மாவது உரித்துரி போர்த்துடல்
> நாட்டமூன் றுடையாயுரை செய்வனான்
> வேட்டுவேள்வி செயாவமண் கையரை
> யோட்டிவாது செயத்திரு வுள்ளமே "

என்னுந் தொடக்கத்துத் திருப் பதிகத்தையும்,

> " வேதவேள்வியை நிந்தனை செய்துழல்
> ஆதமில்லி அமணொடு தேரரை
> வாதில்வென்றழிக் கத்திரு வுள்ளமே
> பாதிமாதுடன் ஆய பரமனே
> ஞாலநின்புகழே மிக வேண்டுந்தென்
> ஆலவாயி லுறையும் எம ஆதியே "

என்னுந் தொடக்கத்துத் திருப்பதிகத்தையும் பாடியருளி, இறைவன் அருளைப்பெற்று, மிக மகிழ்ச்சி

யோடு அடியார் புடைசூழப் பாண்டியனுடைய அரண் மனையை நோக்கிச் சென்றார். பாண்டிமா தேவியார் திருஞான சம்பந்தப் பெருமானுடைய திருக்கூட்டத்தின் பின்னே செல்ல, அமைச்சர் குலச்சிறை நாயனார் சுவாமிகளுக்கு முன்னதாக விரைந்து சென்று, அவருடைய வருகையைப் பாண்டியனுக்கு அறிவித்தார். மன்னனுந் தம் பக்கத்தில் செவ்விய ஓர் இருக்கையை அமைக்கும்படி கட்டளையிட்டு மௌனமாக இருந்தான்.

சமண முனிவர்கள், முன்னர் திருஞானசம்பந்த சுவாமிகளுடைய திருமடத்தில் தீ வைப்பதற்காகப் பிரயோகஞ் செய்த தங்களுடைய மந்திரங்கள் பலியாமற் போயினமையையும், பாண்டியனுடைய சுர நோயை நீக்கத் தங்களால் இயலாமல் இருக்குந் தன்மையையும் எண்ணாமல் அரசனுக்குச் சமீபத்திற் சென்று, “ஐயனே! நமது சமயத்தை நிலைபெறச் செய்யும் வண்ணம் இப்படியோ? தாங்கள் அரசைவ சிறுவரை அழைத்துவிட்டீர்கள். ஆயினும், நமது சமயத்தை நிலைநிறுத்த வேண்டுமென்னும் எண்ணம் தங்களுக்கு இருப்பின் தங்களுடைய நோயை அச்சிறுவரோடு நாங்களுந் தீர்க்குமாறு கட்டளையிடவேண்டும். இவ் வெப்புநோய் அவராலேயே தீர்ந்தபோதிலும் நாங்களுந் தீர்த்ததாகச் சொல்லவேண்டும்” என்று கேட்டுக்கொண்டார்கள். இதுகாறும் சமணர்களுடைய சொற்களுக்குக் கட்டுப்பட்டிருந்த பாண்டியன், இப்போது அவர்கள் கூறியவைகளுக்கு உடன்படாமல், “நான் நடுநிலைமை தவறி நடக்கமாட்டேன். உங்கள் சமய உண்மையைக் காணுங்காலம் இதுவே. ஆகலின், இருதிறத்தவருந் தீருங்கள்” என்றான்.

அதுகேட்ட சமணர்கள் மனத் தடுமாற்ற மடைந்து, ஒன்றுந் தோன்றாதவர்களாய் ஒருபுறம் ஒதுங்கி நின்றார்கள். இதற்குள், திருஞானசம்பந்த சுவாமிகளுடைய வருகையை அறிவிக்கும் சின்னங்களின் ஒலியானது அரசனுடைய செவிகளிலும், அங்கிருந்த சமணர்களுடைய செவிகளிலும் புகுந்தது. சுவாமிகளும் அடியவர் புடைசூழப் பாண்டியன் கோயில் (அரண்மனை) வாயிலை அடைந்து, சிவிகையினின்றும் இழிந்து, இருள் நீக்கவந்த சூரியனைப்போல் உள்ளே புகுந்தருளினார்.

## அரசன் ஆளுடைய பிள்ளையாரை உபசரித்தலும் அமணர் நிலையும்

அரசன் ஆளுடைய பிள்ளையாரைக் கண்டதும், கைகளைச் சிரசுக்குமேலே குவித்துவணங்கி, தனக்கு அருகே இடப்பட்டிருந்த பொற்பீடத்தைச் சுட்டிக்காட்ட, சுவாமிகளும் அதன்மீது எழுந்தருளினார். பின் மங்கையர்க்கரசியார் வந்து சுவாமிகளுடைய திருவடிகளில் விழுந்து வணங்கி, எழுந்து, ஒருபுறம் ஒதுங்கி நின்றார்கள். திருஞானசம்பந்தருடைய திருநாமத்தை முன்பு கேட்ட மாத்திரத்திலேயே தன்னுடைய உணர்ச்சியையும் பேசும்வல்லமையையும் பெற்றிருந்த மன்னன், அவரை நேரே தரிசித்த பின்னர் நோய் சிறிது நீங்கப் பெற்றுச் சுவாமிகளை நோக்கி விருப்பத்தோடும் பார்த்து, "தேவரீருடைய திருத்தலம் யாது" என்று வினவினான். சுவாமிகளும் தமதூர் சீகாழி என்று கூறும் பொருட்டு அதன் பன்னிரண்டு பெயர்களையும் வைத்து,

"பிரமனூர்வேணுபுரம்புகலிவெங்குருப்பெருநீர்த்தோணி
புரமன்னுபூந்தராய்பொன்னஞ்சிரபுரம்புறவஞ்சண்பை
அரன்மன்னுதண்காழிகொச்சைவயமுள்ளிட்டங்காதியாய
பிரமனூர்பன்னிரண்டாய்நின்றதிருக்கழுமலநாம்பரவுமூரே"

என்னுந் தொடக்கத்துப் பதிகத்தை அருளிச் செய்தார். அப்போது, அங்கு நிகழ்ந்தவைகளைப் பார்த்திருந்த சமணர்கள் தம்முடைய மனதிற்கொண்ட அச்சத்தைப் பிறர் அறியாதபடி மறைக்க முயன்றார்கள்; பொறாமையினால், கண்கள் சிவக்கக் கோபத்தோடு பலவாறாகப் பிதற்றினார்கள்; பின்னர் அவர்கள் சுவாமிகளைச் சூழ்ந்து நின்று, தங்கள் சாத்திரங்களிலுள்ள சில விஷயங்களை எடுத்துப் பேசினார்கள். ஞானசம்பந்தரும் அவர்களை நோக்கி, "உங்களுடைய பொருளின் முடிவை உங்கள் நூல்கள் கூறும்வண்ணம் கூறுங்கள்" என்றார். உடனே முனிவர்கள் குதித்தெழுந்து தடுமாற்றத்தோடு கதறத்தொடங்கினார்கள்.

பாண்டிமாதேவியார், சுவாமிகள் குழந்தையாக விருக்கச் சமணர்கள் அவரை என்ன செய்வார்களோ என்று பயந்து, நடுக்கமுற்றுத் தம்முடைய நாயகனைப் பார்த்து, "சுவாமிகள் சிறுவருங் குழவருமாயிருக்கின்றார்; முனிவர்களோ வயதின் முதிர்ந்தோரும் பலருமாயிருக்கின்றார்கள்; வீண் வாதங்கள் வேண்டாம்; உங்கள் நோயைச் சுவாமிகள் நீக்கியருளுவார்கள்; பின்னர், சமணர்கள் வாது செய்வதாயின் செய்யட்டும்" என்றார். மன்னன் தேவியை நோக்கி, "வருந்தாதே; வாதும் எதற்காக? என்னுடைய நோயைத் தீர்த்தலே அவரவர் தெய்வத் தன்மையை விளக்குவதாகும்." என்று யாவருங்

கேட்குமாறு கூறித் தம் நோயை நீக்கச் சமணர்களையும் சம்பந்தப் பெருமானையும் அழைத்தான். திருஞானசம்பந்த சுவாமிகள் நோய் தீர்க்க எழுந்திருக்கு முன், தம்மைச் சிறுவரென்று எண்ணித் தமக்காகப் பரிந்து பேசிய அம்மையாரை நோக்கி, 'அம்மணீ! நான் பாலனென்று அஞ்சவேண்டாம். திருவாலவாய்ச் சிவபெருமான் என்னுள் இருக்கும்போது யான் ஈனர்களாகிய சமணர்களுக்கு எளியவன் ஆகேன்" என்று பொருள்பட,

"மானினேர்விழிமாதராய்வழுதிக்குமாபெருந்தேவிகேள்
பானல்வாயொருபாலனாங்கிவனென்று நீபரிவெய்திடேல்
ஆனைமாமலைஆதியாயஇடங்களிற்பலஅல்லல்சேர்
ஈனர்கட்கெளியேனலேன்திருவாலவாயரன்நிற்கவே."

என்னுந் தொடக்கத்துத் திருப்பதிகத்தை அருளிச் செய்தார். அதுகேட்ட பாண்டியன், இருபுறத்திலும் வீண்வாதம் மேலிடும் என்று எண்ணித் தம்முடைய நோயை விரைவாகத் தீர்ப்பவர் யாவரோ அவரே வாதில் வென்றவர் என்று கூறினான்.

## வெண்ணீற்றால் வெப்புநோய் போதல்

மன்னன் கூறிய மொழிகளைக் கேட்ட சமணர்கள் அவரருகே சென்று, "நாங்கள் தங்களுடைய உடலிலுள்ள இடப்பக்கத்து நோயை முன்னதாகத் தீர்க்கின்றோம்" என்றார்கள். மன்னனும் இசைந்தான். அவர்கள் மயிற்பீலிக் கற்றைகளை யெடுத்து மன்னனுடைய உடலின் இடப்பாகத்தைத் தடவினார்கள். அந்த நோய் திருவருள் வழியே வந்ததாகலின், அது சமணர்

களுடைய செய்கையால் பெரிதும் அதிகரித்து விட்டது. இன்னும், யாவரும் அதிசயிக்கும்படி வலப் பக்கத்து நோயைக் காட்டிலும் இடப் பக்கத்து நோயே மன்னனால் தாங்கக் கூடாததாயிருந்தது; அப்போது பாண்டியன் அந்நோயைப் பொறுக்கமாட்டாமல் நமது சுவாமிகளை நோக்கினான்.

பாண்டியன் சொன்னவாறு சுவாமிகள் ஒருபக்கத்து நோயைத் தீர்க்க வேண்டியவராக இருந்தும், சமணரைப்போல் அதனை விரைந்து செய்யாமல் பொறுமையோடு அமர்ந்திருந்து அரசனுடைய நோக்கத்தை அறிந்தபின்னர் எழுந்தார்; திருவாலவாய்ப் பெருமானிருக்குந் திசையை நோக்கி நின்று, சுந்தரேசரை நினைந்து, "நீரே மந்திரமும் மருந்துமாய் நின்று தீர்த்தருள வேண்டும்" என்று பிரார்த்தித்து, கையில் திருநீறு கொண்டு,

"மந்திரமாவது நீறு வானவர் மேலது நீறு
சுந்தரமாவது நீறு துதிக்கப்படுவது நீறு
தந்திரமாவது நீறு சமயத்திலுள்ளது நீறு
செந்துவர்வாயுமை பங்கன் திருஆலவாயான்திரு நீறே"

என்னுந் தொடக்கத்துப் பதிகத்தை அருளிச் செய்து வணங்கி, அதனை மன்னனுடைய வலப்பக்கத்தில் தடவினார். அந்தக் கணத்திலேயே அப்பக்கத்து வெப்பு நோய் தணிந்து பொய்கைபோல் குளிர்ந்தது. அப்போது இந்நில உலகத்திலே காணப்படும் உஷ்ணம் குளிர்ச்சி என்னும் இரண்டு பொருள்களில், குளிர்ச்சி பாண்டியனுடைய உடலின் வலப்பக்கத்தையும், உஷ்

ணம் இடப்பக்கத்தையும் ஒரேகாலத்தில் அடைந்தது போல ஆயிற்று.

பாண்டியன், சுவாமிகளை நோக்கி, "சுவாமி! தேவரீருடைய பெருங்கருணையினால் ஒரு பக்கத்து நோய் தீரப் பெற்றேன்; இப்போது அடியேன் ஒரு காலத்திலேயே நரகவேதனை ஒரு புறமும், முத்தி இன்பம் மற்றொரு புறமுமாய் அநுபவிப்பவரை ஒத்திருக்கின்றேன். ஆகலின் சுவாமிகளே அடிமையின் பிணி முழுவதையுந் தீர்த்தருளக் கருணை புரிய வேண்டும்" என்று விண்ணப்பஞ் செய்து கொண்டு, அச்சத்தோடு அகன்றிருந்த அமணர்களை அழைத்து, "பேதைகளே! நீங்கள் தோற்றுப் போனீர்கள்; தூர அகலுங்கள்" என்று வெகுண்டு உரைத்தான். பின்னர், கருணைக் கடலாய திருஞான சம்பந்த சுவாமிகள், ஆண்டவன் அருளை நினைந்து, அகம் மிக மகிழ்ந்து, விபூதிக் கோயிலில் (பையில்) இருந்து விபூதியை எடுத்துச் சிவபெருமானைத் துதித்துப் பாண்டியனுடைய உடலின் இடப்புறத்தில் தடவினார். உடனே அந்தப் பக்கத்து வெப்பும் சூரியனைக் கண்ட பனியென நீங்கியது. மன்னனும் மலர்ந்த முகத்தைக் காட்டி, ஆனந்தக் கண்ணீர் சொரிய, "சுவாமிகள் அருளால் அடியேன் பிழைத்தேன்! பிழைத்தேன்!" என்று கூவினன். மங்கையர்க்கரசியாரும் அமைச்சர் குலச்சிறையாரும் திருஞானசம்பந்த சுவாமிகளுடைய திருவடிகளைச் சிரசில் சூடியவர்களாய், "நாங்கள் அடைதற்கரிய செல்வத்தை அடைந்தோம்; அதனால் மீண்டும் இன்று பிறந்தவரானோம்; இனி

பிறவா மேன்மையை எங்களுடைய அரசன் அடைந் தான்" என்று மகிழ்ந்து கூறினார்கள்.

## சமணர் சூழ்ச்சி

சமணர்கள் பாண்டியன் தங்களைக் கைவிட்டா னென்று அறிந்து அச்சமுற்று, எல்லோரும் ஒருங்கு சேர்ந்து, வேறு என்ன செய்வதென்று ஆலோசிக்க லானார்கள். அப்போது, அவர்களுள் சிலர், "நம்முடைய மந்திரங்கள் பயன்படவில்லை. ஆகலின் அச் சைவரைத் தருக்க வாதத்தினாலேதான் வெல்லவேண்டும்" என்றார் கள். உடனே வேறு சிலர் எழுந்து, "பாண்டியனுடைய சுரநோய், அச்சிறுவன் சிவனைத் துதித்துத் தடவிய நீறினாலேயே நீங்கியதாக இருக்கின்றது. அவனு டைய பாடல்களும் ஓதாது உணர்ந்து கூறியனவாக வும், எல்லா இலக்கணங்களும் பொருந்தியனவாகவும் இருக்கின்றன. ஆகலின் அவனைத் தருக்க வாதத்தினால் வெல்ல முடியாது" என்றார்கள். மற்றுஞ் சிலர், "தீயி னாலும் நீரினாலும் வெல்லலாம்" என்றார்கள். பிறகு அவர்களெல்லோரும் தீயினாலும் நீரினாலும் வெல்லு வதே சரியெனத் தீர்மானித்தவர்களாய் மறுபடியும் அர சன் பக்கத்திலே சென்றார்கள்.

சமணர்கள் தோல்வியடைந்தும், மேல் வேறுவகை யால் வெல்லக் கருதிய குறிப்பை அறிந்த கூன்பாண்டி யன் அவர்களை நோக்கி, "அடிகளே! என்ன செய்தி? யாது சொல்ல வருகின்றீர்கள்? நான் சுர நோயால் வருந்தியபோது நீங்கள் அதனை நீக்கமுடியா மற் போனீர்கள்; அதனால் உங்கள் சமயத்தின் நிலைமை

விளக்கமாய் விட்டது" என்றான். மன்னனிடத்தில் என்ன சொல்லுவதென்று அறியாது மயங்கிச்சென்ற சமணர்கள் வேந்தன் கேட்டதையே வினாவாகக் கொண்டு, "அரசர் பெருமானே! சமய உண்மையை அவ்வாறு நிச்சயித்தல் கூடாது; அதனை யாவருங்காணுமாறு காட்டுதல் வேண்டும். சமயப் பொருளின் உண்மையை ஓர் ஏட்டில் எழுதி எரிகின்ற தீயில் இட்டால் அந்த ஏடு வேகாதிருந்ததேல வெற்றியாகும். தற்போது, தங்கள் முன்னிலையில் அச் சைவரும் நாங்களும் செய்யத்தக்கது அதுவேயாம்" என்று கூறினர்.

சமணர்கள் சொல்லியதனைக் கேட்ட ஞானசம்பந்த சுவாமிகள், அவர்கள மனதின்படியே வாதம் செய்யத் திருவுளங் கொண்டிருந்தார். ஆனால் மன்னன் அதற்கு இணங்காது மறுக்கவேண்டும் என்னுங் குறிப்போடு எழுந்தான். அரசன் அமணர்களுடைய வேண்டுகோளை அங்கீகரியாது தடைசெய்வானென்ற குறிப்பையறிந்த சுவாமிகள், பாண்டியன் யாதும் பகராமுன்னமே தாம அந்த வாதத்திற்கு இணங்குவதாக அவர்கள் முன்னிலையிலே கூறினர். சுவாமிகள் தாமாகவே தம்முடைய சமய தத்துவத் தெரிவித்தமையால், மன்னன் வேறு பேசாது மகிழ்ந்து தீயை வளர்க்கும்படி ஏவலாளருக்குக் கட்டளையிட்டான்.

## அனல்வாதம்

அரசன் ஆணைப்படி கொழுந்து விட்டெரியத் தக்க பெரு நெருப்பும் உடனே மூட்டப்பட்டது. இதற்குள்ளாகச் சமணர்கள் எல்லோரும் தங்களுக்குத்

தெரிந்திருந்த மந்திரங்கள் எல்லாவற்றையும் ஈரமுள்ள ஓலைகளில் எழுதிவைத்துக்கொண்டு அவை நெருப்பில் எரியாது நிலைபெறுமோ என்னுங் கவலையோடு நடுக்க முற்றிருந்தார்கள். திருஞானசம்பந்தப் பெருமான், "சிவபெருமானே உலக காரணராகிய பரம்பொருள்" என்று தாம் பாடிய திருமுறையைத் துதித்து எடுத்துத் திருக்காப்பிட்ட கயிற்றை அவிழ்த்து அந்தக் கயிற்றால் திருமுறையை மறித்துத் திறந்தருளினார். திறந்ததும தமக்கு ஞான அமுதூட்டிய உலகமாதாவின் பெயரைத் தொடக்கமாகக்கொண்ட திருநள்ளாற்றுப் பதிகம் உதயமாயிற்று. உடனே சுவாமிகள் அந்தப் பதிக ஏட்டினை எடுத்துச் சிரசின்மீது வைத்துக் கொண்டார்; அத் திருப் பதிகநாதராகிய நள்ளாற்றுப் பெருமானைத் திசைநோக்கி வணங்கினார்; அந்த ஏட்டைத் தீயிலிடின், அதுபழுது படாதென்னுந் துணிவு கொண்டிருந்தார். இருதிறத்தவர்களும் தங்கள் தங்களுடைய ஏடுகளை நெருப்பில் இடத்தயாராக இருப்பதையும், தீ வளர்க்கப்பட்டதையும் அறிந்த பாண்டியன் அவர்களை அழைத்து ஏடுகளைத் தீயில் இடச்சொன்னான்.

சமணர்கள், வெப்பு நோயைத் தீர்ப்பதற்காக விரைந்து சென்றதுபோலவே முன்னதாக விரைந்து ஓடித் தங்கள் ஏடுகளை நெருப்பினிடத்தே நிரப்பினார்கள். அவை யாவும் அக் கணத்திலேயே இரும்புண்ட நீரைப் போல் இல்லாது போயின. சமண முனிவர்களும் அது கண்டு பயங்கொண்டு மனஞ்சோர்ந்து உடல் தளர்ந்து ஒருபுறம் நின்றார்கள். பிறகு மன்னன் திருஞான சம்பந்தப் பெருந்தகையைப் பிரியத்தோடு அழைத்தான்.

அவர், "சிவபெருமானே அழிவில்லாத மெய்ப்பொருளா யுள்ளானென்று யாவரும் அறியுமாறு இத் திருப்பதிக ஏடு நெருப்பில் நிலைத்திருப்பதாக" என்று கூறியும்,

"தளிரிளவளரொளி தனதெழில் தருதிகழ் மலைமகள்"

என்று தொடங்கி ஒரு திருப்பதிகத்தைப் பாடியருளியுந் தம்முடைய சிரசின்மீதிருந்த திருமுறை ஏட்டை எடுத்து யாவருங்காண நெருப்பில் இட்டார். தமிழ்வேதம் அடங்கிய அந்த ஏடு பலநாளாக நீரிலே கிடந்ததுபோல பசந்து காட்டியது. அதனைப் பிள்ளையார் யாவருங் காணத் தம்முடைய திருக்கரங்களால் எடுத்துச் சபையோருக்குக் காட்டித் திருமுறையிற் கோத்தார்.

அப்போது மங்கையர்க்கரசி அம்மையாரும், மந்திரியாரும் மகிழ்ச்சிக் கடலில் அமிழ்ந்தார்கள். மன்னனும் பெருமகிழ்ச்சியை அடைந்து, மயிற் பீலிக்கற்றைகளோடு நின்ற சமண முனிவர்களை நோக்கி அவர்கள் நெருப்பில் இட்ட ஏட்டைக் காட்டுமாறு கேட்டான். முனிவர்கள், தங்களுடைய ஏடுகள் வெந்துபோயின என்பதை அறிந்தும் ஒன்றும் அறியாதவர்களைப்போல் அத்தீயின் அருகிற் சென்றார்கள். அப்போது அந்தத் தீ கொழுந்துவிட்டு எரிந்தமையால், அவர்கள் சுவாமிகளைப்போல் அதனுள் தங்கள் கரங்களைச்செலுத்த இயலாமல் பயந்து நீங்கினார்கள். அதுகண்ட பாண்டியன் அத்தீயைத் தண்ணீரால் அணைப்பித்தான். பிறகு சமணர்கள் தடுமாற்றம் அடைந்த மனதோடு தாங்

கள் இட்ட ஏடுகளைத் தேடினார்கள் ; சாம்பரை அரித்துத் துண்டுகளேனும் கிடைக்குமாவென்று பார்த்தார்கள் ; ஒன்றுங் கிடைக்கவில்லை. அதுகண்ட மன்னன் புன்சிரிப்படைந்து, "நீங்கள் தேடியது போதும். நில்லுங்கள்?" என்று சொன்னான். அந்தோ! அவர்கள் என்ன செய்வார்கள்? திகைத்து நின்றார்கள். பின்னும், பாண்டியன் அவர்களை நோக்கி, "நீங்கள் இன்னுந் தோல்வியடையவில்லை போலும்!" என்று பரிகசித்துக் கூறினான். அவர்களும் பாண்டியன் சொற்களைப் பயனுள்ள சொற்களெனக் கருதி, "நாங்கள் ஈரமுள்ள எண்ணாயிரம் ஏடுகளை எழுதி யிட்டோம். அவைகள் கரிந்துபோயின. அவர் இட்ட ஒன்று கரியாது நீரில் இட்டவண்ணமாகப் பச்சென்று இருக்கக் கண்டோம். அவ்வாறு இருப்பதற்குக் காரணம் அவர் ஏதோ மந்திரத்தினால் அதனைக் கட்டுப்படுத்தி யிருத்தல்வேண்டும். ஆயினும், இருமுறை வாதஞ் செய்தோம். மூன்றுமுறையும் வாதஞ்செய்தல் வேண்டும். நாங்கள் மூன்றில் ஒருமுறை வெற்றி பெற்றாலும் எங்கள் சமயமும் உண்மை உடையதாகும். ஆகவின் தங்கள் முன்பாகவே இன்னொருமுறை வாதஞ்செய்ய உத்தரவளிக்கவேண்டும்." என்று கேட்டார்கள்.

இருமுறை தோல்வியடைந்தும் இன்னும் வெற்றி பெறவேண்டுமென்னும் ஆசைகொண்டிருந்த சமணர்களுடைய வேண்டுகோளை மன்னன் மறுத்துக்கூற எழுந்தான். சீகாழிப் பிள்ளையார் அந்த வாதத்தையுஞ் செய்தே வெற்றிபெற எண்ணியபடியால், அவர் அஃது யாதெனச் சமணர்களைக் கேட்டார். அவர்கள், "இப்

போது நிகழ்ந்தது அனல்வாதம். இனி நிகழவேண்டு வது புனல்வாதமாகும். அவரவர்களுடைய சமயங் களின் முடிவானபொருளை ஓர் ஏட்டில் எழுதி ஓடுகின்ற நீரில்விட்டால் நீரோடு ஓடாது எதிர் ஏறிச்செல்லும் ஏடே உண்மைப் பொருளுடையதாம்" என்று சொன் னார்கள். உடனே, திருஞானசம்பந்தப்பெருமான், "அப்படியே செய்வோம்" என்றார். இதற்குள் மந்திரி யார் சமணர்களுக்குத் தக்க தண்டனை விதிக்கவேண்டும் என்னுங் கருத்துடையவராய் இருந்தமையின் அரச னுக்கு அருகில்வந்து, "இவ்வாதத்தில் தோற்றவர்கள் செய்வது யாதோ அதனை நிருணயித்துக்கொண்ட பின் னரே அதனைச்செய்ய உத்தரவளிக்க வேண்டும்" என்று சொன்னார். அதுகேட்ட சமணர் மந்திரியார்மீது கோபித்துக்கொண்டு, தாங்கள் சொல்லுவது இன்ன தெனத் தெரியாமலே, "நாங்கள் தோல்வி அடைந் தால் அரசனே எங்களைக் கழுமுனையில் ஏற்றக்கடவன்" என்று உறுதிமொழியை உரைத்தார்கள். உடனே, அர சன் சமணர்களை நோக்கி, "நீங்கள் கோபத்தால் அவ் வாறு கூறினீர்கள். இனி என்ன செய்வது? உங்களு டைய சமய உண்மைகள் எழுதப்பட்ட ஏடுகளை நமது வளம்பொருந்திய வைகை ஆற்றிலே விடுவதற்குப் புறப் படுங்கள்" என்றான்.

## புனல் வாதம்

ஆளுடைய பிள்ளையார் இறைவன் தந்த திருச் சிவிகையில் எழுந்தருளி அடியார் கூட்டம் புடைசூழ வைகையாற்றை நோக்கிச் சென்றார். பாண்டியனும்

தம்முடைய மந்திரிப் பிரதானிகள் யாவரும் சூழ்ந்துவர யானைமீது ஏறிச் சென்றான். சமணமுனிவர்களும பின்னே சென்றார்கள்.

இவர்கள் யாவரும் வைகையை நோக்கி வீதி வழியாகப் போவதைக் கண்ட ஊரார், " 'இதோ வருகின்ற ஞானசம்பந்தரென்னுங் குழந்தையே பாண்டியன் நோயை நீக்கிய பெருமான்' என்றார்கள்; 'நம்மை ஏமாற்றிய சமணர்களை வென்ற சிங்கம்' என்றார்கள்; 'நமக்குச் சன்மார்க்கத்தைக் காட்டிய சற்குரு' என்றார்கள்; 'நான்கு வேதங்களையும உய்விக்க வந்த தெய்வம்' என்றார்கள; 'இவரால் சிவபெருமான் திருநீறே மெய்ப்பொருளெனக் கண்டோம்' என்றார்கள்; 'திருவாலவாய்ப் பெருமானே நமது கடவுள்' என்றார்கள்; 'அவனை அறிவதே மெய்ஞ்ஞானமென்று அறிந்து கொண்டோம்' என்றார்கள்; 'திருஞானசம்பந்தரைத் தரிசித்ததால் நாம் பிறவிப்பயனைப் பெற்றோம்' என்றார்கள்; 'மன்னன் மறுபிறவியைப் பெற்று வருகின்றான் பாரும்' என்றார்கள்; 'சமணர் சொல்லைக்கேட்ட நம்முடைய அரசனுக்குத் தக்க தண்டனை கிடைத்தது' என்றார்கள; 'சம்பந்தரே மங்கையர்க்கரசிக்கு மங்கிலியப் பிச்சை தந்தார்'. என்றார்கள்; 'சமணர் வதனங்கள் வாட்டமுற்றன பாரும' என்றார்கள்; 'அவர்களுடைய வஞ்சனைகள் குலைந்தன' என்றார்கள்; 'நெருப்பில் தோற்றார் நீரில் வெல்வரோ' என்றார்கள்; 'ஆளுடைய பிள்ளையார் அருளுக்கு முன் சமணர்களுடைய மருள் நிற்குமோ' என்றார்கள்; 'சமணரைத் தண்டிக்கக் குலச்சிறையார் கூர்மை பொருந்

திய கழு மரங்களைச் செய்துவிட்டார்' என்றார்கள்; 'வைகையாற்றில் நடைபெறும் வைபவத்தைக் காண லாம் வாருங்கள்' என்றார்கள்.'' இவ்வாறு பேசிய மதுரை மாந்தரும் வைகையை அடைந்தார்கள்.

எல்லோரும் வைகைக் கரையை அடைந்து அமர்ந் ததும், அரசன் திருஞானசம்பந்த சுவாமிகளையும் சம ணர்களையும் நோக்கி, "நீங்கள் ஏடுகளை விடுங்கள்" என்று கூறினான். உடனே, சமணர்கள் தண்ணீரின் வேகத்தைத் தணிக்கப் பலமந்திரங்களைச் சொல்லியும், முன்னர் இருமுறை தோற்றவர் மூன்றாமுறை தோலா ரென்று துணிந்தும் தங்கள் கைகளிலிருந்த சமயநூல் களைவிட்டார்கள். அவை நீரோடு கடலை நோக்கிக் கடு கிச் சென்றன. அப்போது சமணமுனிவர்கள் அந்த ஏடுகளைத் தடுப்பவரைப்போல் கரையின்மீது ஓடினார் கள்; அவர்கள் ஓடுவதனாற் பயன் யாதோ? அவர்கள் அரசன் எதிரில் நில்லாது ஓடவேண்டுமென்றே ஓடினார் கள்போலும்! அவ்வேடுகள் அவர்களை நட்டாற்றில் விட்டே சென்றன. சமணர்கள் பாண்டியனும் சம்பந்தப் பெருமானும் இருக்கின்ற இடத்தினின்றும் அதிதூரஞ் சென்றிருந்தமையின் அவர்கள் ஒருவரோடு ஒருவர் சேராது சிதறினார்கள்; திகைத்தார்கள்; தங்கள் விதியை நினைந்து வருந்தினார்கள்; பின்னர், அரசன் ஆணைக்குப் பயந்து திரும்பிவந்து தாங்கொண்ட அச் சத்தை மறைத்து எதிரே நின்றார்கள்.

சமணர்கள் வந்து சேர்ந்ததும் மன்னன் சீகாழி வள்ளலை நோக்கினார். அவர் வேதத்தின் பொருளான அறநெறியை,

"வாழ்க அந்தணர் வானவர் ஆனினம்
வீழ்க தண்புனல் வேந்தனும் ஓங்குக
ஆழ்க தீயதெல்லாம் அரன் நாமமே
சூழ்க வையக முந்துயா தீர்கவே"

என்னுந் தொடக்கத்துத் திருப்பதிகத்திலே அடக்கி அருளிச்செய்து, அதனை ஓர் ஏட்டிலே வரைந்து தம் முடைய திருக் கைகளால் நீரில் இட்டார். அந்த ஏடு சைவசமயமே மெய்ச் சமயமென யாவருக்குங் காட்டுவதாய்ப் பிறவியாற்றில் பெருமை பொருந்திய தவ முதல்வர்களுடைய மனஞ் செல்லுவதுபோல நீரைக் கிழித்துக்கொண்டு எதிர்நோக்கிச் சென்றது. சுவாமிகள் பதிகத்தின் முதற் பாசுரத்திலே, "வேந்தனும் ஓங்குக" என்று திருவாய்மலர்ந்து அருளினமையின், பாண்டியனுக்கு இருந்த கூன் அப்போதே நிமிர்ந்தது.

இவ்வதிசயங்கள் நிகழ்ந்ததைக் கண்ட அடியவர்கள் ஆனந்தக்கடலில் அழுந்தினவர்களாய்த் தங்கள் மகிழ்ச்சியைப் பலவகையினும் வெளிப்படுத்தினார்கள். நின்றசீர் நெடுமாறனாகிய பாண்டியன் முதலிய யாவரும் மிகவும் ஆச்சரியமடைந்து, "சைவசமயமே மெய்ச் சமயம்; சைவசமயமே இறைவன் அருட்சமயம்" என்று கூறி இறைவனைத் துதிசெய்தார்கள். சமணர்கள் எல்லோரும் நாணத்தால் தலைகுனிந்து தங்கள் தோல்வியைக் குறிப்பாக உணர்த்தி நின்றார்கள். இதற்குள் ஞானசம்பந்தர் விட்ட ஏடு நீரோடு செல்லும் வேகத்தைக்காட்டிலும் மிக வேகமாக எதிர்நோக்கிச் சென்று கொண்டிருந்தமையின் அதனைப் பிடிக்கக் குலச்சிறையார் குதிரைமீதேறி விரைவாகச் சென்றார். அந்தக்

குதிரையின் வேகத்திலும் ஏட்டின் வேகம் மிகுந்தே யிருந்தது. அதனை அறிந்த சுவாமிகள், ஏடானது கரையை அணையும்பொருட்டு,

“ வன்னியு மத்தமு மதிபொதி சடையினன்
பொன்னியல் திருவடி புதுமல ரவைகொடு
மன்னிய மறையவர் வழிபட அடியவர்
இன்னிசைப் பாடலார் ஏடகத் தொருவனே ”

என்னும் தொடக்கத்துத் திருப்பதிகத்தை அருளினார்; ஏடும் உடனே நின்றது. அது நின்ற இடமே ‘ திருவேடகம் ’ என்று வழங்கப்படுகின்றது. கரையை அணைந்த ஏட்டைக் குலச்சிறைநாயனார் மகிழ்ந்து எடுத்துத் தலைமீது வைத்துக்கொண்டு அவ்விடத்திலுள்ள சிவபெருமானைப் பணிந்து, திரும்பிவந்து மன்னன் முதலிய யாவருக்கும் அதனைக் காட்டினார்.

பாண்டியன் பிறகு மந்திரியை நோக்கி, “ சமணர், சம்பந்தப்பெருமானோடு வாதம் செய்து தோற்றார்கள். ஆகலின், அவர்கள் கூறிய உறுதிமொழிப்படி அவர்களைக் கழுவேற்றும் ” என்றான். சமணர்களிற் பலர் தாங்கள் மானிகளென்பதை யறிவிக்கும் பொருட்டுத் தாங்களே வலியச்சென்று அக் கழுமரங்களில் ஏறினார்கள். கழுவேறிய சமணர்கள் போக மிகுதியாக இருந்தவர்களில் மரணத்திற்குப் பயந்தவர்களும், முன்னர்ச் சைவராக இருந்து அரசனைப் பின்பற்றிச் சமணசமயத்தைத் தழுவியவர்களும், சமணசமயம் பயனற்றதென்று அறிந்தவர்களும் சைவ சமயத்தைத் தழுவிக்கொள்வதாக அரசனுக்கு அறிவித்தார்கள்.

## அரசி அரசனைச் சைவனாக்கி மகிழ்தல்

"கங்காளன் பூசும் கவசத்திருநீற்றை
மங்காமற்பூசி மகிழ்விரேயாமாகில்
தங்காவினைகளுஞ் சாருஞ்சிவகதி
சிங்காரமான திருவடிசேர்வரே"

என்று திருமூலநாயனார் திருமந்திரத்தில் அருளியபடி சைவ சமயத்தின் முதற் சாதனமான திருநீற்றைச் சம்பந்தசுவாமிகள் பாண்டியனுக்குக் கொடுத்தருளினார். பாண்டியன் விபூதியை அணிந்ததும், அவனைச் சார்ந்த மந்திரிப்பிரதானிகள், குடிமக்கள் முதலிய யாவரும் அதனை அணிந்துகொண்டார்கள். பிறகு சம்பந்தர் சிவபெருமானுடைய கோயிலுக்குச் செல்லப் புறப்பட்டார். அவரோடு அளவில்லாத அடியவர்களும், பாண்டியன், தேவியார், குலச்சிறை முதலியோரும் சென்றார்கள். சுவாமிகள் கோவிலுக்குட் சென்று கைகளைச் சிரசின் மீது குவித்து வலம் வந்து, வேத முதல்வராகிய சிவபெருமான் சந்நிதிக்கு எதிரேநின்று துதித்து, "'அஞ்சாதிரு' என்று அடியேனுக்கு அருள்செய்த மெய்யனே! உன்னை நினைப்பதன்றி வேறு உணர்ச்சி ஒன்றுமிலேன்" என்று கூறி,

"வீடலாலவாயிலாய் விழுமியார்கணின்கழல்
பாடலாலவாயிலாய் பரவநின்றபண்பனே
காடலாலவாயிலாய் கபாலிநீள்கடிம்மதிட்
கூடலாலவாயிலாய் குலாயதென்னகொள்கையே"

என்னுந் தொடக்கத்துத் திருப்பதிகத்தைப் பாடியருளித் தமது இருக்கையை அடைந்தார். மன்னன் முதலி

யோரும் சுவாமிகளை வணங்கி விடைபெற்றுத் தங்கள் வீடுகளுக்கு ஏகினார்கள்.

திருஞானசம்பந்தர் மதுரைமாநகரில் எழுந்தருளி இருக்கும்போதே பாண்டி நாட்டிலுள்ளார் சமணர்களுடைய பள்ளிகளையும் ஆலயங்களையும் அடியோடு வீழ்த்திவிட்டார்கள். பின்னர் சமணர் ஒருவரையும் அந்நாட்டிலே காண்பது அருமையாய் விட்டது. ஒவ்வொரு இல்லங்களிலுஞ் சைவ ஒளிபரந்துவிளங்கியது. மன்னன் சைவக் கோயில்களிலெல்லாம் திருவிழாக்களை கொண்டாடினன். பாண்டியன், தன் பத்தினியாகிய மங்கையர்க்கரசி அம்மையாரால் திருஞானசம்பந்தரை நண்ணிய சித்தபாக்கியத்தையும், தானுந் தன் குடிமக்களும சன்மார்க்கத்தை அடைந்த நேர்மையையும் எண்ணி எண்ணி மகிழ்ந்தான். மன்னனுடைய மந்திரிமார் முதலியோரும மற்றைக் குடிமக்களும் பாண்டிமாதேவியாருடைய திறமையை வியந்து பாராட்டினார்கள்; “பாண்டிநாட்டு மக்களைப் பாதுகாக்க வந்த மாதாவோ? நம்முடைய உயிருக்கு உறுதியைத் தேடவந்த உத்தமியோ? அனைத்துயிரையும் அளித்துக் காக்கும் அகிலாண்டநாயகியோ? அம்மையாரால் நம்முடைய மன்னனும் நாமும் பிழைத்தோம்; நல்ல நெறியை அடைந்தோம்.” என்று புகழ்ந்து போற்றினார்கள். அரசியாருடைய புகழ் பாண்டிய நாட்டில் மாத்திரமன்றி அன்னிய நாடுகளிலும் பரவியது. மங்கையர்க்கரசியம்மையார் இத்தகைய பெரும் புகழைப் பெற்றபோதிலும் இவையாவும் இறைவனால் நிகழ்ந்தவைகளாக எண்ணினார்களே யன்றித் தம்மால் நிகழ்ந்ததாக ஒரு சிறிதும் எண்ணவேயில்லை.

" அடக்கம் அமரருள் உய்க்கும் அடங்காமை
ஆரிருள் உய்த்து விடும் "

என்றும்,

" நிறையுடைமை நீங்காமை வேண்டிற் பொறையுடைமை
போற்றி யொழுகப் படும் "

என்றும், குறளாசிரியர் கூறியவாறு அம்மையாரிடத்தில் என்றும் அமைந்திருந்த அடக்கம் பொறுமை முதலிய இயற்கை அணிகலன்களே அவர்களை இப்படி மேலான நிலைமையில் திகழவைத்தன. அதுகாலை, " யாவரா யினும் அன்பரன்றி அறியொணா மலர்ச்சோதியான் " என்று மாணிக்கவாசகர் திருவாய் மலர்ந்து அருளியது போல், ஞானசம்பந்தர் தம்மைச் சூழ்ந்திருக்கும் சிவ னடியவர் பலரோடும் சுந்தரேசருடைய திருவடிகளில் நாடோறும் அன்புசெய்து துதித்துக்கொண்டிருந்தார். பாண்டியனும் மற்றையோரும் திருஞானசம்பந்தரு டைய திருவடிகளை வணங்கும் பெருமையை அடைந் திருந்தார்கள். நிற்க.

சீகாழியில் திருஞானசம்பந்தருடைய தந்தை சிவ பாதவிருதயருக்கும், தாய் பகவதியாருக்கும் தங்களு டைய அருமைப் பிள்ளையின்மீது நினைவு உண்டாயிற்று; உடனே அவர்கள் அவரைப் பார்க்க அவாவினார்கள்; " வாதீச முனிவருக்குத் தீங்குகள் செய்த சமணர்களை வெல்லச்சென்ற பிள்ளையின் நிலைமை என்ன ஆயிற் றோ?" என்று எண்ணிய சிவபாதவிருதயர் சம்பந்த ரைச் சந்திக்கப் புறப்பட்டுவிட்டார். அவர் மதுரையம் பதியை யடைந்து, ஆலவாய்ப்பெருமானை வணங்கி, ஆளுடையபிள்ளையாரின் வெற்றியைக் கேட்டு மகிழ்ந்து,

அப்பெருமான் எழுந்தருளியிருக்கும் இடத்தைநோக்கி வந்தார். தந்தையாருடைய வருகையை அறிந்த சுவாமி கள் அவரை முறைப்படி எதிர்கொண்டு அழைத்தார். சிவபாதவிருதயர் தம் புதல்வரின் தெய்வீக மேன் மையை உணர்ந்து அவரை முன்னே வணங்கிச் செல்ல, சுவாமிகளும் எதிர்வணங்கி அமர்ந்தார்கள். பின்னர், பெருமான் தமமுடைய தாய் தந்தையருடைய நலத்தை விசாரிக்கும்போது, தம்மை ஆட்கொண்டருளிய தோணி யப்பருடைய நினைவு வந்தது. உடனே அவர், கண்ணீர் சொரியக் காழிநகரை நோக்கித் தொழுது, பதிகம் ஓதி னார். பிறகு, சம்பந்தர் சிவபாதவிருதயரோடு அமுது செய்து வீற்றிருந்தார்.

அரசியும் அரசனும் ஐயனோடு சென்றுமீளலும்,

அரசி ஆண்டவன திருவடி நிழலடைதலும்.

மங்கையர்க்கரசியின் விண்ணப்பத்தை நிறை வேற்றி மகிழ்வித்த ஞானசம்பந்தர் மற்றைத் திருப்பதி களையும் வணங்கவேண்டுமென்று எண்ணினார். ஆக லின், பெருமான் உடனே மன்னனையும் மங்கையர்க்கரசி யாரையும் அழைத்து அவர்களுக்குத் தம்முடைய எண் ணத்தைத் தெரிவித்தார். அவர்கள், சிவபெருமானே திருஞானசம்பந்த சுவாமிகளாக வந்து தங்களைத் தடுத் தாட்கொண்டாரென்றும், அவருடைய திருவடிகளே தங் களுக்கு அடைக்கலமென்றும் எண்ணியிருந்தமையின், சுவாமிகள் புறப்படுவதைக்கேட்டு, அவர்கள் அவரைப் பிரிய மனமில்லாதவர்களாய் வருந்தினார்கள். அப்போது அவர்களுடைய நிலைமையைக்கண்டு இரங்கிய ஞானசம்

பந்தர் அவர்களுக்குத் தேறுதல்கூறி, "பேரன்புடையீர்! நான் இன்னும் சிலநாள் உங்களை நீங்காமல் இருக்கும் பொருட்டுப் பாண்டிநாட்டிலே சிவபெருமான் கோயில் கொண்டுள்ள பதிகளை என்னோடு வணங்குவீர்களாக" என்று கூறிக் கூடற்பெருமானையும் மீனாக்ஷியம்மையையுஞ் சென்று வணங்கி விடைபெற்றுப் புறப்பட்டார். மன்னன், மங்கையர்க்கரசியார் முதலிய யாவரும் அவரோடு செல்வதற்கு இசைந்து சென்றார்கள். அப்போது பாண்டிநாட்டு மக்கள் திருஞானசம்பந்தருக்குச் செய்த விழாவின் சிறப்புக்கு அளவேயில்லை. ஆளுடையபிள்ளையார் அரசரோடு பாண்டிநாட்டுத் தலங்களைப் பணிந்த பின்னர்ச் சோழநாட்டிற்கு எழுந்தருள எண்ணினார். அவருடைய அந்தக் குறிப்பை உணர்ந்த பாண்டியன் முதலியோர் அவரோடு செல்லவே துணிந்திருந்தார்கள். அதனையறிந்த சம்பந்தப்பெருமான், தாம் சோழநாட்டிற்கு எழுந்தருளும்போது, அரசன் அரசி அமைச்சர் ஆகிய அவர்கள் மூவரையும் அருகே அழைத்து, அவர்களுடைய மனந்தளராவண்ணம் அன்புமொழிகளைக் கூறியருளி, "நீங்கள் இந்நாட்டிலேயே சைவசமயத்தைப் பாதுகாத்திருங்கள்; மறுக்காதீர்கள்" என்று கட்டளையிட்டார். சுவாமிகளுடைய ஆணையை மறுத்தற்கு அஞ்சிய அவர்கள் பிரியாத அன்பினோடும் சுவாமிகளை வணங்கி, தாயைப் பிரிந்து செல்லும் இளங் கன்றுகளைப்போல் மதுரையை நோக்கிப் புறப்பட்டார்கள். திருஞானசம்பந்தப் பெருமானும் அடியவர் கூட்டம் புடை சூழச் சோழநாட்டிற்கு எழுந்தருளினார்.

பிறகு, மங்கையர்க்கரசியம்மையார் தம்முடைய கணவராகிய நின்றசீர் நெடுமாற நாயனாரிடம் இடையறா அன்புசெலுத்தி வந்ததோடு சிவபெருமானையும் சற்குருநாதராகிய திருஞான சம்பந்த சுவாமிகளையுந் தினைத்துணைப்போதும் மறவாமல் காலங்கழித்து சிவபெருமானுடைய திருவடி நீழலை அடைந்தார்கள்.

சுபம்! சுபம்.!!

---

## மங்கையர்க்கரசியார் புராணம்

---

மங்கையர்க்குத் தனியரசி யெங்கள் தெய்வம்
வளவர்திருக் குலக்கொழுந்து வளைக்கை மானி
செங்கமலத் திருமடந்தை கன்னி நாடாள்
தென்னர்குலப் பழிதீர்த்த தெய்வப் பாவை
எங்கள்பிரான் சண்பையர்கோன் அருளி னாலே
இருந்தமிழ்நா டுற்றவிடர் நீக்கித் தங்கள்
பொங்கொளிவெண் திருநீறு பரப்பி னாரைப்
போற்றுவார் கழலெம்மால் போற்ற லாமே.

பூசுரர்சூ ளாமணியாம் புகலி வேந்தர்
போனகஞா னம்பொழிந்த புனித வாக்கால்
தேசுடைய பாடல்பெறுந் தவத்தி னாரைச்
செப்புவதியா மென்னறிந்து தென்னர் கோமான்
மாசில்புகழ் நெடுமாறன் தனக்குச் சைவ
வழித்துணையாய் நெடுங்கால மன்னிப் பின்னை
ஆசில்நெறி யவரோடுங் கூட ஈசர்
அடிநீழல் அமர்ந்திருக்க அருளும் பெற்றார்.

— ஸ்ரீ சேக்கிழ

# கம்பர் சரித்திரம்.



[illegible]யிலே உயர்தர, [illegible] கலாசாலையின்

தலைமைத் தமிழ்ப் பண்டிதர்

ந. ரா. சுப்பிரமணிய ஐயர்

எழுதியது

நூலாசிரியர் அங்கீகரித்தது.]

இ. மா. கோபாலகிருஷ்ணக் கோன்,

புஸ்தக வியாபாரம், மதுரை.





1922.

விலை அணா 10

TO

THE REV. JOHN X. MILLER, M. A., D. D.,

MANAGER OF THE HIGH AND TRAINING SCHOOLS,

PASUMALAI, S. INDIA,

Who Has Devoted His Life

To The Education Of The Indian Youth,

THIS BOOK

*Is Most Respectfully Dedicated,*

with Kind Permission,

AS A SMALL TOKEN OF GRATITUDE, LOVE AND ESTEEM,

BY THE AUTHOR.

---

# உரிமையுரை.



பூமகளின் வதனமென மெய்ப்புலவர் புகழ்கின்ற
பொலிவு சான்ற

நாமமிகு பாரதநன் மாணவர்தஞ் சீரோங்க
வந்தோன். யாண்டும்

காமருவு கோமளையி லேயாள கலைவிரிக்கும்
கனமிக் கார்ந்தோன்,

பாமருவு டாக்டர் ஜான் X. மில்லர்க் கிதையுரிமை
பாலித் தேனே.



# INTRODUCTION.

I perused, with great pleasure and certainly with a great measure of profit, the Tamil book 'Kambar Charitram' written by M. R. Ry. N. R. SUBRAMANIA SARMA Avl., Head Tamil Pandit of the A. M. High and Training Schools, Pasumalai. The author has collected abundant materials from almost all available sources and has presented them in an orderly manner. What is of even greater interest is, the frank and gener-ous criticism to which he subjects the various anecdotes in the life of the Master-Poet. Though there are other books in the field with the same subject, I consider this a fuller and more natural account, and on this score I shall be glad that the book is read by senior students of schools and colleges and by lovers of Tamil in general.

This book would become a very useful and reliable hand-book of reference on matters relating to our Lord of Poets (Kambar.)

**V. MUTHUSAMI AIYAR**, M.A.,L.T.,
Sub-Assistant Inspector of Girls' Schools,
Madura District, Madura.

பொங்கும் மங்களம் எங்குந் தங்குக.

# முகவுரை.

—o—

"தன் ஆசிரியன் தன்னொடு கற்றோன்
தன்மாணாக்கன் தகுமுறை காரனென்று
இன்னோர் பாயிரம் இயம்புதல் கடனே."

என்பது பெரியோரிட்ட கட்டளை. ஆதலின், பசுமலை உயர்தர கலாசாலை, போதனா முறைக் கலாசாலைகளின் தலைமைத் தமிழ்ப்பண்டிதராகிய சிரஞ்சீவி நே. ரா. சுப்பிரமணிய சர்மாவின் வேண்டுகோட் கிணங்கி, (அவரது ஆசிரியனை பெற்றி பற்றி) யான், இம்முகவுரையை மகிழ்வொடு எழுதலானேன்.

பாரத கண்டத்துப் புலவர் பெருமக்கள் சரித்திரம் உள்ளதுள்ளபடி அறியக் கிடைப்பது அரிதாயுள்ள தென்பதை யாவரும் அறிவர். அச்சு வாகனமேறி இதுகாறும் வெளிப்போந்துள்ள நூல்களில் பெரும்பாலும் அசம்பாவிதமான விஷயங்களும் வியப்பும் நகைப்பும் விளைக்கக் கூடிய கட்டுக் கதைகளுமே மலிந்து கிடக்கின்றன. சுமார் இருபது வருஷங்களாகத்தான், கல்வியும் தேசாபிமானமும் ஆராய்ச்சி வன்மையும் மிக்க அறிஞர்கள் மதுரைத் தமிழ்ச் சங்கச "செந்தமிழ்" வாயிலாகவும், தனிநூல்கள் மூலமாகவும், தமது தமிழ்ச் சரித ஆராய்ச்சித் திறனையும், உண்மையில் தமக்குள்ள உவகையையும் காட்டி வருகின்றனர். பழமை ஒன்றையே பெருமையாகப் பாராட்டித் திரியும் பெற்றியோர்க்கும், உண்மையை அறியும் அவலும், ஆற்றலும் இல்லாதார்க்கும் இத்தகைய ஆராய்ச்சிகளால் அருவருப்பு உண்டாகக் கூடுமாயினும், மெய்கண்டுணர விரும்பும் வித்தகர் அவற்றால் ஊக்கமும் உவப்பும் உறுவர் என்பது தொருதலை.

இச்சிறு நூலை நான் ஆதியோடந்தம் படித்து மகிழ்ந் தேன். கர்ணபரம்பரையாக வழங்கிவருவனவும், இது காறும் வெளிவந்துள்ள தமிழ்நூல்கள், பத்திரிகைகள் மூல மாகத் தாம் அறிந்தனவுமான விஷயங்களை, இந்நூலாசிரியர், தாம் அரிதின் முயன்று பெற்ற துணைக்கருவிகளைக்கொண்டு துருவி நன்காய்ந்து, தம் ஆராய்ச்சியிற் பெற்ற பொருள் களால் தாம் பெற்ற இன்பம் இவ்வையகம் பெறுமாறும், மேன்மேலும் உண்மை ஒன்றையே அறிய நாடியும் இதன் வாயிலாக வெளியிட்டுள்ளார்.

பன்மலர்களினின்றும் பைந்தேன் பெறுறுந் தானும் உண்டு பலருக்கும் அளித்தும் பரமவுபகாரம் செய்யும் மது காம்போல, பல நூல்களினின்றும் விஷயங்களைக் குறித்துத் தொகுத்தும் பலருக்கும் பயன்படுத்தியுள்ள இவ்வாசிரி யர்க்குச் சரித ஆராய்ச்சியில் உள்ள விருப்பும் வன்மையும் அவர் ஏற்கனவே எழுதி வெளியிட்டுள்ள "பாண்டிய தேச நாயக்க மன்னர் வரலாறு" முதலியவற்றால் அவரை அறிந் தோர் அறிந்திருப்பர். எய்தும் இன்பமும், நைதரு துன்ப மும் எண்ணாது, இத்தகைய நூல்கள் இல்லாப்பெருங் குறையை நிவிர்த்திக்க முற்போந்துள்ள இவ்வாசிரியர் போன்றோர்க்குத் தமிழுலகு பெரிதுங் கடப்பாடுடையதே யாகும்.

இந்த நூலாசிரியர் இந்நூலில் தாம் கண்டறிந்த விஷ யங்களைத் தக்க பாகுபாடுபடுத்தியும், ஒவ்வொன்றையும் அதற்கான அதிகாரத்தின்கீழ் அமைத்தும் அதிகாரங்க ளில் அடங்கிய விஷயம் ஒவ்வொன்றையும் ஒட்டிப் பேச வேண்டிய இடங்களில் ஒட்டிப் பேசியும், வெட்டிப் பேச

வேண்டிய இடங்களில் வெட்டிப் பேசியும் உண்மையைத் தக்கவாறு நிலைநாட்ட முயன்றிருப்பது மிகவும் பாராட்டத் தக்கது.

கலாசாலை மாணவர்களுக்கு மட்டுமின்றிக் கம்பரது உண்மைச் சரித்திரம் அறிய விரும்பும் எவர்க்குமே இந்நூல் இன்றியமையாததொன்றென்பது எனது அபிப்பிராயம்.

தமிழ்நாட்டு மாணவரிடத் தார்வமும் தமிழர்களை ணக்குந் தகைமையும் வாய்ந்த கனம் J X மில்லர் பண்டிதர் அவர்களுக்கு இந்நூல் அர்ப்பணம் செய்யப்பட்டிருப்பது துரையவர்களின் தகைமையை உணர்ந்தோர்க்கு மகிழ்வையே விளைக்கும் என்பதில் ஐயமில்லை.

இவ்வாசிரியர் இதுபோல் பன்னூல்கள் எழுதிப் புகழ் எய்த இறைவன் திருவருள் புரிக.

இங்ஙனம்,

National College,<br>TRICHINOPOLY.<br>1—2—1921.

திரிசிரபுரம் தேசீயகலாசாலைத்<br>தமிழ்ப் பிரதமாசிரியனாகிய,<br>ம. கோபாலகிருஷ்ணன்.

---

# கம்பர் சரித்திரம்.

## 1. முன்னுரை.

'விருத்தமென்னும் ஒண்பாவிற் குயர்கம்பன்' என ஆன்றோரால் புகழ்ப் பெற்றவரும், வடமொழியிலுள்ள இராமாயணத்தைத் தமிழுலகுக்கு விருந்தளித்தவரும், எத்தேயத்தாராலும் கொண்டாடப்பெற்றவரும் கம்பரே எனத் தமிழ்மக்கள் யாவரும் நன்குணர்வர். யாரேனும் ஒருவரை 'நீ என்ன கம்பனோ?' எனப் பாமர ஜனங்களும் வழங்குவதால் கம்பருடைய பெயர் தமிழருக்குச் சர்வசாதாரணமாகத் தெரிந்திருந்ததென நன்கு விளங்கும். கற்பனை செய்வதில் காளிதாசன் பெரியவர் என்று கூறுவர் வடநூலோர். கம்பருடைய கற்பனைகளில் ஈடுபடாத தமிழரில்லை. 'கற்பனைக்குக் கம்பன்,' 'கல்வியிற் பெரியவர் கம்பர்,' 'கம்பனைக் கவி வம்பு,' 'கம்பன் கவியின் செம்பொருளின்பம்,' 'கம்பன் வீட்டு வெள்ளாட்டியும் கவிபாடுவாள்' எனக் கம்பர் விஷயமாய்ப் பழமொழிகள் வழங்குவதால், கம்பர் எங்ஙனம் தமிழ்மக்களால் நன்கு மதிக்கப் பெற்றிருந்தனர் என்பது தெற்றென விளங்கும்.

நமது நாட்டிலுள்ள புலவர் பெருமக்களின் சரித்திர உண்மையை அறிதல் அரிதாயிருக்கிறது. கம்பர் சரித்திரமும் இங்ஙனமே ஆம் என்பதற்கையமில்லை. சிறிதுகாலத்துக்கு முன்னர் இப்பெரும் புலவரின் சரித்திரத்தைச் செய்யுணடையாக எழுதப் புகுந்த புலவர்புராண முடையார்,

> 'கன்னன் பிறப்பும் பின்னளிற் றலங்கிற்று கம்பன்பிறப்(பு)
> இன்னம் தெரிந்தார்க ளில்லைமுக் காலு மிதுமெய்ம்மையே'

என்று கூறிப்போந்தனர். இவர் சம்பந்தமான ஒரே விஷயத்தைப் பற்றிப் பலர் பல விதமாகக் கூறுகின்றனர். ஒரே செய்யுளைப் பல பாட பேதங்களோடும் சந்தர்ப்ப வேறுபாடுகளோடும் குறிப்பர். அன்றியும் அற்ப விஷயத்திலும் கடவுளர் நேரே வந்துதவியதாகக் கூறுதல் அக்காலத்து வழக்கு. இது நமது நாட்டில் மட்டுமன்று மேனாட்டிலும் முற்காலத்தில் சர்வசாதாரணம். அங்ஙனமிருத்தலால் உண்மை இம்மட்டெனத் துணிந்து கூறுதல் எளிதன்று. எனினும், கம்பரைப் போன்ற பெரும்புலவர் எக்குலத்திற் பிறந்தனர், யாண்டு வளர்ந்தனர், எவ்வண்ணம் கற்றனர், எங்ஙனம் வாழ்ந்து சிறப்புற்றனர் என்னும் இவை போன்ற பல விஷயங்களைப் பலர் அறிய விரும்புதல் இயல்பாதலின், இதுவரை வெளிவந்த பிரபல்யமான ஆதாரங்களைக் கொண்டும், கர்ண பரம்பரை வழக்குகளைக் கொண்டும், யாம் அறிந்தவாறு இச்சிறுநூலை எழுதலானோம். இதில் குற்றங்கள் உளவாயின், கற்றறிந்த பெரியோர் மன்னித்து அவற்றைப் பொறுக்குமாறு பிரார்த்திக்கின்றோம். இதன் முதற் பதிப்பு வெளியாகிச் சொற்பகாலத்துக்குள்ளாகவே பிரதிகள் செலவாயின. ஆதலால் இதனைப் பலரும் விரும்பிப் பெற்றுப் படிக்கின்றனர் என நம்புகின்றோம்.

## 2. கம்பருடைய இளமைப் பருவம்.

சோழவளநாட்டுத் திருவழுந்தூர் என்பது மாயூரம் (மாயவரம்) ஸ்டேஷனுக்குச் சுமார் ஆறுமைல் தூரத்திலுள்ளது. அவ்வூரில் ஒரு தனித்த இடத்தில் அநாதையாய் ஒருகுழந்தை கிடந்தது. அக்குழந்தை அவ்வூர்க் கோவிலின் கம்பத்தினடியிற் கிடந்ததென்றும், புத்திரப் பேறின்றி வருந்திய ஒரு உவச்சன் ஒருநாள் அவ்வூர்க் கோவிலுக்குச் சென்று சங்கூதுகையில் அக் குழந்தையைக் கண்டு எடுத்துச் சென்று தன் மனைவியாற் கொடுத்தானென்றும், அதனை அவள் அன்பொடு பேணிவளர்த்தாள் என்றும், அக்குழந்தையே கம்பர் என்றும் புலவர்புராணமுடையார் கூறுகின்றனர். அதனை,

நாடார் தருஞ்சோழ நாடதனு ளுந்திருவ ழுந்தூரினரிற்
பீடாரு மோச்சக் குலத்தொருவ னவ்வூர்ப் பெருங்கோயில்வாய்
நாடோறு திக்குந்தொ றுஞ்செய்து சங்கூது நல்வேலையான்
ஓடாம லதுசெய்து வருநாளி லொருநாளிற் கூறுமிடை

கம்பத்தி னருகோர்சி சுக்கண்டு பெருகுங்க ளிப்போடெடுத்
தம்பத்த னையும்வென்ற விழியுற்ற மனையாள்கை யதினல்கினன்.

* * * *

நம்பத்தி கண்டீச வருள்செல்வ மிதுவென்ன களிபெண்ணினர்

என்பனவற்றால் உணர்க. சிலர் வேறு விதமாகவும் இதனைக் கூறுவர். அது அடியிற் குறித்தவாறும். மாயூரத்தை அடுத்த மூவலூரில் ஆதித்தன் என்ற ஒரு பிராமணன் இருந்தான். அவன் பலர் இகழத்தக்க காரியங்களைச் செய்தான். அவ்வூரார் அவனை ஜாதிப் பிரஷ்டம் செய்தார்கள். அக்கால் அவன் மனைவி கர்ப்பவதியானாள். ஆதித்தன் திடீரென இறக்கவே அவ்வூர் அந்தணர், புருஷனிறந்த பிறகு அவள் கருவுற்றனள் என்று அடாப்பழி சுமத்தி ஊரைவிட்டு விரட்டி விட்ட

தாரதலத்தி லுள்ள தமிழ்க்குற்ற மெல்லாம்
அரவும் அரமாயிற் றன்றே—இராவணன்மேல
அம்பினால் வீழ்வித்தான் அடிபணியும் ஆதித்தன்
கம்பநாட் டாள்வான் கவி

ஆதவன் புதல்வன் முத்தி அறிவினை அளிக்கும் அண்ணல்
போதவன் இராம காதை புகன்றருள் புனிதன் மண்மேல்
கோதவம் சிறிது மில்லான் கொண்டன்மால் தன்னை ஒப்பான்
மாதவன் கம்பன் செம்பொன் மலரடி தொழுது வாழ்வாம்

இம்பரும் உம்பர் தாமும் ஏத்திய இராம காதை
தம்பமா முத்தி சேர்தல் சத்தியம் சத்தி யம்மே
அம்பரம் தன்னின் மேவும் ஆதித்தன் புதல்வன் ஞானக்
கம்பன்செங் கமல பாதம் கருத்துற இருத்து வோமே.

இந்த நான்கு பாக்களும் தமிழ் இராமாயணத்தில் விடைகொடுத்தபடலத்தின் பின்வரையப்பட்டுள்ளனவென்றும், இவையிற்றை இராமாயணத்தின் சிறப்புப்பாயிரமெனக் கொள்ளலாம என்றும் *செந்தமிழ் கூறுகிறது.

இவற்றுள் கடைசி இரண்டு செயுள்களாலும் கம்பருடைய பிதாவின் பெயர் ஆதித்தன் என்று நன்கு விளங்குகிறது. இரண்டாம் செய்யுளிலுள்ள ஆதவன் என்பது ஆதித்தன் என்றதன் பிரதி நாமம் என்று கொள்ளல் வேண்டும். முதற் செய்யுளில் திருவழுந்தூர் நன்னாட்டைச்சேர்ந்த மூவலூர் வாசியாகிய குணாதித்தன் புத்திரன் இராம காதையைப் பாடினான் என்று சொல்லப்பட்டிருக்கிறது. ஆதித்தன் என்பது கம்பருடைய பிதாவின் பெயரென்றே முற்கூறிய மேற் கோள்களால் ஏற்படுதலால், ஆதித்தன் என்பதற்கு முன்னுள்ள குணம் என்றது, அச்சொல்லுக்கு

*செந்தமிழ்—III பக்கம் 52.

அடைமொழியா யமைந்ததாம். சிலர் குணாதித்தன் வேறு, ஆதித்தன் வேறு என்று அபிப்பிராயங் கொள்ளுகின்றனர். காரார் காகுத்தன் கதையைப் பாடிய கம்பரின் தாதையாகிய குணாதித்தன், ஆதித்தனே என்று கொள்வது ஏற்புடைத்தாம். இங்குக் குறித்த ஆதித்தன் என்ற பெயர்பற்றிப் போலும் சில உவச்சர்கள் தங்களைச் சூரிய குலத்தவரென்கின்றனர். மதுரைச் செல்லத் தம்மன் கோவிற் பூசாரிகள் தாங்கள் கம்பருடைய வழியினரென்றும் சூரிய குலத்தினரென்றும் கூறுதல் இங்கு அறியத்தக்கது. இது நிற்க.

உவச்சருடைய வீட்டில் வளர்ந்து வருநாளில் கம்பருக்கு வித்தியாப்பாசம் செய்யவேண்டிய காலம்வந்தது. வருதலும், அந்த உவச்சன் அறிஞனாயிருக்கும் அப்பையனை, அடைந்தவரை ஆதரிக்கும் அண்ணலும், திருவெண்ணெய் நல்லூர் வாசியும், வேளாள குலதிலகரும், தனக்கு மிக வேண்டியவரு மான சடையப்ப வள்ளலிடம் கொண்டு போய்ச்சேர்த்தான். இவரைச்சிலர் சடையப்ப பிள்ளையென றும், வேறு சிலர் சடையப்பமுதலியார் என்றும் வழங்குவர். இங்குக் கூறிய திருவெண்ணெய் நல்லூரென்பது கம்பர் காலந்தொட்டு கதிராமங்கலம் (கும்பகோணத்துக்குச் சமீபத் திலுள்ளது) என்ற பெயரால் வழங்கப்படுகிறது. "கம்பரை ஆதரித்த சடையப்பர் இருந்தவிடம சடையன் திடல் என்ற பெயரால் வழங்கப்படுகிறது. அந்தத் திட்டில் வீடுக ளிருந்தன வென்பதற்கு அடையாளங்கள் பலவுள. நிருதித் திக்கில் பெருமாள் கோவிலும், ஈசான்ய திசையில் சிவன் கோவி லும் இருந்து பாழாயின. பிம்பங்கள் கிடக்கின்றன. வட பாலுள்ள வயல்களுக்கு அகத்தீசர் சரணையென்றும், தண

டைக்காலம்மைச் சரிதை யென்றும் இரண்டு பெயருள வாதலின், அவற்றைக் கொண்டு சிவன் கோவிற்பெயர். நிசசயிக்கலாயிற்று. அத் திடலின் தென்புற வயலுக்குக்கழு நீர்ப்பாய்ந்தானென்று பெயர் கூறுகிறார்கள். அதனைக் கம்பர்

முட்டி லட்டில் முழங்குற வாக்கிய
நெட்டு லைக்கழு நீர்நெடு நீத்தந்தான்
பட்ட மென்கமு கோங்கு படப்பைப்போய்
நட்ட செந்நெலி னூறு விளையுமே.

என்றபாடலில் அமைத் திருத்தலையும் நோக்கிஅறிக.

அன்றியும் அவ்வூர் வெள்ளைப் பிள்ளையார் கோவிலில் இருக்கிற செப்பு விக்கிரகத்தின் பீடத்தில் வெண்ணெய் நல்லூர்ப் பிள்ளையார் என்ற எழுத்துக்கள் வெட்டி யிருப்பதால், கதிரா மங்கலம் என்பதே திருவெண்ணெய் நல்லூர் எனவழங்கப்பட்டு வந்ததென்பது தெளிவாகிறது" என ஒருநண்பர் எழுதிப் போந்ததும் இங்கு நோக்கத்தக்கது.

இதுகாறும் கதிரா மங்கலத்தில், திருவெண்ணெய் நல்லூரில் இருக்கத்தகும் சில அடையாளங்கள் இருப்பனவாக அறிந்தோம். இனித் திருவெண்ணெய் நல்லூர் எக்காரணத்தால் கதிராமங்கலமென வழங்கலாயிற்று எனச் சிறிது கூறுவாம். ஒருசமையம் கம்பர் தமதில்லக்கிழத்தி சிகர்த்த வல்லி என்பவளோடு திருவெண்ணெய்நல்லூரில் ஒருகூரை வீட்டில்வசித்துவந்தார். அவவீட்டின் கூரை நாளடைவில் இதல்அரித்துக் கெட்டுப்போயிற்று. ஒருநாளிரவில் மழை வரும்போல் தோன்றிற்று. அதனை அறிந்த சடையப்பர்

வைக்கோல் கைக்கு எட்டாத தூரத்தில் இருந்ததால் பழுத்திருந்த நெற்கதிர்களைத் தூரோடு அறுத்து வந்து கம்பர் வீட்டுக் கூரையை உடனே வேயுமபடி வேலையாளர்க்குக் கட்டளை இட்டார். பணியாளர்கள் அவர் ஆணையின்படி செய்து கதிர்களின் தலைகள் கூரையின் உட்புற மிருக்குமாறு வேய்ந்து சென்றனர். கம்பர் மறுநாட்காலை விழித்து மேலே பார்த்து ஆச்சரியமுற்று "கதிர்வேய் மங்கலமாய் இருக்கிறதே" என்றார். அவர் கூறியதே அவ்வூரின் பிற கால நாமமாயிற்று. இவ்விஷயம்,

"தனதானியத்தில் உயர்ந்தோர்கள் தாமமென்னும் செருக்கையோ
வினவாது இவரின் நெற்கதிரால் வேய்ந்தார் வல்லி வீடு"

என்று கூறும் சோழ மண்டல சதகத்தால் வெளியாகிறது. கதிர்வேய்மங்கலம் என்பதே கதிராமங்கலம் என்று மருவி வழங்கிவருகிறது.

சடையப்பரை அடைந்த கம்பர் அவர் வீட்டுச் சிறுரோடு நாடோறும் திருவெண்ணெய் நல்லூருக்கு அடிச சமீபத்திலுள்ள ஓரூர்க் கணக்காயரிடம் ஒழுங்காகக் . வி பயின்றுவருவார் ஆயினர். ஒரு சமயம், கம்பர் திருவழுந்தூர் உவச்சனைக் காணப் புறப்பட்டுச் செல்லுகையில் வழியில் உள்ள க்ஷேத்திர பாலபுரத்தைச் சமீபிக்கவும் பொழுது விழவே, அங்கு இரவிற்றங்குவதாக நிச்சயித்தார். அங்கிருந்த வேப்பமரத்தில் ஏறி உட்கார்ந்திருந்தவர், சமமாயிருந்தால் தூங்கிவிடக் கூடுமென்றஞ்சி அன்று தமக்குப் பாடமாகிய புலான் மறுத்தல் என்ற அதிகாரத்துப் பத்துத்திருக்குறளையும் மனப்பாடம் செய்துகொண்டிருந்தார். அன்றிரவு அக்

காளிதேவிக்குப் பூசை செய்வதற்காகச் சிலர் ஆடுகளோடு அங்கு வந்திருந்தனர். அவர்கள் அங்ஙனம் பூசைசெய்து ஆடுகளை வெட்டிப் பலியிடப்போகும்பொழுது காளிதேவி பூசாரிமேல்ஆவேசங்கொண்டு, "புலால் மறுத்தல் வேண்டும்" என்று அங்கொருத்தன் சொல்லிக் கொண்டிருக்கிறான். அது எனக்கும் சம்மதமாகும். ஆடுவெட்டாமலே நான் திருப்தி அடைந்தேன்" என்று கூறினள். பூசை கொடுக்க வந்தவர் திரும்பிச் சென்றார்கள். அயர்ந்து தூங்கிய கம்பரைக் காளிதேவி எழுப்பி, "குழந்தாய்! நீ சிறந்த புத்திசாலி ஆதலால் தமிழுலகுக்குப் பேருபகாரியாக இருக்க உனக்கு நான் அருள் புரிந்தேன்" என்று கூறிச் சில மந்திரங்களையும் உபதேசித்து மறைந்தருளினள். இங்ஙனம் தேவி அருள் பெற்ற கம்பர் தமது பிரயாணத்தை முடித்துக் கொண்டு வெண்ணெய் நல்லூர் அடைந்தனர் என்று கூறுவதும் உண்டு.

கம்பருக்குக் காளிதேவியின் அருள் கிடைத்தவரலாற்றை வேறு விதமாயும் கூறுவர். அது வருமாறுகாண்க: கம்பர், சடையப்பருடைய புதல்வருடன் வயிரவபுரம் என்ற ஊரிலுள்ள பள்ளிக்கூடத்தில் ஒரு ஆசிரியரிடம் கல்வி பயின்று வந்தார். அவ்வாசிரியருக்கு ஒரு கம்பம் கொல்லை உண்டு. ஒவ்வொரு நாளும் ஒவ்வொரு பையன் அவ்வாசிரியரது கம்பம் கொல்லையைக் காத்து வருவது வழக்கம். அங்ஙனமே கம்பரும் காத்துவந்தார். அவ்வாறு காத்து வருகையில், கம்பர் ஒருநாள், அயர்ந்து தூங்கிவிட்டனர். அவ்வூர்க் காளிங்கராயன் என்பவனது குதிரை கம்பங் கொல்லையில் மேய்ந்து கொண்டிருந்தது. விழித்தெழுந்த கம்பர், நிகழ்ந்ததைக்

கண்டு, தமது ஆசிரியர் தம்மைக் கோபிப்பர் என்றஞ்சி ஒன்றும் தோன்றாமல் தம் முன்னிருந்த காளிதேவியின் சந்நிதானத்தினின்று தேம்பித் தேம்பி அழுதனர். தேவி அவருடைய வருத்தத்துக்கு மனமிரங்கிப் பிரத்தியக்ஷமாகி, "குழந்தாய்! அழாதே" என்று கூறித் தமிழ்த் தெய்வத்துக்குரிய பிஜாக்ஷரத்தை அவர் நாவிற் பொறித்து அருள் புரிந்து மறைந்தனள். பிறகு கம்பர் குதிரையைத் துரத்தியும் அது போகாததால்,

> வாய்த்த வயிரபுரி மாகாளி அம்மையே
> ஆய்த்த வரையில் அணிதிசழக் —காய்த்த
> கதிரைமா ளத்தின்ற காளிங்கன் ஏறும்
> குதிரைமா ளக்கொண்டு போ

என்றுபாட, அக்குதிரை அங்கு விழுந்து இறந்தது.

பிறகு இவ்விஷயத்தை அறிந்த ஆசிரியர் அங்கு ஓடி வந்து கம்பரை நோக்கி 'நீ செய்த இக்காரியத்தால் எனக்குப் பொல்லாங்கு நேர்ந்தது. காளிங்கன் என்னைச் சும்மா விடான். யான் செய்வேன்?' என்று கூறி வருந்தினர். அவர் வருத்தத்தைப் போக்க எண்ணிய கம்பர், அச்செய்யுளின் கடைசி அடியை மாற்றிக் 'குதிரைமீளக்கொண்டுவா' என்று பாடவே, குதிரை உடனே உயிர்த்தெழுந்தோடியது. முற்கூறியசெய்யுளைக் கம்பரும் சடையப்பரும் வயலைச் சுற்றிப் பார்க்கையில் சடையப்பர் வயலில் குதிரை மேய்ந்து கொண்டிருக்கையில் நம்புலவர் பாடினர் என்றும், சடையப்பருடைய வேண்டுகோளின்படி கடைசி அடியை மாற்றிப்பாடிக் குதிரையை உயிர்ப்பித்தனர் என்றும் சிலர் கூறுவர்.

இங்குக் கூறியபடி கம்பருக்குக் காளிதேவியின் அருள் உண்டானதாகக் கூறும் வரலாறுகள் இரண்டில், எது உண்மையானது என்று பார்ப்போம். கம்பர் தெய்வ வரத் தாற் கவிபாடிக் குதிரையை முதலில் மாளும்படிக்கும் பிறகு உயிர் மீளும் படிக்கும் செய்ததை இக்காலத்தார் நம்பார். கம்பர் தெய்வ கடாக்ஷத்தால் எல்லாச் சக்தியும் உண்டாகப் பெற்றார் என்று அவருக்குப் பிற்காலத்தார் நம்பியதே இதற்குக் காரணம் என்று தோன்றுகிறது. அன்றியும், கம்பர் வாழ்நாள் முதலிலும் இறுதியிலும் சடையப்பரையே பற்றியதாகக் கர்ணபரம்பரை வழக்குண்மையாலும், வாய்த்த வயிரபுரி என்ற செய்யுளைப் பொய்யாமொழிப்புலவர் பாடினதாகத் தமிழ் நாவலர் சரிதை கூறுகின்றதாலும், இத்தகைய பல அற்புதங்கள் பொய்யாமொழிப் புலவர் செய்ததாகச் சொல்லிக் கொள்ளப் படுதலாலும், இச்செய்யுட்கும் கம்பருக்கும் சம்பந்தம் இல்லையென்று கூறவேண்டியதிருக்கிறது.

ஒரு நாள் திருவெண்ணெய்நல்லூரில் சடையப்பர் வீட்டுவாசற் குளத்தில் நீந்தி வரும் எருமை மாடுகளில் ஒன்றைக் கம்பர் கண்டு,

மோட்டெருமை வாவிபுக முட்டுவரால் கன்றென்று
வீட்டளவும் பால்சொரியும் வெண்ணெயே நாட்டில்
அடையா நெடுங்கதவும் அஞ்சலென்ற சொல்லும்
உடையான் சடையப்பன் ஊர்

என்று பாடினர் என்ப. இது "கம்பர் தெய்வ வாக்கினாற் கவி சொல்லிய நாளிற் பாடிய வெண்பா" என்ற

தலைப்பின் கீழ்த் தமிழ் நாவலர் சரிதையிற்காணப்படுகிறது. இதுவே கம்பர் தம ஆயுளில் முதல் முதலிற் பாடிய செய்யுள் போலும்.

கம்பர் இளமைப் பருவத்தில் இலக்கிய இலக்கண நூல்களைக் கற்கவே இல்லை என்றும், காளி தேவியின் அருளாலேயே திடீரெனக் கவிபாடும் தன்மை உண்டாகப் பெற்றாரென்றும் பலர் கூறுவர். கம்பர் பாடிய இராமாயணத்தில், தமிழிலுள்ள திருக்குறள், சிலப்பதிகாரம், சிந்தாமணி, புறநானூறு முதலியவற்றினின்று சிலவிடத்துக் கருத்துக்களையும், சிலவிடத்து ஆங்குள்ள சொற்றொடர்களையும் எடுத்துத் தன் நூலில் பலவிடங்களிலும் ஆசிரியவசனமாக மிளிரவைத்திருத்தல் தெற்றென வெளிப்படுதலால், கம்பர் அந் நூல்களைப் பார்த்தே இருக்க வேண்டுமென்று புலப்படுகின்றது. இங்கு நாம் கூறியதற்குச் சில மேற்கோள்கள் மட்டும் கூறுவோம்.

> கண்ணொடு கண்ணிணை நோக்கொக்கின் வாய்ச்சொற்கள்
> என்ன பயனு மில

என்ற திருக்குறளின் கருத்து, கம்பர் செய்யுளில்,

> எண்ணரு நலத்தினா ளினைய ணின்றுழி
> கண்ணொடு கண்ணிணை கௌவி யொன்றையொன் (று)
> உண்ணவு நிலைபெறா துணர்வு மொன்றிட
> அண்ணலு நோக்கினா னவளு நோக்கினாள்

என்று அமைந்திருத்தலும்,

> மயிர்நீப்பின் வாழாக் கவரிமா அன்னார்
> உயிர்நீப்பர் மானம் வரின்

என்ற தெய்வப்புலவரின் கருத்து, இராமாயணத்தில்,

> மான நோக்கின் கவரிமா அனைய நீரார்

என்றமைந்திருத்தலும்

> பிறப் பொக்கும் எல்லா உயிர்க்கும் சிறப்பொவ்வா
> செய்தொழில் வேற்றுமை யான்

என்னும் திராவிடவேதத்தின் கருத்து, கிஷ்கிந்தா காண்டத்தில்,

> இனைய தாகலின் எக்குலத் தியாவர்க்கும்
> வினையி னல்வரும் மேன்மையும் கீழ்மையும்

எனப் பயின்றுள்ளதும காண்க. இன்னும,

> தேனிரைத்துயர் மொய்வரைச் சென்னியின்
> மேனிரைத்து விசும்புற வெள்ளிவெண்
> கோனிரைத்தன போற்கொழுந் தாரைகள்
> வானிரைத்து மணந்து சொரிந்தவே

என்ற சிந்தாமணியின் கருத்தே,

> புள்ளிமால்வரை பொன்னென நோக்கிவான்
> வெள்ளிவீழிடை வீழ்த்தென தாரைகள்
> உள்ளிஉள்ள வெலாமுவந் தீயுமவ்
> வள்ளியோரின் வழங்கின மேகமே

என்று பாலகாண்டச் செய்யுளில் அமைந்திருக்கிறது.

மற்றும், சிலப்பதிகாரத்தில்,

> மாசறு பொன்னே வலம்புரி முத்தே
> காசறு விரையே கரும்பே தேனே
> அலையிடைப் பிறவா அமிழ்தே என்கோ

என்ற அடிகளைக் கவிச்சக்கரவர்த்தியார்,

> 'பொன்னே தேனே பூமகளே காணென்று'
> 'உவரிவாய் அன்றிப் பாற் கடலுதவிய அமுதே'

என அமைத்திருத்தலையும் நோக்கி உணர்க. இன்னும், இத்தகைய பல உதாரணங்கள் இருப்பனவாகப் புலவர் பெருமக்கள் அபிப்பிராயம் கொள்வதால், கம்பர் இளமையில் பலநூல்களை நன்கு பயின்றிருக்க வேண்டும் என்பதொருதலை.

இனி இப்புலவர்க்குக் கம்பர் என்று பெயர் வந்ததற்குப் பலர் பல காரணங்கள் கூறுவர். அவற்றுள் சிலவற்றை இங்குக் கூறுவோம். நாம் முற் கூறியபடி குதிரைமாளவும் மீளவும் பாடியதைக் கேட்ட காளிங்கன் அச் செய்தியைத் தனது அரசனாகிய சோழனுக் கறிவிக்க, அவன் கம்பரை அழைப்பிக்க, அவர் கம்பும் கையுமாய் வந்து நிற்பதைப் பார்த்து இக்கம்பனா இப்படிப்பாடியவன் என்று ஆச்சரியத்துடன் வினவ, அன்றுமுதல் அவர்க்குக் கம்பர் என்று பெயர் வந்ததெனக் கூறுவர் சிலர். கம்பங்கொல்லையைக் காத்ததால் அவர்க்குக் கம்பர் என்ற நாமம் வந்ததென்பர் சிலர். திருவழுந்தூரில் ஓர் கம்பத்தினடியிற்கிடந்த குழந்தையை ஓர் உவச்சன் எடுத்துத் தன் மனைவிகையிற் கொடுத்துக் கம்பத்தினடியிற் கிடந்த அக்குழந்தைக்குக் கம்பன் என்று பெயரிட்டான் என்பர் முருகதாசர். இதனை,

*கம்பத்தின் அடியிற் கிடந்திட்ட தாற்கம்ப னென்னப்பெயர்*
*உம்பர்க்கு மெய்தாத பேறான பிள்ளைக் குவந்தோதினார்*

என்று கூறியதால் அறிக. இன்னும் இப் புலவருடைய பெயர்க்குப் பல காரணங்கள் கூறுப. இங்குக் கூறிய முதல் இரண்டு காரணங்களும், கம்பர் என்றபெயரின் தோற்றுவாய்க்கு ஏதுவாய் இருக்குமாயின், 'அப்பெயர் வருமுன்னர் அவருக்கு இருந்தபெயர் யாது' என ஒருவினாக்கிளம்பும். அதற்கு விடையின்றாகலின், இடுகுறிபற்றியோ காரணம் பற்றியோ சிறுவயது முதலே இவர்க்குக் கம்பர் என்ற பெயர் வழங்கிவந்திருக்க வேண்டுமென்று கூறுதலே பொருத்த முடையதாம்.

# 3. இராமாயணம் பாடியது.

கம்பர் இராமாயணம் பாடியதாக வழங்கும் வரலாற்றை இங்கு எடுத்துரைப்போம்: தக்க பருவம் அடைமுன் கம்பர் பல நூல்களை ஓதி யுணர்ந்து கவிபாடும் ஆற்றலடைந்து சோழனுடைய வித்வான்களிற் சிறந்து விளங்கினர். அப்பொழுது கம்பரை ஆதரித்த பிரபுவாகிய சடையப்பர் தாம் செப்பின் கம்பர் சிரத்தையொடு செய்வார் என நினைத்துச் சோழனை அணுகி, "நமது கம்பரது ஆற்றலை உலகறியும் வண்ணம் ஏதேனும் ஒரு பெரிய நூலை இயற்றச் செய்ய வேண்டும். அவ்வாறு எழுதத் தரும் நூல் இராமாயணமாயின் அது தமிழர்க்குப் பெரிய உபகாரமாயிருக்கும்" என்று கூறினர். சோழனும் அவ்வாறு செய்வதாய் ஒப்புக்கொண்டு ஒருநாள் கம்பரையும் ஒட்டக்கூத்தரையும் அழைப்பித்து, "புலவீர்! நமது புலமை மாண்பைத் தமிழுலகமறிந்து உவக்கும் வண்ணம் வடமொழி இராமாயணத்தைத் தமிழில் செய்யுளாக இயற்றித் தந்தருள வேண்டும்" என்றான். அப்புலவர் பெருமக்கள் இருவரும் தனித்தனி அவ்வாறு செய்வதாகச் சம்மதித்துச் சென்றனர்.

கம்பர் தாம் ஒப்புக்கொண்ட வேலையைச் செய்யாதிருந்ததையும் கூத்தர் மிக்க விரைவாகப் பாடி வருதலையும் சோழன் கேள்வியுற்று, அவ்விருவரையும் திரும்பவும் வரவழைத்து அவரவர் பாடிய அளவு யாது எனத் தனித்தனி வினவினன். கூத்தர், தாம் முதல் ஐந்து காண்டங்களும் ஆறாவது காண்டத்தில் 'கடல் காண் படலம்' வரையில் பாடியிருப்பதாகக் கூறினர். அச்சமயம் வரை இராமாயணம் எழுதப்பிள்ளையார் சுழிகூடப் போடாதிருந்த கம்பர், தாம் கூத்தருக்குப் பின்னிட்டதாகக் கூறக்கூடாதென நினைத்து, தாம்

கடல் காண் படலத்துக்கும் அப்பாலுள்ள 'திருவணைப்படலம்' வரை பாடினதாகச் சொன்னார். உடனே சோழன், கடைசியில் எழுதியதில் ஞாபகமுள்ள ஒரு செய்யுளைச் சொல்லும்படி கம்பரைக் கேட்டுக் கொண்டான். கம்பர் நிமிஷ கவி ஆதலின்,

குமுத னிட்ட குலவரைக் கூத்தரில்
திமித மிட்டுத் திரியுந் திரைகடல்
தூமித மூர்புக வானவர் துள்ளினார்
அமுத மின்னும் எழுமெனும் ஆசையால்

என்ற செய்யுளைக் கூறி இனிது பிரசங்கித்தனர். இச்செய்யுளிலுள்ள 'தூமி' என்ற சொல் இலக்கியப் பதம் அன்று என்று கூத்தர் குறை கூறினார்.

கம்பர் அதனை உலக வழக்குச் சொல் என்று கூறக், கூத்தர், அது உலக வழக்காயின் அதன் வழக்கத்தைப் புலப்படுத்த வேண்டுமென்று வற்புறுத்தினார். மறுநாட் காலையிற் கம்பர், சோழனையும் கூத்தரையும் மற்றப் பெரியோர்களையும் கூட்டிக்கொண்டு அவ்வூர் வீதியிற் செல்லுகையில், ஒரு வீட்டில் தயிர் கடைந்து கொண்டிருந்த ஓரிடைச்சி, தன் மக்களை நோக்கி, "மக்காள்! மோர்த்தூமி தெறிக்கும். எட்டி நில்லுங்கள்" என்று கூறினாள்.

இதனைக் கேட்ட யாவரும் பெரிதும் ஆச்சரியப்பட்டுக் கம்பரை வியந்தனர். கூத்தர் மட்டும் வெட்கமும் துக்கமும் அடைந்தார். இங்ஙனம் இடைச்சியாய் வந்தது கலைமகளெனப் பலர் கூறுவர்.

முற்கூறிய நிகழ்ச்சி நடந்தவுடன கம்பர்சும்மாஇருக்கக் கூடாதென்று எண்ணி, இராம கதை பாட ஆரம்பித்

தார், அங்ஙனம் எழுதுகையில் 'குமுதனிட்ட' என்ற செய்யுளின் கருத்தை ஆற்றுப்படலத்தில்,

> மலையெடுத்து மரங்கள் பறித்துமா
> மலைமுதற்பொருள் யாவையும் ஏந்தலால்
> அலைகடற்றலை அன்றணை வேண்டிய
> நிலையுடைக்கவி நீத்தமந் நீத்தமே

என்னும் செய்யுளில் அமைத்தனர் என்று சிலர் கூறுவர். கம்பர் எழுதிய நூலுக்கு முதனூல் வடமொழி இராமாயணமாதலின் அதனை மொழிபெயர்த்தற்கு அம்மொழி வல்லுநரையும் உடன் கொண்டார். இதனை 'மறை வேதியர் உடன் ஆராய்ந்து' என்று கூறும் இராமாயணத் தனியன் வெளியிடும். அன்றியும் வடமொழியிலுள்ள வால்மீகி ராமாயணம், ஆனந்த ராமாயணம், அத்யாத்ம ராமாயணம் என்பன [illegible], கம்பர் வால்மீகத்தையே முதனூலாகக் கொண்டார் [illegible]. இவ்விஷயத்தை இராமாயணத்தின் பாயிரத்தில் [illegible],

> தேவ பாடையி னிக்கதை செய்தவர்
> மூவ ரானவர் தம்முளு முந்திய
> நாவி னானுரை யின்படி நான்தமிழ்ப்
> பாவி னாலிது வுணர்த்திய பண்பரோ

என்னும் இக்கவியால் அறியலாகும். தவிர,

> நாரணன் விளையாட் டெல்லாம் நாரத முனிவன் கூற
> ஆரணக் கவிதை செய்தான் அறிந்தவான் மீகி என்பான்
> சீரணிச் சோழ நாட்டுத் திருவழுந் தூரில் வாழ்வோன்
> தாரணிக் கொடையான் கம்பன் தமிழினாற் கவிசெய்தானே

என்ற இராமாயணத்துத் தனியனாலும் இவ்விஷயம் பெறப் படும்.

நமதாசிரியர் வால்மீகத்தையே முதனூலாகக் கொண் டிருப்பினும் ஈயடித்த இலிகிதர் மாதிரி வடமொழியிலுள்ள படியே தமிழில் மொழி பெயர்க்க வில்லை. ஆனால் தமிழர் ஒழுக்க வழக்கங்களுக்கு இயைந்தவாறு பல விடங்களில் முதனூலுக்கு மாறு படக் கூறினர். இதற்கு இரண்டொரு உதாரணங்கள் மட்டும் கூறுவோம்.

சிவதனுசை முறித்த தருணத்துக்கு முன்னர் இராமரும் சீதையும் ஒருவரை ஒருவர் கண்ணுற்றதாக வால் மீகர் கூறவில்லை. காதலர் ஒருவரை ஒருவர் காணுமலே இருக்குமிடத்து மெய்க் காதல் இல்லாமற் போமாதலின் தமிழரின் சிறந்த மணவியலுக்கு மாறுபடாவாறு இராமரும் சீதையும் ஒருவரை ஒருவர் எதிர்ந்துள்ளார் என்பர் கம்பர். இதனை,

'எண்ணரும் நலத்தினள்' என்ற செய்யுளால் உணர்க. இனி ஒருவரை ஒருவர் சுயம் வரத்துக்கு முன்னரே காத லித்தார் என்பதை,

பருகுமங் நோக்கெனும் பாசத் தாற்பிணித் (து)
ஒருவரை ஒருவர்தம் முள்ளம் ஈர்த்தலால்
வரிசிலை அண்ணலும் வாட்கண் நங்கையும்
இருவரும் மாறிப்புக இதயம் ஆயினர்

என்றதனால் உணர்த்தினர்.

உலக மாதாவாகிய சீதா தேவியை இராவணன் கை கொடு தூக்கிச் சென்றான் என்னும் முதனூற்கு மாறுபடக் கம்பர்,

> ஆண்டா யிடைத்தீ யவன்ஆ யிழையைத்
> தீண்டால் எனும்மே லுரைசிந் தைசெயாத்
> தூண்டாள் எனலாம் உயர்தோள் வலியாற்
> கீண்டான் நிலம்யோ சனைகீ ழொடுமேல

என அமைத்தனர்.

சூளாமணிப்படலத்தில்,

> என்னொ டாருயிர் மெண்கிளிக் கியார்பெய ரீகேன்
> மன்ன! என்றலும் மாசறு கேகயன் மாதென்
> அன்னை தன்பெயர் ஆகென அன்பினொ டந்நாள்
> சொன்னமெய்ம்மொழிசொல்லுதிமெய்ம்மைதொடர்ந்தோப்

என்ற செய்யுளில் குறித்த விஷயம் முதனூலில் இல்லை எனக் கூறுவர் வடநூலார். வால்மீகத்துக்கும் கம்பராமாயணத்துக் கும் இடை இடையே உள்ள வித்தியாசங்களை எடுத்தெழுத வேண்டுமாயின், அவை வேறு நூலாக அமையுமாதலால் இம்மட்டோடு நிறுத்துவோம்.

கம்பர் தாம் இராமாயணம் பாடுகையில் இரவெல்லாம் வடமொழி இராமாயணத்தை ஆராய்ந்து பகலெல்லாம் தமிழ்க் கவிகளைப் பகலொன்றுக்கு எழுநூறு வீதம் பாடி னர் என்பர் இது,

> விழுந்த ஞாயிறு எழுவதன் முன்மறை வேதியருடனாய்ந்(து)
> எழுந்த ஞாயிறு விழுவதன் முன்கவி பாடின தெழுநூறே

என்ற செய்யுளின் அடிகளால் விளங்கும்.

"கம்பர் இராமாயணம் பாடுகையில் காளிதேவியைப் பந்தம் பிடிக்கும்படி பாடிய பாட்டு" என்ற தலைப்பின் கீழ்

'ஒற்றியூர் காக்க உறைகின்ற காளியே
வெற்றியூர் காகுத்தன் மெய்ச்சரிதை—பற்றியே
நந்தாமல் எழுதுதற்கு நல்லிரவில் மாணுககா
பிந்தாமற் பந்தம் பிடி'

என்றவெண்பா தமிழ் நாவலர் சரிதையிற் காணப்படுகிறது.

கம்பர் இராமாயணத்தைத் திருவழுந்தூரிலும் திருவெண்ணெய்நல்லூரிலும் இருந்து பாடினார் என்பதனை,

'மேவரிய சோழநாட்டுத் திருவழுந்தூரில் வாழ்வோன் ..........கம்பன் தமிழ்நூற் கவி செய்தான்' என்றதாலும், 'சடையன் வெண்ணெயுநல்லூர் தன்னிலே கம்பநாடன் பண்ணிய இராமகாதை' என்பதாலும் அறியலாம்.

கம்பர் இராமாயணத்தை யுத்தகாண்டத்தோடு முடித்ததைக் கேள்வியுற்ற கூத்தர், தாம் எழுதிய இராமாயணம், கம்பராமாயணத்தின் முன் [illegible] தெரிந்து, தாம் எழுதியதைக் கொஞ்சம் கொஞ்சமாகக் கிழித்தெறிய ஆரம்பித்தார். தற்செயலாய் ஒருநாள் கம்பர் கூத்தரைச் சந்தித்த சமயம், அவர் செய்யும் காரியத்தை அறிந்து கிழியாதிருக்கின்றும் அவரைத் தடுத்து, கிழித்தது போக மீதியாயிருந்த உத்தரகாண்டத்தைத் தாம் எழுதிய ஆறு காண்டங்களோடும் சேர்த்து ஏழாவது காண்டமாக வைக்கும்படி ஏற்பாடு செய்தார்.

கம்பர் எழுதிய ஆறு காண்டத்துச் செய்யுட்களின் மொத்தத் தொகை 10516 ஆகும். ஒட்டக்கூத்தர் எழுதிய செய்யுட்களின் தொகை, 1500. இவற்றுள், கம்பர் எழுதிய செய்யுட்களின்தொகை தற்போதுள்ள இராமாயண ஏடுகளில் மாறுபடுகின்றது: பிற்காலத்தார் செய்த இடைச் செருகலே இதற்குக் காரணம் என்ப.

இவ்வதிகாரத்திற் கூறியவற்றுள் சிலவிஷயங்களை ஆராய்வோம். சடையப்ப வள்ளலின் தூண்டுதலின்படி, சோழன் வேண்டக கம்பர் இராமாயணம் பாடியதாக இங்குக்கூறப் பட்டது. தம்மை ஆதரித்த சடையப்பவள்ளல் கூறியதைக் கம்பர் மறுத்திருப்பின், சோழன் சொல்லை அவர் கைக்கொள்வதெங்ஙனம்? சடையப்பர் அவரைச் சிறு வயது முதல் அன்னை போல் ஆதரித்தவர். அவர் சொல்லைக் கம்பர் மறுப்பர் என்றால், அவர் நன்றி கொன்ற பாவத்துக்குருள்ளாக வேண்டும். அத்தகைய தொழிலுக்குக் கம்பர் எஞ்ஞான்றும் உடன்படார். சடையப்ப வள்ளலாவது சோழனாவது கேட்டுக் கொண்டபடி அவர் பாடினார் என்பதற்கு அந்நூலில் ஆதாரமில்லை. சடையப்ப வள்ளலுக்குச் சரராமன் என்ற பெயர் இருத்தலால், அக்குலத்தார்க்கு இராம பக்தி உண்டு. ஆதலின் அது கம்பருக்கும் உண்டானதால் இராமாயணம் பாடியிருக்கலாம். கம்பர் இராமாயணத்தில,

> ஆசை பற்றி அறையலுற் றேனமற் றிக
> காசில் கொற்றத்தி ராமன் கதையரோ

என்றும்,

> ஆய்கடன் புகழ்ந்த நாட்டை அன்பெனும் நறவ மாந்தி
> மூங்கையான் பேசலுற்றான் என்னயான் மொழியலுற்றேன்.

என்றும் கூறியிருத்தலால் அவருக்கு இராமபக்தி மேலிட்டு இந்நூலைப்பாடினர் என்பதே பொருத்த முடைய தாம். பிறர்வேண்டுகோளின்படி பாடிய நூல்களில் அவ்விஷயத்தை வெளிப்படுத்தலே புலவர் பெருமக்களியல்பாதலினு லும் அத்தகைய விஷயம் இராமாயணத்தில் இன்மையினு லும் கம்பர் தாமேபாடினர் எனக்கொள்ளவேண்டும்.

கம்பரையும் ஒட்டக்கூத்தரையும் தனித்தனி இராமாயணத்தைப் பாடும்படி சோழன் கூறினன் என்பது பொருந்தாது. ஆளுக்குக் கொஞ்சமாகப்பாடச் சொன்னான் என்றால் அவ்விஷயம் சரியாய் இருக்கும். இருவரையும் செய்யச் சொன்னால் ஒரு விஷயத்தை இருவரும் செய்யாதொழிவர், வேலை நடவாது. ஆதலால் அரசன் இருவரையும் இராமாயணம்பாடும்படி சொன்னான் என்பதுபொருந்தாததாகும். இனி துளி என்பதற்கு துமி என்ற சொல்லை ஆகுபெயராகக் கம்பர் உபயோகித்திருப்பதை ஒட்டக்கூத்தர் அறியாமல் அதைப்பற்றி வாதந் தொடங்குதலும், கம்பர் தாம் எழுதியதற்குச் சமாதானம் கூறத்தெரியாது விழித்ததும் அறிஞர் ஒப்பத்தக்கதன்றாம். இவ்விஷயத்திற்குக் கலைமகள் இடைச்சியாக வந்துதவியது பெரும் ஆச்சரியமே.

இனிக் கம்ப ராமாயணத்தின்முன் தமது இராமாயணம் தலையெடாது என அறிந்து கூத்தர், தமது இராமாயணத்தின் ஆறுகாண்டங்களையும் கிழித் தெறிந்து விட்டுப் பின்னர் கம்பர் வேண்டுகோளால் ஏழாவது காண்டத்தை மட்டும் வைத்துக்கொண்டார் என்பது பொருந்துமா? கம்ப ராமாயணத்திலும் பலவிதத்திலும் தாழ்ந்தனவாக இருக்கும்

இராமாயணங்கள் பிற்காலத்தில் வெளிப்படவில்லையா? கம்பர் பாடியபிறகு, அவற்றை நாம் பாடக் கூடாதென்று சும்மா இருந்தார்களா? தாமரை பூத்தவிடத்து ஆம்பல் பூவாதிருக்கிறதா? இது நிற்க. கம்பரது இராமாயணமே சிறந்தது என்று எண்ணித் தாம் எழுதிய இராமாயணத்தின் ஆறு காண்டங்களையும் கிழித்தெறிந்த கூத்தர், ஏழாவது காண்டத்தைக் கம்பரிடம் கொடுப்பாரோ? கம்பர் எவ்வளவு தந்திரமாகக் கேட்டிருந்தாலும் கூத்தர், தமது செய்யுள்களில் ஒன்று கூடக் கொடுத்திருக்கமாட்டார் என்றே நினைக்கவேண்டியதிருக்கிறது. இதனால் கூத்தர்கம்பரினும் உயர்ந்தவராக நாம் கூறியதென்று கொள்ளற்க. கம்பரைப்போலவே ஒத்த சிறப்பினையுடையவர் ஆதலால் அவருக்கு வீண் அபவாதத்தைக் கூட்டுவித்தல் கூடாதென்றே நாம் இதனைக் கூறினோம். கூத்தருடைய கல்விச் செருக்கால் இத்தகைய கற்பனைக் கதைகள் நாளடைவில் வந்து தோன்றியிருக்க வேண்டுமென்று தெரிகிறது.

கம்பர் இரவில் வடமொழி இராமாயணத்தை ஆராய்ந்து பகலில் எழுநூறு செய்யுள்கள் வீதம் பாடினர் என்பது உயர்வு நவிற்சியே ஆகும். மனிதன் பல நாட்கள் பகலிலும் இரவிலும் தூங்காமலிருப்பது முடியாத காரியம். சாதாரணமாய் நாளொன்றுக்கு எழுநூறு வீதம் எழுத்தாணியால் ஓலையில் எழுதமுடியாதென்றால் கம்பர் முதல் முதலிற் பாடினும் எழுதுபவர் எங்ஙனம் எழுதினர்?

செய்யுள்களைப் பாடிப் பழகாதோர் இத்தகைய கதையை உண்டாக்கி விட்டார்கள் என்று தோன்றுகிறது. அல்லது கம்பருக்குப் பெருமை உண்டாக்க வேண்டுமென்று

அன்னோர் இப்படிச் சொல்லியிருக்கலாம். 'எழுநூறு' என்றதில் எழு என்பதை வினைத்தொகை ஆக்கிப் பொருள்கொண்டால், கம்பர் நாளொன்றுக்கு எழுநூறு பாடல்கள் இயற்றினர் என்பது ஒரு வேளை பொருந்துமென்று தோன்றுகிறது. 'இருநூறு' என்ற பாடபேதம் இருக்கிறதாகவும் சிலர் கூறுகிறார்கள். அது உண்மையாயின் பொருத்தமுடையதே.

இன்னொரு விஷயமும் இங்கு நோக்கத்தக்கது. நாளொன்றுக்கு எழுநூறு செய்யுள்கள் வீதம் பதினைந்துநாட்களில் இராமாயணத்தைப்பாடிப் பூர்த்தி செய்த கம்பர், தமது ஆயுளின் மீதிக்காலத்தில் எத்தனை லக்ஷ[illegible]கான செய்யுள்களைப்பாடி யிருக்கலாம். அங்ஙனம் [illegible]ருப்பதாகத் தெரியவில்லை. ஆதலால், கம்பர் பகலொன் [illegible]ழுநூறு பாடல்களைப் பாடினர்என்பது பொருத்தமுடையதென நயபமுடி[illegible]வில்லை.



# 4. இராமாயண அரங்கேற்றம்.

---

கம்பர் இராமாயணத்தை அரங்கேற்றியதாகக் கூறும் விஷயத்தை இங்குச் சுருக்கி வரைவோம்: தாம் இயற்றிமுடித்த இராமாயணத்தைச் சோழனுடைய சபையிற் கம்பர் படித்துக் காட்ட, அங்குற்ற அரசனும் பிறரும் கேட்டுக் களிப்புற்று, அந் நூல் வைஷ்ணவ நூலாதலின் ஸ்ரீ ரங்கத்திலுள்ள அச்சமயத்தார் முன்னிலையில் அரங்கேற்றின் நலமென்றனர். என்னலும், கம்பர் அரங்கமடைந்து அங்கிருந்த வைஷ்ணவருக்குத் தமது எண்ணத்தைத் தெரிவித்தனர். அவர்கள் தமிழிற் சிறந்த வித்துவான்களிடம் படித்துக்காட்டி அவர்களுடைய கையொப்பம் வாங்கி வரும்படி கேட்டுக் கொண்டார்கள். கம்பர் சிதம்பரம் அடைந்து, தில்லைவாழந்தணரிற் சிறந்த புலவர் சிலரிடம் தாம் வந்த காரணத்தை அறிவித்தார். அவர்கள், தங்களோடு சார்ந்த யாவரும் ஒன்று கூடிச் செய்தாலன்றித் தனித்துக் காரியமும் இயற்றமுடியாதென வெளியிட்டனர். அவர்கள் யாவரும் ஒன்று கூடும் தருணத்தை எதிர்பார்த்துக் கம்பர் பன்னெடுநாள் நடராஜரைப் பிரார்த்தித்த வண்ணம் அங்குக் காத்திருந்தனர்.

ஒரு நாட் காலை, தில்லைவாழந்தணரில் ஒருவருடைய குழந்தை அரவு தீண்டப்பட்டு இறந்ததால் தில்லை மூவாயிரவரும் ஓரிடத்திற் கூடினார்கள். அங்குக் கம்பர் சென்று தமது நூலை அரங்கேற்ற வேண்டுமென்னலும், அவர்கள், "நாங்கள் குழந்தையைப் பறிகொடுத் தலையும்போது உங்கள் இராமாயணம் கேட்பது தானா எங்களுக்கு வேலை?" என்னலும், கம்பர் தமது இராமாயணத்தைக் கேட்பின் இறந்த

குழந்தையைப் பிழைப்பிப்பதாகக் கூறினர். முதலிற் குழந்தையை உயிர்ப்பித்தால், பிறகு அந்நூலைப் பார்ப்பதாக அவர்கள் வாக்களித்தனர். கம்பர் தமது இராமாயண ஏட்டை அவிழ்த்து நாக பாச படலத்திற் சில செய்யுள்களை எடுத்தோதினர். பிறகு

ஆழியான் பள்ளி அணையே! அவன்கடைந்த
வாழி வரையின் மணித்தாம்பே!—ஊழியான்
பூணே! புரமெரித்த பொற்சிலையிற் பூட்டுகின்ற
நாணே! அகல நட.

மங்கையொரு பாகர் மார்பிலணி ஆரமே!
பொங்கு கடல்கடைந்த பொற்கயிறே!—திங்களொடும்
சீறியதன் மேலூரும் தெய்வத் திருநாணே!
மாறிய பண்பே இறங்கு.

பாரைச் சுமந்த படவரவே! பங்கயக்கண்
வீரன் கிடந்துறங்கு மெல்லணையே!—நாயகர்தம்
செஞ்சடையன் பூணும் திருவாபரணமே!
நஞ்சுடையாய்! தூர நட.

என்று வெண்பாக்களைப் பாடவே நாக விஷத்தால் மாண்ட குழந்தையினுயிர் விஷம் நீங்கப் பெற்று மீண்டது. கம்பரைத் தெய்வீகப் புலவரென மதித்த தில்லைவாழந்தணர், அவருடைய நூல் முழுவதையும் படித்துப் பார்த்துச் சில கேள்விகளைக் கேட்டனர். அவர்கட்கு ஏற்ற விடை கம்பர் ஈந்தனர், "நாடிய பொருள்கை கூடும்" என்ற செய்யுளில் 'நீறுபட்டழிய நீடிய அரக்கர் சேனை' என்றதற்குத் தங்கள் பரமசிவனது நீறுபட்டே அரக்கர் சேனை அழிந்தது என்று

சாதுரியமாகக் கூறிப் பிறகு தங்கள் சம்மதத்தைக் கொடுத்துக் கம்பரை வழியனுப்பி விட்டனர்.

அவர்கள் கொடுத்த சம்மதத்தைக் கண்டும் திருப்தி யடையாத அரங்கத்தார், திருநறுங் கொண்டை யென்னும் தலத்திலிருந்த சமணர்கள தமிழ்ப்புலமையும் சமயத் துவேஷமு முடையவர் ஆதலால், அவர்களுடைய கைப்பொப் பமும் வாங்கி வர வேண்டுமென்றனர். கம்பர் அவர்களிடம் செல்லவே, அவர்கள் சந்தோஷத்துடன் அவரை வரவேற்று இரண்டொரு கேள்விகள் கேட்டுக் கம்பர் கூறும் சமாதா னங்களால் திருப்தியடைந்து முடிவில், 'இப்பெரிய நூலில், எங்களுக்கென்ன ஆதாரமிருக்கிறது?' என்று வினவினர். கம்பர், தமது இராமாயணத்திலிருந்து ஒரு செய்யுளை எடுத் துக்காட்டி அதில் அருகக் கடவுளைப் பற்றிக் கூறியிருப்ப தை விளக்கினர். அவர்கள் கேட்டுக் களிப்பு மிக்கவராய்த் தங்கள் கைப்பொப்பம் கொடுத்தனுப்பினர். அதனைக்கண்டும் திருப்தியுறாது அரங்கத்தார் மாவண்டூரில் சிறந்த தமிழ்ப்புல வனை ஒரு கருமானிடம் சென்று கைப்பொப்பம் வாங்கி வரும்படி அவரை வேண்ட, அக்கருமானிடம் சென்றதும் வந்த காரியத்தைத் தெரிவிக்க, அவன் தன் மரபினர்க்கு அந்த நூலில் ஆதாரமேதேனுமுண்டோ வென்னக், கம்பர்

இருப்புக் கம்மியர்க் கிடைநெடு மூசியொன் றியற்றி
விருப்பிற் கோடிரால் விலகெனும் பகுதியின் விட்டான்
கருப்புக் கார்மழை வண்ணவக் கடுந்திசைக் களிற்றின்
மருப்புக் கல்லிய தோளவன் பின்னொரு மாயை

என்ற பாடலிலுள்ள விஷயத்தைக் கூறி, அவனை சந்தோ ஷத்தால் கைப்பொப்பம் கொடுக்கனுப்பினன்.

கம்பர் அதனை அரங்கத்தார்க்குக் காட்டினார். அதனைப் பார்த்த அரங்கத்தார் இன்னும்தஞ்சாவூரிலுள்ள அஞ்சநாட்சி என்னும் கணிகைபாற் கையொப்பம் வாங்கிவர வேண்டுமென்றனர். அவர்கள் கூறியபடியே கம்பர் அஞ்சநாட்சியைக் கண்டு தமது எண்ணத்தைத் தெரிவித்தனர். அந்நூலில் அவள் எமது குலத்தினர்க்கு ஏதேனும் ஆதாரம் உளதோ என்றுவினவ,கம்பர் அங்ஙன மிருந்ததை எடுத்துக்காட்டினர். அவள்மகிழ்ச்சி யுற்று, அந்நூற்குச் சாத்துச்கவியாக,

அம்பரா வணிசடை யரன யன்முதல்
உம்பரான் முனிவரால் யோக ராலுயர்
இம்பரா் பிணைக்கரு மிராம வேழுஞ்சேர்
கம்பராம் புலவரைக் கருதகி ருந்துமாம்

என்னும் ஒரு பாடலை எழுதிக் கொடுக்க அவர் அதனைக்கொண்டு வந்து அரங்கத்தார்க்குக் காட்டினர். அரங்கத்தார் பின்னும் சிலரிடம் அபிப்பிராயம் வாங்கி வரும்படி சொன்ன பிறகு, முடிவில் கம்பருடைய புதல்வனும் சிறந்த வித்துவானுமாகிய அம்பிகாபதியின் அபிப்பிராயம்அந்நூற்கு இன்றியமையாதது எனக்கூறக் கம்பர், அம்பிகாபதியின்சாத்துக்கவியை வேண்டினர். அவன் வேடிக்கையாக "இந்நூலில் எனக்கென்ன ஆதாரங்கள் உள்ளன" என்று கேட்டான். கம்பர் தன்மைந்தன் கேட்ட தன்மைக்கேற்பவும் வித்வத் சாதுரியமாயும் "அம்பிகாபதி! உனக்கும் அதில் நான்கு அதிசயம் அமைத்திருக்கிறேன். அவை எவை எனில் சளசள, களகள, கொள கொள, கிளுகிளு என்பனவாம்" அவை,

வளநகர் முனிவரன் வருமுன் வானவன்
களனமர் கடுவெனக் கருதி வான்மிசை
களசள வெனமழை தாரை கான்றன
குளனொடு நதிகடங் குறைக டரவே

வளையமர் முன்கையோர் மயில னூடனக்
கிளையவள் பெயரினைக் கொழுந னீதலும்
முலையெயி றிலங்கிட முறுவல் வந்தது
களகள உதிர்ந்தது கயற்கண் ஆலியே

அண்டமூ லத்துக் கப்பா லாழியுங் கொதித்த தேழு
தெண்டிரைக்கடலின்செய்கை செப்புவதெவனோசென்னிப்
பண்டைநாளிருந்தகங்கை நங்கையும்கொதித்தாள்பார்ப்பான்
குண்டிகை இருந்த நீருங் கோள கோள கொதித்த தன்றே

அண்டத் தளவு மணையப் டகர்ந்தழைத்தான்
பணைடைத்தன் னுமதநின் காரணநதைப் பாவித்தான்
தொண்டைக் கனிவாய் துடிப்ப மயிர்பொடிப்பக்
கெண்டைத் தடங்கண்ணாள் ளுள்ளே கிளுகிளுத்தாள்

என்ற பாடல்களிற் பயின்றுள்ளதைப் பார்'' என்று எடுத்துக் காட்டினர்.

அம்பிகாபதி அவற்றைக் கேட்டு மனங்களித்து மிகுந்த மரியாதையோடு,

கம்ப நாட னுமைசெவி சாற்றுபூங்
கொம்ப னூடன் கொழுநனி ராமப்பேர்
பம்ப நாடழைக் குங்கதை பாச்செய்த
கம்ப நாடன் கழறலை யிற்கொள்வோம்

என்ற செய்யுளை இயற்றிக் கொடுத்தான். அதனைக் கம்பர் அரங்கத்தார்க்கு அறிவித்தார். அங்குள்ள வைஷ்ணவ சமயாசிரியர்க்குள்ளே பரமாசிரியர் ஆகிய ஸ்ரீமந் நாதமுனிகள்

எழுந்தருளியது கண்டு அவருடைய திருவடிகளிலே சாஷ்டாங்கமாய் விழுந்து சேவித்துத் தமது கருத்தை விண்ணப்பம் செய்ய, அவர் கம்பர் பாடிய இராமாயணத்தைக் கடாட்சித்தருளி, அது சொற்சுவை பொருட்சுவை செறிந்ததாயும், பகவத் விஷயமாயும், அற்புதமாயும் இருப்பது நோக்கி, அவருடையபுலமை கேவலமான மானுஷிகமா யிருக்கவில்லை என்று அதிசயித்து அந்தக் காவியத்தை அவசியம் பிரசித்தம்பண்ணுவிப்பது நமது கடமை என்று திருவுளங் கொண்டு கம்பரை மண்டப கைங்கரியம் ஒன்று செய்யச் சொல்லி நியமித்தார். அரங்கத்தார் கம்பரைப் பலரிடம் சென்று சாத்துக்கவி வாங்கிவரச் சொன்னதால் ஆழ்வார்கள் விஷயமாய்ச் சில அபசாரமொழிகளை உபயோகித்ததனமக்காக நாதமுனிவர் இங்ஙனம் கைங்கரியம் செய்யுமாறு அருளினர்.

அதைச் செய்து முடித்தவுடனே, ஒரு சுபதினம் பார்த்து நூலை அரங்கேற்ற யத்தனமாய் இருக்கையில், நம்பெருமாளாகிய அரங்கநாதர் அர்ச்சகன் முகத்தால் ஆவிர்ப்பவித்துக் "கம்பா! நீ நம்சடகோபனைப் பாடினையோ? பாடினாற்றான் நாம் உனது இராமாயணத்தைத் திருவுளம் பற்றுவோம், இல்லாவிட்டால் அது நமக்கு அங்கீகாரமாகாது பிள்ளாய்!" என்றார். இங்ஙனம் அரங்கநாதர் அருளிச்செய்தது கண்டு கம்பர், ஆழ்வார் விஷயமாய்,

> வேதத்தின் முன்செல்க மெய்யுணர்ந் தோர்விரிஞ் சன்முதலோர், கோதற்ற ஞானக் கொழுந்தின்முன் செல்க குணங்கடந்த, போதக் கடலெங்கள் தென்குரு கூர்ப்புனி தன்கவியோர், பாதத்தின் முன் செல்லு மோதொல்லை மூலப் பரஞ்சடரே

என்றத் தொடக்கத்து நூறு கட்டளைக்கலித்துறையில் சடகோபரந்தாதி என்னும் இனிய பிரபந்தத்தைப் பாடி முடித்தனர்.

இவ்வந்தாதி பாடினவுடன் அரங்கத்தார்கள் எம்பெருமான் சந்நிதியிலுள்ள மண்டபத்தின்கண் பல வித்வான்கள், பல சமயத்தார், பல அரசர்கள் முதலிய பலர் முன்னிலையில் கம்பர் இராமாயணத்தை அரங்கேற்ற ஆரம்பித்தார். அரங்கேற்றுகையில் மத்தியிற் பலர் கேட்ட ஆக்ஷேபங்களுக்குத் தகுந்த சமாதானங்களைக் கம்பர் கூறினார். இதுகாறும் கூறியவை விநோத ரச மஞ்சரியிற் கண்டவை.

இராமாயணத்தை அரங்கேற்றிய சகாப்தம், மாதம், நக்ஷத்திரம், சபை, இடம் முதலியவற்றை,

"எண்ணிய சகாப்தம் எண்ணூ றேழின்மேற் சடையன் வாழ்வு
நண்ணிய வெண்ணெய் நல்லூர் தன்னிலே கம்ப நாடன்
பண்ணிய விராம காதை பங்குனி அத்த நாளிற்
கண்ணிய அரங்கர் முன்னே கவியரங் கேற்றி னானே

என்னும் செய்யுளால் அறிக.

இராமாயணம் அரங்கேற்றுகையில் சடையப்பர் அரங்கேற்றும் மண்டபத்தில் வந்து இடமில்லாது நிற்றலைக்கண்ட கம்பர், அவருக்கு அங்கு இடமின்றேனும் பிறிதொருதக்க இடத்தில் இடங்கொடுப்பதாய்க் கூறி, இராமாயணத்தில் தக்க சந்தர்ப்பங்களில் அவரை நூற்றுக்கொரு செய்யுளில் புகழ்ந்தனர். இங்ஙனம் புகழ்ந்திருத்தலைக் கண்ட அரங்கத்தார், மிதமிஞ்சி நர ஸ்துதி செய்திருப்பதாகக்கூறி ஆயிரம் செய்யுட்கொரு முறை சடையப்பரைப் புகழ்ந்தாற்

போது மென்றனர். அதனைக் கேட்ட நம் புலவர், 'நூற்றில் ஒருவர் சடையப்பனை ஒப்பான வள்ளியோர் உண்டென்று நான் எண்ணியிருந்தேன். ஆனால் இவர்கள் கூறுவதினின்று ஆயிரத்தில் ஒருவரே இங்ஙனம் உளர் என நான் நிச்சயித்தேன்' எனக் கூறி ஆயிரம் செய்யுட் கொருமுறை சடையனைப்புகழ்ந்தனர். அங்ஙனம் அவர் புகழ்ந்து கூறினர் என்பதற்கு

எண்ணத்தகும் பாருள்ள மிரவிமதிய மெழுமளவும்
கண்ணிற் கினிய சயராம கதையில் ஒருபான்கவிமுழுதும்
வெண்ணெய்ச் சடையனென விறலார் கம்பன்விளங்கவைத்த
வண்ணத்துரைவேளான் பெருமாள்வளஞ்சேர் சோழமண்டலமே

என்ற செய்யுளே சான்றாகும். இனி அப்பதுச் செய்யுள் களையும் இங்குக் குறிப்போம்.

பாயிரம்

நடையி னின்றுயர் நாயகன் தோற்றத்தின்
இடைநிகழ்ந்த இராமாவ தாரப்பேர்த்
தொடைநி ரம்பிய தோமறு மாக்கதை
சடையன் வெண்ணெய்நல் லூர்வயிற் றந்ததே. 1.

வேள்விப்படலம்

விண்ணவர் போய பின்றை விரிந்தபூ மழையி னாலே
தண்ணெனுங் கான நீங்கித் தாங்கரும் தவத்தின் மிக்கோன்
மண்ணவர்வறுமைநோய்க்குமருந்தன சடையன் வெண்ணெய்
அண்ணறன் சொல்லே அன்ன அடைக்கலம் அருளினானே 2.

அகலிகைப்படலம்

அரம டந்தையர் கற்பக நவநிதி அமிழ்தஞ்
சுரபி வாம்பரி மதமலை முதலிய தொடக்கற்(று)
ஒருபெ ரும்பொருள் இன்றியே வுவரிபுக்(கு) ஒளிப்ப
வெருவி ஓடினர் வெண்ணெய்வாழ் சடையன்மேவாரின் 3.

## திருவபிடேகப்படலம் 33.

அந்தணர் வணிகர் வேளாண் மரபினோ
ஆவி நாட்டுச்
சந்தணி புயத்து வள்ளல் *சடையனோ
டனைய சான்றோர்
உய்ந்தன மடிய மென்னும் உவகையா
லுவரி நாண
வந்தனர் இராமன் கோயின் மங்கல
துரிமை மாக்கள்†

## ௸ 38.

அரியணை அநுமன் தாங்க அங்கதன் உடைவாள் வாங்கப்
பரதன்வெண் கவிகை எந்த இருவரும் கவரி பற்ற
‡விரைசெறி குழலி ஓங்கவெண்ணெய்மன் சடையன் வண்மை
மரபுளோர்கொடுப்பவாங்கிவசிட்டனேபுனைந்தான்மௌலி 9.

## விடைகொடுத்த படலம்.

§மறையவர் வாழி வேத மனுநெறி வாழி நன்னூல்
முறைசெயு மரசர் திங்கண் மும்மழை வாழி மெய்ம்மை
இறையவன் இராமன் வாழி இக்கதை கேட்போர் வாழி
அறைபுகழ்ச் சடையன் வாழி இரும்புகழ் அனுமன்வாழி 10.

இவற்றில் 3, 7-வது செய்யுள்களில், கண்ணனும், அறுவது செய்யுளில் சராமனும் புகழப்பட்டுள்ளார். பிற வற்றில் சடையப்பரே குறிக்கப்பட்டுள்ளார். இக்கண்ண

* 'சங்கரன் அனைய சான்றோர்' என்றும் பாடம்.

† இச்செய்யுள் ஏட்டுப் பிரதியில் உள்ளதாம்.

‡ "உரிமையின் அயோத்தி யுள்ளாருடைசெய் வெண்காடன் வந்த மரபினோர்" என்றும் பாடம்.

§ இச்செய்யுள் ஏட்டுப்பிரதியில் உள்ளதாம்.

னும், சாராமனும் சடையப்பரின் தம்பியர் என்று சிலர் கூறுவர். ஆனாலும் அவர்களைச் சடையப்பருக்குப் பின்னோர்கள் என்று அறியத்தக்க ஆதாரம் பாடல்களில் இன்மையால், கண்ணன், சாராமன் என்பன சடையப்பருடைய சிறப்புப் பெயர்கள் என்று ஆராய்ச்சிவல்லுநர் அபிப்பிராயப் படுகிறார்கள். இனி 8, 9-வது செய்யுள்களின் பாடபேதங்களைக் கொண்டால், அவை முறையே சடையப்பர் பிதா சங்கரனையும், அவர் பெண்வழித் தோன்றல் என எண்ணப்படும் வெண்காடரையும் குறிக்கின்றன.

இங்ஙனம் கம்பர் சடையப்பரையும் அவருடைய குலத்தாரையும், தக்கவிடங்களிற் புகழ்ந்து பாடியதால் அவருடைய செய்ந் நன்றி மறவாச்செயலும் வேளாளரைப் போற்றும் விருப்பும் எத்தன்மைத்து என விளங்கும். இதுநிற்க.

தமது நூலை அரங்கேற்றிய கம்பர் அளப்பரிய புகழையும், 'கவிச் சக்கரவர்த்தி' என்னும் சிறப்புப் பெயரையும் பெற்றார். இராமாயணம் பாடியதற்காகச் சோழன் அவர்க்குச் சிறியதோர் பூபாகம் அளித்தான் என்றும், அதுவே தாரணி என்றும், சிலர் சொல்லிக் கொள்ளுகிறார்கள். இத் தாரணியைச் சடையப்பரே கம்பர்க்கு அளித்தார் என்றும், அதுமுப்பது வேலி விஸ்தீரமுள்ள கிராமம் என்றும், அது வெண்ணெய் நல்லூருக்கு வடபாலுள்ள தரணியே என்றும் சிலர் அபிப்பிராயங் கொள்ளுகிறார்கள். இது பற்றிப் போலும் "தாரணிக் கோடையான் கம்பன்," "கம்பநாட்டாழ்வான்" என்னும் பிரயோகங்கள் இருக்கின்றன.

இவ் வதிகாரத்துட் கூறியவற்றில், விநோதரச மஞ்சரியார் எழுதியவையும் வேறுள்ளவற்றையும் பற்றி இரண்டொரு

விஷயங்கள் இங்குக் குறிப்போம். கம்பர் தமது நூலை அரங்கேற்றுவதற்குப் பட்டபாடு எல்லாம் விநோதரசமஞ்சரியுடையாரின் அளவில்லாத கற்பனைக் களஞ்சியத்தின் ஒரு சிறு பகுதியே ஆம். அந்நூலிற் கூறியவற்றை அப்படியே நம்ப முடியாதெனப் பலர் அபிப்பிராயப்படுகின்றனர். அன்றியும், அவர் கூறும விஷயங்களுட்பல வேறு நூல்களிற் காணப்பட வில்லை.

சிதம்பரத்திற் சென்றிருந்த காலத்து, அங்கு அரவம் தீண்டிக்கிடந்த தில்லைவாழந்தணரின் புதல்வனைக் கம்பர் மூன்று கவிகளை இசைத்து உயிர்ப்பித்த விஷயம் முன்னரே கூறப்பட்டது. அவற்றில், முதலிரண்டு செய்யுள்களும், "ஏரெழுபது பாடி அரங் கேற்றும் போது புதுவைச் சேதிராயனை விடம் தீண்டத் தீர்த்த வெண்பா" என்ற தலைப்பின் கீழ், தமிழ் நாவலர் சரிதையில் எழுதப்பட்டிருக்கின்றன. இவ்விஷயம் திருக்கைவழக்கத்தில்,

ஏரெழுப தோதி அரங் கேற்றக் கவிபாடிச்
சாரியிட னாகம் கடித்ததுங் கை.

என்று கம்பராலேயே கூறப்பட்டிருக்கிறது. இன்னும்

அழுவதுங் கொண்டு புலம்பாது நஞ்சுண் டதுமறைந்தோர்
எழுபதுங் கொண்டு புகழ்க்கம்ப வாணன் எழுப்ப விசை
முழுவதுங் கொண்டொரு சொற்பேச செய்யின் முழுகிக்கையின்
மழுவதுங் கொண்டு புகழ்கொண்ட தொல்தொண்டை மண்டலமே

என்று தொண்டை மண்டல சதகத்திலும்,

குணங்கொள் சடையன் புதுச்சேரிக் கொடையன் சேதி
ராயன் முதல்
கணங்கொள் பெரியோர் பலர்கூடிக் கம்பநாடன்
கவிகூற

விணங்கும் பரிசி லீந்துபுவி பெறும் புகழேர்
எழுபமேதனும்
மணங்கொள் பெருங்காப் பியப்பனுவல் வளஞ்சேர்சோழ
மண்டலமே

என்று சோழ மண்டல சதகத்திலும், கூறப் பெறுதலால் தமிழ் நாவலர் சரிதை கூறுவதே பொருத்தமுடையதாம்.

இங்குக் கூறப் பெற்ற புதுவைச் சேதிராயன் சடையப்ருடைய புதல்வன் என்று தெரிகிறது.

"பழுத்து டைந்தகனி செக்கு செக்குநது
சாறு வீழவடி சேறெழும்

பலபெருஞ்சுளைய அமுத மென்றுவெயில்
படவொ ளுதென்ம றைப்பபோல்

பொழிற்பு றஞ்சொரியு முகிலி னந்தழுவு
புதுவை வாழ்சடையன் உதவு சேய்

பூதலம்பரவு சேதிபன் தனது
பொன்னி நாடு ..............".

என்று தொடங்கும் செய்யுள் ஒன்று தனிப்பாடல்திரட்டுபழையபதிப்பிற் காணப்படுகிறது. அதில், "புதுவைவாழ் சடையன் உதவு சேய், பூதலம்பரவு சேதிபன் தனது பொன்னி நாடு" என்று கூறப்பட்டிருத்தலால், சேதிராயன், சடையப்பருடைய புதல்வன் என்பது விளங்கும். ஆயின் "குணங்கொள்சடையன்" என்ற செய்யுளால், சோழநாட்டிலன்றி தொண்டை மண்டலத்தும சடையப்பருக்கு நிலங்கள் இருந்தன என்று கொள்ளலாம்.

காலஞ் சென்ற ஸ்ரீ அ. நாராயண சாமி ஐயர் அவர்கள் அடியிற் குறித்த நான்கு செய்யுள்களையும் மூவலூர் சிவன் கோயிற் கல்வெட்டில் தாம் கண்டதாகத் தெரிவித்தனர். அவை வருமாறு:

தேமரு வயங்குசெய் யா......மபாற்கடற்சேதிபர் கோன்
மாமால் புதுவைச் சடையன் னனென் மங்கை
ஆமா மனையந்த வாயிழை செந்த......தாசையெல்லாம்
போமாறு கண்டுவிட்டாளென்று கூறுமப் பூங்கொடிக்கே

இப்பாடல் முழுதும் நன்கு தெரியவில்லை.

மெய்கழுவி வந்து விருந்துண்டு மீளுமவர்
கைகழுவ நீர்போதுங் காவிரியே—பொய்கழுவும்
போர்வேற் சடையன் புதுவையான் இல்லறத்தை
யார்போற்ற வல்லா ரறிந்து.

காவிரியைச் சோணாட்டைக் காராளர் தம்மரபை
நாவலரைக் காவலரை நல்லோரைப்—பூவலய
முள்ளத் தரும்புதுவை யூரைச் சிறப்பித்தான்
பிள்ளைப் பெருமாள் பிறந்து.

போராசைப் பிள்ளைப் பெருமாளைச் சேதிபனைக்
காரோசைக் கையானைக் கண்டீரே—பாரோர்
விடுங்கோள் கொடுங்கோள் வழியருள் முண்டளன்
மிடுங்கோள் கொடுங்கே......

இவற்றுள் முதல் இரண்டு சாசனங்களாலும் புதுவைச் சடையர் புகழப்படுகிறார். மற்ற இரண்டிலும் "பிள்ளைப் பெருமாள் பிறந்து" எனவும் "பிள்ளைப்பெருமாளைச் சேதிபனை" எனவும் குறிக்கப்பட்டிருத்தலால் சடையப்பருடைய

புதல்வனே சேதிராயன் என்று விளங்குகின்றது. அவன் தந்தைக்கிருந்த பட்ட விசேஷங்களைத் தானும் பெற்றிருந்தான் என்றும் செந்தமிழ்ப் பத்திராசிரியர் கூறுகிறார்.

(செந்தமிழ் V. பக்கம் 60)

கம்பர் தமது இராமாயணத்தை உத்திர நக்ஷத்திரத்தன்று அரங்கேற்றினர் என்று சோழமண்டல சதகம் வெளியிடுகிறது. அதனை,

திண்மை யேறும் கம்பனிடம் செய்யத் தகுமென் சிறப்பீந்து
நன்மை யேறு மிராமகதை நற்பேர் புவியிற் றழைத்தேற
உண்மை யேறும் திருவரங்கத் தொருவன் சபையில்உத்தரநாள்
வண்மை யேற அரங்கேற்றி வைத்தார் சோழ மண்டலமே.

என்ற செய்யுளால் அறியலாம்.

இராமாயணம் அரங்கேற்றப்பெற்ற ஸ்ரீரங்கத்தில் ஸ்ரீமந் நாதமுனிகளும், கம்பருடன் இருந்தனர் என்று சிலர் கூறுவர். அம்முனிகள் இருந்தகாலம் சகாப்தம் 832 என்று ஸ்ரீ கோபிநாத ராவ் அவர்கள் தெரிவித்துள்ளார்கள். அது கம்பரோடு உடனிருந்தார் என்பதற்கு மாறுபடலான் கொள்ளத்தக்கதன்று. அன்றியும், அம்முனிவர், இராமாயணத்திலிருந்து சில செய்யுள்களைப் பொறுக்கி நாலாயிரப் பிரபந்தத்தில் சேர்த்தனர் என்றும் சிலர் கூறுவர். அப்பிரபந்தத்தில் இராமாயணச் செய்யுட்களே காணப்படவில்லை என்பதும் இங்கு யாவரும் நன்கு அறிந்ததே ஆம்.

---

# 5. கம்பரும் சோழனும் I

கம்பர் சோழனிடம் சகலவித சம்பத்துக்களையும் பெற்று வாழ்ந்திருந்தார். அங்ஙனமிருக்கையில் கம்பருக்கும் சோழனுக்கும் மனஸ்தாபம் ஏற்பட்டது. ஆதலால் கம்பர் சோழனைவிட்டுப் பிரிந்தார். அங்ஙனம் பிரிந்தபோது அவர் சென்ற இடத்தையும் முறைகளையும் பலவேறு விதமாகக் கூறுவர். புலவர் புராணமுடையார் கூறுவதை முதலில் இங்குக் கூறுவோம்.

ஒரு நாள் சோழன் மற்றொரு அரசனது முன்னிலையில் தனது விருதுகளுடன் வந்த கம்பரை நோக்கிப், "புலவீர்! இந்த நலமெல்லாம் யார் உதவ எய்தினீர் சொல்லும்" எனத் தன் சிறப்புத் தோன்றுமாறு கேட்டான். அரசனுடைய மனநிலையையும் செருக்கையும் உணர்ந்த கம்பர், 'அரசே! வெண்டாமரையில் வீற்றிருக்கும் மெல்லியலாளே எமதாய் ஈய எய்தினேம்' என்றார். இம்மொழிகளைச் செவியேற்ற அரசன், 'நம் அன்னை நமக்கு ஈந்தது மெய்யெனில், சோழனாகிய என்மீது இதுகாறும் நீர் ஏன் கவிபாடினீர்?' என்று கேட்கக், கம்பர்,

> மன்னவனும் நீயோ வளநாடும் உன்னதோ
> உன்னை அறிந்தோ தமிழை ஓதினேன் — என்னை
> விரைந்தேற்றுக் கொள்ளாத வேந்துண்டோ உண்டோ
> குரங்கேற்றுக் கொள்ளாத கொம்பு

என்றார்.

சோழன், 'நீர் உமது பெயர் கம்பர் என்றும், நீர் எமது சம்ஸ்தான வித்வானென்றும் கூறாமல் வேற்றிடம் சென்று இத்தகைய சிறப்படைந்திருப்ப இங்கு வந்தால்,

நும்தாய் உதவியதாகக் கூறியதை நாம் நம்புவோம். இப் போதே எமது நாட்டைவிட்டு 'வெளிப்போவீராக' என்று கூறக், கம்பர், 'உடனே புறப்பட்டுச்சென்று ஓர் மரக்கலமேறி சிங்களவர் ஊர் போய்ச்சேர்ந்து மிகவும் கஷ்டப்பட்டார். அவ்வூரில் தமிழ்ப்புலவரின் மாட்சி அறிந்தவர் இன்மையின் தமது உதாரார்த்தமாக மண்சுவர் வைப்பதாய் எண்ணித் தெருத்தெருவாய் அலைந்தார். அங்கிருந்த ஏழை ஒருத்தி தன் வீட்டுச் சுவர் வைத்தால் கொஞ்சம் நெற்கூலி கொடுப்பதாகக் கூறினள். அதற்குடன்பட்டு மண்சுவர் வைத்தனர்.

தாம் வைக்கின்ற சுவர் அடிக்கடி விழுந்தது. அங்ஙனம் சரிந்து விழுதலைக் கண்ட கம்பர், மனமாழ்கிக் கலைமகளைப் பக்தியோடு மனதில் எண்ணி,

> மற்கொண்ட திண்புயத்தான் மாநகர்விட் டிங்குவந்தேன்
> சொற்கொண்ட பாவின் சுவை அறிவார் ஈங்கில்லை
> விற்கொண்ட வாணுதலாள் வைத்தருங் கூலி
> நெற்கொண்டு போமளவும் நில்லாய் நெடுஞ்சுவரே

என்ற கவியைப் பாடினர். இச்செய்யுளைக் கேட்டு அச் சுவரை விழச்செய்யும் வழக்குடைய ஒரு பிரமராக்ஷதன் கம்பருக்குப் பயந்து அவ்விடம்விட்டு நீங்கவே, அவர் வைத்த சுவர் அப்படியே நின்றது. பிறகு கம்பர் நெற்கூலி வாங்கிக் கொண்டு, கப்பல் ஏறிக் கன்னிவளநாடடைந்து அதன் தலை நகரும் தண்டமிழ்த்தாயினிருப்பிடமும் ஆகிய மதுரையம் பதியை அடைந்து தமக்கங்கேதேனும் ஒரு வேலை கிட்டுமோ என முயன்றனர்.

அக்காலத்தில், பாண்டியன் கம்ப ராமாயணத்தைக் கேட்க விரும்பினன். அவனது சமஸ்தான வித்வான்கள் அங்

றாலேப்படித்துப் பொருள் கூறிவரலாயினர். அவ்விடம் சென்றிருந்த கம்பர் அவர்கள் பொருத்தமானபொருள் கூறுகையில் மனம் களித்தும், தவறான பொருள் கூறியவிடத்து மனஞ் சுளித்தும் நின்றார். அங்கிருந்தவர்கள் கம்பரைக் கவனித்தார்கள். மன்னனும் விஷயம் இன்னதென உய்த்துணர்ந்து கம்பரைஅழைத்துப்பக்கத்திருத்தி, "பெருந்தகையுடையீர்! இராமாயணத்தின் உண்மைப் பொருள்இன்னதெனக்கூறும் ஆற்றல் நுமக்குளதாயின், அதனை எமக்கு எடுத்துரைக்க" என்றதும், கம்பர் புன்னகையுடன் புயல் பொழிந்ததென மொழிந்தார். பாண்டியனும் அங்கமைந்த பிறரும் இன்ப வாரிதியில் மூழ்கினர். பிறகு வழுதிமன்னன் கம்பருக்கு நல்ல ஆடை ஆபரணமாதியன கொடுத்துப், 'புலவீர்! நீவிர் யாவீர்? இங்கு நீர் வந்தகாரணம் என்னை?' என்று கேட்டதும், கம்பர், 'சரஸ்வதி என் வரலாற்றைக் கூறுவள். அதுவரை நான் கூறுவேனல்லேனாது' என்னப், பாண்டியன் அன்றுதொட்டுத் தினந்தோறும் இராமாயண வருஷம் பொழியுமாறு கம்பராம் காளமேகத்தை வேண்டிக்கொண்டனன்.

கம்பர் அங்ஙனமே செய்து அரசனது நன்மதிப்பை அடைந்து வாழ்கையில், பாண்டிய சமஸ்தான வித்வான்கள் கம்பரிடம் பெரிதும் பொறாமைகொண்டு ஜாதிகுலம் தெரியாத அவரை, அவ்வூர் அம்பட்டனுக்கு உறவினனென அவனைக்கொண்டு சொல்லுமாறு ஏற்பாடுகள் செய்து அவனுக்கு மிகுந்த பண உதவியும் செய்தனர். கம்பர் தம்மொடு உறவாடிய அம்பட்டனோடு தாமும் அளவளாவினர். முடிவில் கம்பர் கலைமகளைப் பிரார்த்தித்து அவளிடம் ஒரு சிலம்பைப்பெற்று அதனை அரசனுக்குக் காட்டினர். அரசனும்

பிறரும் 'சூரிய ஒளியெல்லாம் ஒருருக்கொண்டுள்ளது போன்ற அதன்பிரகாசத்தையும் அழகையும் கண்டு, அதை மூடியலன்றிக் கண்திறக்க முடியாதென்று உணர்ந்தனர். பிறகு அது எங்ஙனம் கிடைத்ததெனக் கம்பரை வினவினர். கம்பர் தமது முன்னோர் இத்தகைய இரண்டு சிலம்புகள் தேடி வைத்திருந்ததாயும், தாயபாகம் செய்கையில் ஒன்றைத்தாமும் மற்றொன்றைத் தம்பியாகிய அம்பட்டனும் பங்கிட்டுக்கொண்டதாகவும் கூறினர். அவன் கம்பர் கூறிய வாறு தங்களுக்குள் பாகஏற்பாடு நடக்கவில்லை யென்றும், சிலம்பே தன்னிடம் இல்லை யென்றும் சொன்னான். பொய் கூறுதல் சிறுவயதுமுதல் அவனுக்கு வழக்கமெனவும், அவன் சிக்கனக்காரனெனவும், ஒறுத்தாலன்றி உண்மை உரையான் எனவும் கம்பர் கூறவே, அரசன் அவனைச்சிக்ஷை செய்யும்படி பணியாளர்க்குக் கட்டளையிடலும், குடிமகன் அடிக்காற்றாமல் உண்மை சொல்லுவதாய் ஒப்புக்கொண்டு, கம்பருக்கும் தனக்கும் எவ்வித சம்பந்தமுமில்லை என்றும், அந்தச்சமஸ்தான வித்வான்களால் தூண்டப்பட்டுத் தான் அவ்விதம் செய்ததாயும் வெளியிட்டான. அங்ஙனம் அடாதகாரியம் செய்த அப்புலவர்க்குத் தக்க தண்டனைபுரிய வேம்பன் எண்ணினான். ஆயினும் கம்பர் அவ்விதம் செய்ய ஒட்டாமல் தடுத்து அவர்களைக் காப்பாற்றினர்.

பின்பு, அத்தகைய பெருமைவாய்ந்த சிலம்பு யாருடையதென அரசன் கேட்க,கம்பர் 'அது கலைமகளுடையது' எனச்சொல்ல, அங்குள்ள யாவரும் இவர் கம்பரே எனத் துணிந்து கண்டணிட்டு அளவின்றி அவரைப்புகழ்ந்தனர். அச்சிலம்பை இன்னேபாரதிக்கு உதவுக என்று அரசன்

சொல்லக், கம்பர் சரஸ்வதியைத் தியானித்து அதனை அணியு
மாறு நீட்டலும் அது மறைந்தது. சோழன் அடக்க மின்
றிக் கூறிய வார்த்தையால் இங்ஙனம் தம்மை அனுப்பிய
வரலாறு முழுதும் கம்பர் சொல்ல, மதுரைவாசிகள் கூர்ந்து
கேட்டனர்.

கம்பரைப் பலவிடங்களில் தேடியும் காணாத சோழன்
மனம்வருந்தி நிற்கப், பாண்டியன அவரையானைமேலேற்றித
தக்கமரியாதையுடன் அவரை எதிர்பார்த்திருக்கும் சோழன்
பால் அனுப்பினன். வரும்புலவரை அவன் தன் களிற்றின்
மேல் ஏற்றித்தொழுது, "புலவீர்! நம்தாயின் செயல்முன்
அறிகிலேன். நான், முன் சொல்லியதைப் பொறுத்தருள்வீ
ராக" என்று சமாதானம் கூறித் தன் நாட்டிற் கிட்டுச்சென்
றனன்.

இனிக்கம்பர் இரண்டாமுறையும மதுரைக்குச்சென்ற
தாகப்புலவர் புராணம் கூறுவதை இங்கு எடுத்துரைப்பாம்.
ஒருநாள் கம்பர் சோழனது அரண்மனைக்குள் அவனோடு
ஓரிரகசியம் பேசிக்கொண்டிருந்தனர். கம்பருடைய
அடைப்பைக்காரன் அமையம்பார்த்துச் சோழனதுபடுக்கை
அறையிற்சென்று கட்டிலின்மேற் பொய்த் தூக்கம்கொண்
டவன் அரசன் போர்வையை மூடிக் கொண்டு மெய்யாகவே
உறங்கிவிட்டான். கொஞ்சநேரத்திற் சயனிக்கவந்த அரசன்
அடைப்பைக்காரனை எழுப்பித் தன் உடைவாளால் ஒரே
வீச்சில் வெட்டஎண்ணுகையில், அவன் கம்பருடைய
அடைப்பைதாங்கியாக இருப்பதை நினைத்து, 'நீ இங்ஙனம்
செய்யத்தகுமோ?' என்றுவினவ, அவன்தான் செய்தது தகா
தெனக்கூறிச்சோர்வுற்றான். அரசன், 'யான் பொய்த் நித்

தொரு சமர்த்துரைக்குவன் அது புகன்று போ' கென அடைப்பைதாங்கி,

நெற்படி விளைகழனி புடைசூழ் நன்மலிவாழ்தச்சன்
கற்படி பணை தோளான் பெயரோ கங்கணகணகணவன்
விற்படி வாணுதலாள் மனைவி மின்மினிமினிமினிமி
சொற்படி வேலை செய்வாள் துந்துமிதுரிதுரிதி

என்று கூறினன். அவன் சொன்னசமர்த்தைக் கேட்ட வளவன் பொற்கலை ஒன்றைப் போர்த்தவனை அனுப்பிவிட்டான்.

அடைப்பைக்காரனை எதிர்பார்த்திருந்த கம்பர், வந்த அவனைப்புடைத்தற்கு எத்தனிக்கையில் அவன நடந்ததை அப்படியே கூறினான். ஆனால் அரசன் பொற்றுனை கொடுத்ததைக் கூறவில்லை. ஆதலின் "இக்கவி கேட்ட நம்மன்னன் மெய்க் கொடையான் அல்லன்" என்று கம்பர் கூறுதலும், அடைப்பைக்காரன், 'இச்சால்வையை அரசனீந்தனன்' என்று கம்பர் கையிற் கொடுத்தனன். அதைக் கண்ட கம்பர் நம்மரசனே அரசன். அவன் கன்னனை ஒத்தவன் என்று மனதாறப் புகழ்ந்தனர். இதெல்லாம் கேட்டுக் கொண்டே வந்த சோழன், மிகுந்த கோபங் கொண்டவனாய்க் கம்பரை நோக்கிப்,

போற்றினும் போற்றுவர் பொருள் கொடாவிடில்
தூற்றினும் தூற்றுவர் சொன்ன சொற்களை
மாற்றினும் மாற்றுவர் வன்க ணாளர்கள்
கூற்றினும் பாவலர் கொடியர் ஆவரே

என்ற செய்யுளைக் கூறித் தன்மனை புக்கான். கம்பர்உளைச்சல் கொண்டு "தென்னாட்டிற்குப்போய்த்திருப்புவன்" என்றுகூறி அங்குப்போகப் புறப்பட்டார். புறப்பட்டுச் சென்றவர் சிறிது காலம் சிறப்புடன் மதுரையில்வசித்திருந்தனர். பின், பொதியாசலத்தைப் பார்த்துவர எண்ணித் தெடரெனச் செல்லுகையில், ஒரு கழனியில்நன்கு வளர்ந்துசாய்ந்த கதிரினம் 'இங்குள்ள கற்புடைப்பெண்டிர் நாணத்தால் தலைவணங்கி இருப்பதுபோலிருக்கின்றன' என்று அங்குள்ள கடைசியர் சிலர் கேட்பக் கூறினர். அவர்களில் ஒருத்தி, 'அறுத்துக் கட்டிடும் குலமிது' என்றாள். அவள் கூறியதைக் கேட்டு இந்நாட்டு மாதரும் இங்ஙனம கூறுகின்றனரே என்றுஆச்சரியமடைந்தவராய்க் கம்பர் அங்கிருந்து கொஞ்ச தூரம்போகையில், துலாப் பிடித்து நீர் இறைத்துக் கொண்டிருந்த சிலர், 'மூங்கிலிலை மேலே தூங்கு பனி நீரே'- என்று கூறிப்பொழுது விழுந்ததால் மேலே சொல்லாமல் நிறுத்தி விட்டுச் சென்றனர். கமபர் அதனைக் கேட்டு இனி இவர்கள் மேலே என்ன சொல்லுவார்களோ என்பதை அறிய எண்ணி அன்றிரவு அங்குத் தங்கி மறுநாட் காலை அவர்கள் நீர் இறைக்க ஆரம்பிக்கையில் 'தூங்குதனி சோனே வாங்குபனி நீரே' என்று தொடர்ந்து கூறுதலைக் கேட்டு மனஞ் சோர்ந்து சென்றார். அங்கிருந்து செல்லுகையில ஓரிடத்து இருந்த கைம்பெண் ஒருத்தி, 'ஜில்லென அலர் சிறுநெரிஞ்சிக் காட்டிங்கொருத்தியாய் நில்லென்ன நிறுத்தி ஏனேகினீரோ?' என்று பொருள் தரும் சுவடிக்கவியின் பொருள் தனை முதற் சீர்க்கட்டங்கோர் ஆச்சரியம் ஆகிய இவற்றைக் கண்டுமனம்சலித்து, இனிமேற் செல்லலாகாதெனத் திரும்பி விட்டார்.

---

## 6. கம்பரும் சோழனும். II.

முற்கூறிய விஷயத்தைச் சிற்சில வேறு பாட்டுடன் விநோதரச மஞ்சரி யுடையார் கூறுவர். கம்பர் ஒரு முறை மட்டும் சோழனோடு கோபித்துச் சென்றதாக இந்நூல் கூறும் விஷயத்தை இங்குக் குறிப்போம்.

கம்பர் சோழனாற் போற்றப்பட்டு வாழுங்காலத்து, ஒரு நாள் மாலைப்பொழுதில், கற்பகச்சோலைபோலும் பூங்காவனத்தில், சோழனும் கம்பரும் உலாவித் திரிகையில் சோழன் பக்கெனச் சிரித்தனன். கண்ணுற்ற கம்பர் அந்த நகைப்புக்குக் காரணம் யாதென வினவினர். அரசன் "இப்புவியும் இதிலுள்ள பிரஜைகளும் எனக்குள் ஐக்கியம் என்பதை எண்ணிக் களித்தேன்" என்றான். அரசனுக்கு எல்லாம் ஐக்கியம் என்றும், தமக்கு அரசன் ஐக்கியம் என்றும் கம்பர் சாதுரியமாய்ச் சொன்னார். கேட்ட அரசன் மனவாட்டமுற்றுத் தன்னரண்மனை சேர்ந்தான்.

மனவருந்தத்துடன் இருந்த அரசனைத் தேற்றும் பொருட்டு அரசி பலவித முயற்சி எடுத்தும் பலியாமை கண்டு, பொன்னி என்னும் பெயர் பூண்ட ஒரு தாதியிடம் மன்னன் மன நிலையைச் சொன்னாள். பொன்னி மன்னனை அணுகிப் பலவித உபசாரங்கள் புரிந்து அவனுக்குற்ற மனத்தாழ்வு எத்தகைய காரணங்களால் நிகழ்ந்திருப்பினும் அதைத் தீர்த்து வைப்பதாய் மொழிந்தாள். அரசன் தனக்கும் கம்பருக்கும் நடந்த சம்பாஷணையின் தன்மையைக்கூறி, அதனால் தனக்கு வருத்தமுண்டாயிற்று என்றான். பொன்னி அவனைத்தேற்றிக் கம்பரைத் தனக்கு அடிமை யாகச்செய்வதாகச் சொல்ல, அரசன் மனக்களிப்புற்றான்.

கொஞ்சநேரத்துக்கு எல்லாம் தன் வீட்டின்முன் செல் லும் கம்பரைக்கண்ட பொன்னி, அவரைத்தன் வீட்டிற்கு அழைப்பித்து, "கவி அரசே! நான் நும்பால் விரும்பும் செயலுக்குட்பட வேண்டுகின்றேன்" என்று கூறி நமஸ் கரித்தாள். கம்பர் 'பொன்னி! நீ அரசனுக்குப் பெண்டு, எனக்கு மகள். இம்முறைக்கு ஊனமில்லாமல் நீ வேண்டும் எதனையும் நான் செய்யச சித்தமாய் இருக்கின்றேன்.' என் னப், பொன்னி, தனக்குக் கம்பர் அடிமை என எழுதித்தரு மாறு பிரார்த்தித்தாள். புலவரும் அவ்வாறே ஒப்புக் கொண்டு "தாசி பொன்னிக்குக் கம்பன் அடிமை" என்று எழுதிக்கொடுத்துவிட்டு எழுந்து சென்றார்.

இவ்வாறு கம்பர் எழுதிக்கொடுத்ததைப் பொன்னி, சோழன் கையிற்கொடுக்க, அவன் அதனை மனமகிழ்ந்து ஏற்று மறுநாட்காலையில் சபாமண்டபம் அடைந்ததும் முன் னெழுதிக்கொடுத்ததைக் கம்பர் கையிற்கொடுத்து அதை யார் எழுதியதெனக் கேட்டான். கம்பர் அதைத் தாமே எழுதியதாக ஒப்புக்கொண்டார். அரசன், 'நீர் தாசி பொன் னிக்கு அடிமையா?' என்றான். அரசன் எண்ணியதெதுவோ அது தாம் எழுதிக்கொடுத்ததற்கு அர்த்தமன்றென்றும் ஆனால் 'உலகமாதாவாகிய ஸ்ரீலக்ஷ்மிதேவிக்குக் கம்பன் அடிமை' என்ப[illegible] அதன் பொருள் என்றும், அவ்வாறு பொருள் கொள[illegible]ணமும் கூறினர். தனது எண் ணம நிலையாமையை எண்ணி வருந்திய சோழன், 'போற்றி னும் போற்றுவர்' என்ற செய்யுளைச் சொல்லித் தன்னால் கொடுக்கப்பட்ட விருது முதலியவைகளைக் கொடுத்துவிட்டுச்

செல்லுமாறு கட்டளையிட்டான். கம்பர், 'மன்னவனும் நீயோ?' என்ற செய்யுளையும்;

அன்றையிலும் வைய மகன்றதோ அல்லவென்று
குன்றெடுத்து நீதிருத்திக் கொணடாரயோ?—என்றும்
அடைந்தாரைக் காக்கு மகளங்கா! துங்கா!
நடந்தாயே நால்லா றடி

காத மிருபத்து நான்கொழியக் காசினியை
ஓதக் கடல்கொண் டொளித்ததோ—மேதினியில
கொல்லிமலை நாடாளும் கொற்றவா நீமுனிநதால்
இல்லையோ எங்கட் கிடம்

என்பவற்றையும் கூறிவிட்டு அரசனைப் பார்த்து இனிச் சோழனுடு திரும்புவதாயின் அவனிலும் மேம்பட்ட அரசனைத் தமக்கு அடைப்பைக்காரனாகக் கொண்டன்றித் திரும்புவதில்லையென்று சூளுரை கொண்டு, உடுத்த ஆடையோடு மட்டும் புறப்பட்டார். கையிற் கொள்ளும் எவ்வித சாதனமுமின்றிச் சென்ற கம்பர், பல இடுக்கணுற்றுப் போயினர். அங்ஙனம் செல்லுகையில் கொஙகு நாட்டிற் சென்றபோது அந்நாட்டார் அவருக்கு மரியாதை செய்யா திருந்ததால்,

நீரெல்லாம் சேற்று நாற்ற நிலமெல்லாம் கல்லு முள்ளும்
ஊரெல்லாம் பட்டி தொட்டி உண்பதோ கம்பஞ் சோறு
பேரெல்லாம் பொம்மன் திம்மன் பெண்களோ நாயும் பேயும்
காருலாங் கொங்கு நாட்டைக் கனவிலும் நினைக்கொ ணாதே

என்ற செய்யுளைப் பாடினதாகச் சிலர் கூறுவர். அப்புறம் சிறிது தூரம் சென்று வழியில் உணவுக்கு வழியின்றி

ஓர் ஊரில் வேலி என்பாளிடம் உதவி வேண்ட அவள் கூறியபடி, பிரமராக்ஷஸால் தள்ளப்பட்ட சுவரை வைக்கும்போது 'மற்கொண்ட திண்புயத்தான்' என்னும் செய்யுளைப் பாடி வேலிதரும் கூலியைப் பெற்றுச் சென்றார்.

அங்கிருந்து புறப்பட்டுப் போகையில் பசிகடுகுதலும் ஓர் ஊரிலிருந்த ஒருகோமுட்டி, செக்கான், வேதியன் ஆகிய மூவரிடத்தும் உணவு வேண்டியும் அவர்கள் தனித்தனி ஒவ்வொருகாரணம் கூறி உதவிபுரிய மறுத்தனர். பின் உழுகிற வேளாளன் ஒருவனைக் கண்டு அவன் வைத்திருக்கும் பழஞ்சோற்றில் கொஞ்சம் கொடுக்குமாறு வேண்டினர். அவன் சந்தோஷமாய்த் தந்தான். அதனை வாங்கியுண்ட கம்பர்,

> செட்டிமக்கள் வாசல்வழிச் செல்லோமே செக்காரப்
> பொட்டிமக்கள் வாசல்வழிப் போகோமே—முட்டிபுகும்
> பார்ப்பார் அகத்தையெட்டிப் பாரோமே எந்நாளும்
> காப்பாரே வேளாளர் காண

என்று பாடினர். இச்சந்தர்ப்பத்தில்,

> மேழி பிடிக்குங்கை வேல்வேந்தர் நோக்குங்கை
> ஆழி தரித்தே அருளுங்கை—சூழ்வினையை
> நீக்குங்கை என்றும் நிலைக்குங்கை நீடூழி
> காக்குங்கை காராளர் கை

என்ற செய்யுளைப் பாடினதாகச் சிலர் கூறுவர். பிறகு அவர்க்குதவிய வேளாளன் நிலத்தை உழுகையில் பெரும் புதையல் அகப்பட்டது. ஆதலால் அவன் கம்பரைச் சின்னாள் தன்னகத்தில் இருக்கும்படி செய்து உபசாரமாக வழி யனுப்பினான் என்ப.

பின்பு நெடுந் தூரம் நடந்து சென்று சேரநாடடைந்து நாம் கம்பருடைய அடைப்பைக்காரனென்றும், கம்பருக்கும் சோழனுக்கும் மனநேர்மை இல்லாததால் அவர் எங்கேயோ போய்விட்டார் என்றும், ஆதலால் ஜீவனார்த்தமாக இவ்வூர்க்கு வந்ததாகவும் கூறித் தனக்கு ஒருவேலை கொடுக்கும்படி ஒரு பிரபுவை வேண்ட, அவன் அவனைச் சேரராஜனிடம் அடைப்பைத் தொழிலில் அமர்த்தினான்.

அச்சமயம் சேரன் கம்பராமாயணப் பிரசங்கம் செய்யும்படி தன் சமஸ்தான வித்வான்களை நியமித்திருந்தான். அவர்கள் பாலகாண்ட வேள்விப் படலத்தில்,

> எண்ணரு[illegible] காக்கி[illegible]ரண்டு [illegible]
> விண்ணவர்க் காக்கிய முனிவன் வேள்வியை
> மண்ணினைக் காக்கின்ற மன்னன் மைந்தர்கள்
> கண்ணினைக் காக்கின்ற இமையிற் காத்தனர்

என்னும் செய்யுளுக்கும் பிறசெய்யுள்களுக்கும் பத அர்த்தம் மட்டுமே கூறி அதிலமைந்த விசேஷத்தைக் கூறாதொழிந்தனர். அப்பொழுது எல்லாரும் இராமாயணத்தைக் கவனமாய்க் கேட்கிறார்களா என்று அறியும் பொருட்டு, அரசன் எல்லாரையும் நோக்கக், கம்பர் மட்டும் சிறிது மாறுபட்டுக் காணப் பட்டார். அவ்வாறு இருந்ததற்குக் காரணம் யாது எனக் கம்பரை அரசன் வினவினன். கம்பர் முற்கூறிய பாடல்களுக்கு அந்தப் புலவர்கள் கூறும் பொருள் சிறக்க வில்லை என்று சொல்ல, அரசன், 'நீசிறக்கச் சொல்லுவையோ' எனக், கம்பர் அங்ஙனம் சொல்லுவதாய் மேற்கொண்டு பிரசங்கித்தார்.

அதாவது—"எண்ணுதற் காக்கரிது" என்றபாட்டின் முதல் மூன்று அடிகளின் பொருள் சற்றேறக் குறையச் சரி தான். ஆயினும் முதலடியில் எண்ணுதற்கு ஆக்குதற்கு அரிய வேள்வி என்றதோடு, சொல்லுதற்கும் அரிய தென வருவித் துத் திரிகாணச் செயல்களையும் குறித்ததாகக் கொள்ள வேண்டும். 'கண்ணிணைக் காக்கின்ற இமையிற் காத்தனர்' என் பதைச் சிறக்கச் சொல்லுங்கால், மேலிமை கீழிமை என்பன வற்றில், மேலிமை பெரியது, கீழிமை சிறியது; மேலி மை அசைந்து கொண்டிருப்பது; கீழிமை அசையாமலிரு ப்பது. மேலிமைபோலப் பெரியவனாகிய ராமன் நிலைபெய ர்ந்து விசுவாமித்திர முனிவரின் ஆச்சிரமத்தில் ராக்ஷசர்கள் வந்து உபத்திரவம் செய்யாமலிருக்கும் பொருட்டுச் சுற்றி வந்து காவல் செய்தான். கீழிமை போல லக்ஷ்மணன் உள்ளே ஒருவரும் பிரவேசியாமல் இருக்கும் பொருட்டுஆச் சிரமத்தின் வாசலில் அசையாது நின்று காவல் செய்தான். இவ்விதம் காவல் செய்யும் அவ்விருவரில் இராமன் ஆச்சிர மத்தின் புறத்தில் சுற்றி வரும் போதெல்லாம் மேலிமை கீழி மையை இமைத்துத் தீண்டுவதுபோல், வாசலிலிருந்த இலக் குவனைக் கையினால் அடிக்கடி தட்டி 'லக்ஷ்மணுஜாக்கிரதை' என்றுச்சரித்துக் கொண்டே வந்தான் என்று கூறி மற்றச் செய்யுளுக்கும் ஏற்ற விதம் உரைபகர்ந்தார்." என்பதாம்.

இதன் பிறகே முன் நாம் கூறியவாறு அம்பட்டன்விஷ யம் இம்மன்னன் ஊரில் நிறைவேறியது. முற்கூறியபடி, கலைமகளுக்குச் சிலம்பைத்திரும்பக்கொடுக்கையில் சரஸ்வதி அந்தாதி என்னும் நூலைக் கம்பர் பாடினர் என்றும் (இந்நூல் வெளியிடும். அங்கு சோனது வேண்டுகோளால் தமது

சரித்திரம் முழுதும் கூறித் தாம் சோழனிடம் சபதம் செய்து வந்ததையும் வெளியிட்டார். சேரன் அவரை அடைப்பைத் தொழிலுக்கு ஆளாக்கியதற்கு ஆறுதலுயா உற்றான்.

கம்பர் தன்னைவிட்டுப் பிரிந்த நாள் முதல், சோழன் தனதுசபை விளக்கமுறாதது கண்டு அவரை எங்ஙனமேனும் தேடிவருமபடி எல்லாத் திக்குகளிலும் தூதரைப் போக்கினன். தூதுவரால் கமபர் சேரநாட்டிற் சிறந்து விளங்குவதை அறிந்து அவரைத் தன் நாட்டிற்குத் திருமப அனுப்புமாறு சேர ராஜனுக்கு ஒருதிருபமஎழுதிப்போக்கினன். அவ்விஷயம உணர்ந்த கம்பரும் சோழநாடு செல்லவிருமபினர். அவரைப் பிரிதற்குச் சேரனுக்குப் பிரிய மில்லையாயினும் அவருடைய வேண்டு கோளால் அங்ஙனம் செய்யநேர்ந்தது. அவர்செல்லு கையில் பலவித ஆடை ஆபரணங்களோடும விருதுகளோடும் தன் பரிவாரத்தோடும் அவரைச செலவிடுத்தான். அவர் போகையில், முன்கூறிவந்த சபதத்தை எந்நாள் நிறைவேற்று வதுஎன்று கேட்கக், கமபர், "அதற்குத் தகக சமயமுண்டு. அக்காலம் தாங்கள் வந்து உதவிசெய்ய வேண்டும்" என்று கூறிப் புறப்பட்டார்.

கன்றைப்பிரிந்த தாய்போல அவரை எதிர்பார்த்திருந்த பொன்னி வளநாடன் மனக்களிப்புடன் கம்பரைஎதிர்கொண் டழைத்து ஓர் ஆசனத்திருத்தித் தன்னைப் பிரிந்ததுமுதல் நிகழ்ந்தசமபவங்கள் முழுதும அவர் சொல்லக்கேட்டான். இரண்டொருநாட் சென்றபிறகு அவர்கூறிச்சென்ற பிரதிக்ஞை நிறைவேறுந் தன்மையைப பரிகாசமாய்க் கேட்கக் கம்பர் அச்சபதம் அன்றைக் கெட்டாம் நாள் நிறைவேறு மென்று கூறிவிட்டுச் சேரனுக்கு இலிகிதம் போக்கினர்.

கம்பர் கடிதத்திற் குறித்தவாறு அடைப்பைக்காரன் வேஷம் பூண்டு, குறித்த காலத்தில் சோழனுடைய சபையில் இனிதுவீற்றிருந்த கம்பரிடம்சென்று அவருக்குத் தாம்பூலம் மடித்துக் கொடுத்துக் கொண்டிருந்தான். அவன்வந்திருந்த விஷயம் சோழன்மகள் உய்த்துணர்ந்து தன்பிதாவுக்குச்சூசிப்பித்தாள். கம்பர் அக்குறிப்பை அறிந்து சோழனுக்குக் குறிப்பிக்க, அவன் உடனே அரசசபையினின்று நீங்கிக் குதிரை ஏறித் தன்நாட்டிற்குப் போகலானான். பிறகு சோழன் ஆங்குற்ற பெருந்தகையாளர் யார் எனக் கம்பரை வினவ, அவர், 'அவரே சேரர் கோன்' என்னச், சோழன் "அவரை ஏன் அனுப்பி விட்டீர்" எனக் கேட்டான். கம்பர் "அவர் உம்மிலும் பேரரசராயிருந்தும் எனக்கு அடைப்பை தாங்க வந்தனர். இதனை நீவிர் அறிவீர். அன்றியும்பரிவாரங்களுடனின்றி வந்திருப்பதை அறிந்த நீர் அவருக்கு இன்னல் இழைப்பீர் என்று உடனே செல்லுமாறு அனுப்பிவிட்டேன்" என்றார். "சேரன்மடித்துக் கொடுத்த வெற்றிலைச் சுருளை என்னீர் தரிக்கவில்லை" என்று சோழன் கம்பரைக் கேட்க, அவர், "அங்ஙனம் செய்தல் 'அற்பருக்குவாழ்வுவந்தால் அர்த்த ராத்திரி குடை பிடிப்பர்' என்பது பழமொழியாதலின், யான் உலகபாலர் உருவாகநின்று உலகம் காக்கும் இறைவன் காரணம்பற்றிக் கொடுத்த வெற்றிலைச் சுருளை உட்கொள்வேன் ஆயின், அப்பழமொழிக்கு இலக்காவேன் ஆதலால், உட்கொள்ளவில்லை" என்று கூறச், சோழன் அவருடைய வித்தியாசாமர்த்தியத்தையும்லௌகிகசம்பிரதாயத்தையும் கண்டு மகிழ்ச்சியுற்று முன்னையினும் பன்மடங்கு மரியாதை செய்து வந்தான்.

# 7. கம்பரும் சோழனும் III.

இது காறும் கம்பர் சோழனோடு கோபித்துக் கொண்டு சென்றவரலாற்றைப் புலவர் புராணமும், விநோத ரசமஞ்சரியும் வெளியிடுமாற்றைக் கூறினோம். இனித் தமிழ் நாவலர் சரிதை இவ்விஷயத்தைப் பற்றிக் கூறுவதைச் சுருக்கி இங்கு உரைப்போம்.

"கம்பர் சோழனுடன் கோபித்துக் கொண்டு மதுரைக்குப் போனபோது சொல்லியது" என்ற தலைப்பின் கீழ்,

*காத மிருபத்து நான்கொழியக் காசினியை*
*ஓதக் கடல்கொண் டொளித்ததோ—மாதவா!*
*கொல்லி மலையுடைய கொற்றவா! நீமுனிந்தால்*
*இல்லையோ எங்கட் கிடம்*

என்னும் வெண்பாத் தமிழ்நாவலர் சரிதையிற் காணப்படுகிறது. இதில் கம்பர், "நீ முனிந்தால்" என்று சோழனைப் பார்த்துரைத்தமையால், அம்மன்னவன் முதன்மையில் அவரை முனிந்தமை, [illegible] அவர் தம்முனிந்ததற்குக் காரணம் தம்மை ஆதரித்தவரும், இருவகைச் செல்வமும் ஒருங்கே எய்தப் பெற்றவரும், வள்ளலுமாகிய சடையப்பரை இராமாயணத்திற் பலவிடங்களில் மிகவும் உயர்த்திக் கம்பர் கூறியதால் அவனுக்கு உண்டான அழுக்காறேயாம் எனச் செந்தமிழ்ப் பத்திராதிபர்[0] அபிப்பிராயப் படுகின்றனர்.

நிற்க, கம்பர் உடனே மதுரை நோக்கிப் புறப்பட்டார். கம்பர் தமது நாட்டுக்கு வருதலைக் கேள்விப்பட்ட பாண்டியனும் அவனுடைய தேவியும் அவரை எதிர்கொண்டு சென்று உப

---

0 செந்தமிழ் III. 3.

சரித்து சிவிகையைத் தாங்கி நின்றனர். அப்போது கம்பர் பாண்டியனைப் பார்த்து,

*வாங்கு திரைக்கடலேழ் மஞ்சனநீர் வான்வரையின்
ஓங்கு மஹாமேரு உண்டியர்கல்—வீங்குபுகழ்
இந்திரன் சம்பந்தி இறையவனும் பண்டாரி
சந்த்ரகுல வங்கிசநீ தான்

என்று கூறியபின், அவனது தேவியைப் பார்த்து,

உமையவளும் நீயும் ஒருங்கொப்பே ஒப்பில
உமையவளுக் குண்டங்கோர் ஊனம்—உமையவடன்
பாகந்தோய்ந் தாண்டான் பலிக்குழன்றான் பாண்டியனுன்
ஆகந்தோய்ந் தாண்டான் அரசு

என்றவெண்பாவைப்பாடிச்சிறப்பித்தனர்.பாண்டிய மண்டலசதகத்தில், "பலர்புகழ்கமபருமையும் நீயும்ஒப்பாய் என்றதும்" என்றுவருதலால் முற்குறித்த செய்யுளைக் கம்பர் பாடினார் என்பதுவிளங்கும். வழுதிமன்னனால் எதிர்கொண்டழைக்கப்பட்டகம்பர், தமதுகல்வி ஆற்றலால் அம் மன்னனையும் அவையோரையும் மகிழ்வூட்டிக் கொண்டு அங்குப் பன்னாள் வசித்திருந்தனர்.

கம்பர் தன் சபையில் இல்லாததால் அது ஒளிமழுங்கிச் சிறப்பறறிருத்தலைக் கண்ட சோழன் தனதுதவறைத் தானே உணர்ந்து அவரைத் திரும்பக் கூட்டிக் கொண்டு வருமாறு சடையப்பரின் தம்பியாகிய இணையாரமார்பன் என்பவனை அனுப்பினன். அவன் மதுரை சென்று கம்பரைக் கண்டு பேசி தன்வரவின் காரணத்தை உணர்த்தினன்; பிறகு

*இது கர்ணபரம்பரையில் வந்த செய்யுள்.

தன் சபைக்கு வந்த இணையார மார்பன் யாவன் என வழுதி யர்கோன் கம்பரை வினவ அவர், அவன் தமக்கும் சரராமனு க்கும் தம்பியாகிய இணையார மார்பன் என்றார். இதனை,

நீரம் பெரிய தென்னர்பிரான் சிங்கா தனத்திற் சேர்த்திவ
ஞரென் றுரைப்ப நம்மிணை யாரமார்ப னடியேற்கும்
சாரும் சரரா மனுக்குமொரு தம்பி எனக்கம் பன்புகழும்
வாரம்பெருவெண்ணெயர்பெருமான் வளஞ்சேர்சோழமண்டலமே

என்ற செய்யுளால் அறியலாகும். இதற்குமேற் கோள்,

'என்னுடைய தம்பி சரராம னுக்கிளையான்
கன்னன் மதயானைக் கண்டன்மகன்—முன்னம்
கணையாழி முத்துதிர்க்கும் காவிரிசூழ் சோணா
டிணையார மார்ப னிவன்'

என்று கூறும் தமிழ் நாவலர் சரிதைச் செய்யுளாம்.

கம்பர் இணையார மார்பனைத் தமக்குத் தம்பி என்று கூறியது கம்பருக்கும் அவனுக்கும் ஏற்பட்ட ஒற்றுமை பற்றியா மெனக்கொள்ள வேண்டும். இணையார மார்பன் தூது வந்ததால், கம்பர் சோணாடு செல்ல நிச்சயித் திருத்தலை அறி ந்த பாண்டியன், தன் நகர்க் காட்சியைக் கம்பரும் மற்றவ னும் உணருமாறு அதனை அலங்கரித்து, அக்காட்சியைத் தோற்றுவிக்கக், கண்டகம்பர் "இது திருவெண்ணெய் நல்லூ ரின் இடுகாடு ஒக்கும்" என்றனர். இங்கு இடுகாடு என்றது, அவ் வூரின் கேவலமான பாகத்தைப்போலும். அரசன் அத் தகைய ஊரைத் தான் காணவிருப்புற்று அங்குச்சென்றனன். சடையப்பர் செய்தியை முன்னமே உணர்ந்து பலமணிகளா

லும் பசும்பொன்னாலும் அமரர் பதிபோல் அலங்கரித்து இரு ந்தனர். உண்மையில் அந்நகர் மதுரையினும் மேம்பட்டிருந் ததைப்பாண்டியன் கண்டு, தன்னூர் மீண்டனன். இவ்விஷய ங்களைச் சோழ மண்டல சதகத்தில் உள்ள

*விள்ளு மதுரை அலங்கரித்த வீம்பு நோக்கி வெண்ணெய்நல்லூர்*
*உள்ளு மிடுகா டொக்குமென வுரைத்தான் கம்பன் உரைத்தமுறை*
*அள்ளு மணியாற் பசும்பொன்னால் அமரர் பதிபோல் அலங்கரித்தே*
*வள்ளல் வழுதி அதிசயிப்ப வாழ்ந்தோன் சோழ மண்டலமே.*

என்னும் செய்யுள் உணர்த்தும். இஃதிங்ஙனமாகக் கம்பர் சோழன்பாற் சென்று முன் போலவே அவனு டைய சபையை அலங்கரித்திருந்தனர்.

"கம்பர் பின்னொருகாற் சோழனுடனே கோபித்துக் கொண்டபோது சொன்ன வெண்பா" என்னும் தலைப்பின்கீழ்,

*மன்னவனு நீயோ மண்ணுலகு மிவ்வளவோ*
*உன்னையோ யான்புகழ்ந்திங் கோதுவ—தென்னை*
*விருந்தேற்றுக் கொள்ளாத வேந்துண்டோ சோழா*
*குரங்கேற்றுக் கொள்ளாத கொம்பு*

என்று தமிழ் நாவலர் சரிதையில் இருப்பதால் கம்பர் இரண்டாமுறையும் கோபித்துச் சென்றமை வெளி யாகிறது. அதற்குக் காரணம், சோழனால் கம்பர் தம் புத்திர னையும், அவன் மகனால் தம் புத்திரியையும் சாகக் கொடுத்த தில் ஏதேனும் ஒன்றாயிருக்கலாம் என்று செந்தமிழ்ப் பத்தி ராதிபர் கூறுகின்றனர். இங்குக் குறித்த இரண்டு விஷயங்க ளில், முன்னதை இந்நூலின் பிறிதொரு இடத்து விரித்திரு க்கின்றோம். ஆதலின் அதனை ஒழித்துப் பின்னதை மட்டும் இங்குக்கூறுவோம். இவ்விஷயம் கம்பர் மரபினர்க்குள் வழங்

குகிற தெனச் செந்தமிழ்ப் பத்திராசிரியர் கூறுகிறார். அது வருமாறு: கம்பருடைய திருப்புதல்வியாகிய காவிரி யென்னும் மங்கையைச் சோழன் மகன், தன்மரபினர் கொண்ட முறைக்கு மாறுகக் காதலித்து அவளைப்பெறச் சமயம் பார்த்திருந்தான்.

அவனுடைய தீயசிந்தனையை யுணர்ந்த காவிரி மானமழிந்துவாழ்தலினும் உயிர் துறத்தலே உயர்ந்ததெனத் துணிந்தனள். துணிந்து தன்மேல் ஏறினாரை உட்செல்லவிடுத்துப் புதைக்கும் தன்மைவாய்ந்த கம்பு என்னும் தானியத்தின் அம்பாரத்தின் மேல்ஏறித் தற்கொலைசெய்து கொண்டனள். இவளைக் கம்பர் வழியினர் இன்றும் குலதெய்வமாகக் கொண்டாடுகின்றனர்.

இதுநிற்க, சோழனோடு கோபித்துக் கொண்டு ஐதராபாத்துக்கு வடமேற்கிலுள்ள ஓரங்கல்லிலே அரசாண்ட ஆந்திர ராஜனாகிய பிரதாபருத்திரனிடம் செல்லப்புறப்பட்ட கம்பர் பாதியிலே நென்மலி யென்ற ஊர்த்தலைவனை

நெற்பயிர் விளைகழனி நென்மலிவாழ் தச்சன்
கற்படுதிண் டோளான் கங்கண கணகணவன்
விற்புரை திருநுதலாள் மின்மிது மிதுமிதுவை
சொற்படி வேலை செய்வாள் துந்துமி துருதுருவை

என்னும் செய்யுளால் புகழ்ந்து இதற்குப் பரிசாக ஆயிரங்கல நெல் பெற்றனர். இதனை

நிச்ச முறவே நெற்பயிராய் நீளுந் தமிழ்க்கு நெல்மலிவாழ்
தச்சன் பொலிஆ யிரக்கலநெற் றந்தான் உலகிற் றுதாவாய்
மெய்ச்ச மவனது ஆண்மையினால்வென்றேகொடியன்விருதுகட்டி
வைச்ச கோடையன் காமெளிதோ வளஞ்சேர் சோழமண்டலமே

என்ற சதகச் செய்யுளால் உணரலாகும்.

பிற்கு அங்கிருந்து புறப்பட்டு கம்பர் ஒருவேளாளர் களத்தில் குறுணி நெல்வாங்கி வேலிக்காலில் இறைத்து விட்டு,

செட்டிமக்கள் வாயில்வழிச் செல்லோமே செக்காரப்
பொட்டிமக்கள் வாயில்வழிப் போகோமே—இட்டமிலாப்
பார்ப்பா ரகத்தையெட்டிப் பாரோம் பரிசறிந்து
காப்பார் உழுவார்சர் காண்

என்று பாடினர். பிறகு வழியில் எதிர்ப்பட்ட பலரால் போற்றப்பட்டு முடிவில் ஒரங்கல்சென்று அம்மன்னனைப் பாடினர். அதனைத் தமிழ் நாவலர் சரிதையில் "கம்பர் பிரதா பருத்திரனிடத்துப்போய் அவன் அடைப்பை கட்டிவரப் பாடிய வேண்பா" என்னும் தலைப்பின்கீழ்,

அவனி முழுதாண்டும் அயிரா வதத்துன்
பவனி தொழுவார் படுத்தும்—புவனி
உருத்திரா உன்னுடைய ஒரங்கல் நாட்டில்
குருத்திரா வாழைக் குழாம்

என்னும் செய்யுள் காணப்படுகின்றது.

இராமாயணத்திற் சிற் சில விடங்களில் ஆந்திர மொழிகளைக் கம்பர் உபயோகித்திருக்கிறார். அதனால் தமிழே அன்றி ஆந்திர மொழியும் அவர்பயின்றிருந்தனர் என்று வெளியாகின்றது. அங்ஙனமாயின், உருத்திரனைத் தமது இராமாயணப் பாடல்களில் ஈடுபடும்படி செய்து தம்பெருமையை நன்கு புலப்படுத்திய பின்னர், சோழன் தமக்குச் செய்த சிறுமையை எடுத்துரைத்துத் தம்முடன் சோணுடு

வரும்படி உருத்திரனை வேண்ட, அவனும் அங்ஙனமே வந்து இப்புலவருடைய மனோபீஷ்டத்தைப் பூர்த்தி செய்திருப்பான் என்பதில் தடையில்லை.

இதுவரை கூறியவாற்றால், 'கம்பர் சோழனோடு ஒரு முறை மட்டும் கோபித்துக்கொண்டு சேரனிடம் சென்றதாக விநோத ரசமஞ்சரியும், முற்கூறியவாறு இரண்டு முறை சென்றதாகப் புலவர் புராணமும், ஒரு முறை மதுரைக்கும் மறுமுறை ஓரங்கல்லுக்கும் ஆக இரண்டுமுறை சென்றதாகத் தமிழ் நாவலர் சரிதையும் புலப்படுத்தியதை உணர்ந்தோம். கம்பர் கோபித்துச் சென்றமைக்குக் கூறப் பெறும் பல காரணங்களும் கூறினோம். அவற்றுள் எது உண்மையுடைய தெனத் துணிந்து கூறத்தக்க ஆதாரங்கள் இன்னும் நமக்கு அகப் பட்டில. ஆயினும், முற்கூறியவற்றைச் சிறிது ஆழ்ந்து நோக்கின், இரண்டொரு விஷயங்கள் நமக்குப் புலப்படும். கம்பர் மதுரை சென்றதையே விநோத ரசமஞ்சரி உடையார் அவர் சேரனாடு சென்றதாகக் கூறினர். கம்பர் சேரனாடு சென்றிருப்பின் அம்மன்னனைப் பாடாது மௌன விரதத்துடன் திரும்பினர் என்றல் ஒப்புக் கொள்ளத்தக்கதின்று. கம்பர் மதுரைக்குச் சென்றதை நூல்களும் ஒப்புக்கொள்ளுகின்றன என்பது உரைக்கப்பட்டது. அன்றியும், கம்பர் சம்பந்தமாய்ச் சேரனாட்டில் நடந்தனவாக விநோதரசமஞ்சரி ஆசிரியர் கூறும் விஷயங்களும், மதுரையில் கம்பர் இருந்த காலத்து நிகழ்ந்தனவாகப் புலவர் புராண ஆசிரியர் கூறும் விஷயங்களும் அநேகமாக ஒத்திருப்பதால் கம்பர் மதுரைக்குச் சென்றார் என்பதையே விநோதரச மஞ்சரியுடையார் அவர் சேரனாடு சென்றதாகக் கூறினாரெனத் தெரிகிறது.

கம்பர் மதுரைக்குச் செல்லுகையில் சுவர் வைத்ததும் அது பிரமராக்கதன் சேஷ்டையால் கீழே விழலும், கம்பர் தெய்விகப் புலவர் என்றுணர்ந்து அது விலகிப்போய்விட்டதால் சுவர் நின்றது மாகிய வரலாறுகள் முன்னர் கூறப்பட்டன. பிரமராக்கதத்தின் தொழிலே இக்காலத்தார்நம்பார். அன்றியும், பிரமராக்கதத்தின் பிரஸ்தாபமே அச்செய்யுளில் இல்லை. ஆயினும், கம்பர் அச்செய்யுளைப் பாடியிருப்பின் அது வேறுகாரணத்தால் பாடப்பட்டிருக்க வேண்டுமென நன்கு புலப்படும். கம்பர் புலவர்சிகாமணி ஆதலாலும், முன் சுவர் வைத்தறியாதவர் ஆதலாலும் தாம் வைத்த அவலச் சுவர் கீழே விழாமலிருக்கும்படி அதனை முன்னிலைப் படுத்திப் பாடிய செய்யுள் ஆக இது இருத்தலே பொருத்தமுடையதாம். இப்படிக்கொள்ளாமலே அச்செய்யுளின்போக்குக்கு மற்ற கருத்தும் ஆம்.

கம்பர் சோணாட்டில் இருக்கையில், "-எண்ணுதற்கு' என்றுதொடங்கும் செய்யுளுக்குத் தகுந்த அர்த்தம கூறி அரசனது நன்மதிப்பை பற்றார் என்று கூறுவது பொருத்தமுடையதெனத் தோன்றவில்லை. அச் செய்யுளின் பின் அமைந்த பாட்டில்,

> காத்தனர் திரிகின்ற காளை வீரரில்
> மூத்தவன் முழுதுணர் முனியை முன்னிநீ
> இத்தொழில் வியற்றுவர் என்ற நியவர்
> எத்தரும் குணத்தினுய் வருவ தென்? என்றான்.

என்று கூறப்பட்டிருக்கிறது. இதில், 'காத்தனர் திரிகின்ற காளைவீரரில்' என்பதற்குக், "காத்தனர்களாய்ச்சுற்றித் திரிகிற காளை போலும் இராம இலக்குமணர்களில்" என்ற

பொருள் வருவதால், இதுகாறும் சாதாரணமாய்க் கூறப் பெற்று வந்த பொருள் சரியோ எனச்சிலர் ஐயுறுகின்றனர். ஆனால் கம்பர் எங்குச் சென்றிருப்பினும் இராமாயணத்தைப் பிரசங்கித்துச் சிறப்படைந்திருப்பர் என்பதை யாரே ஒப்புக் கொள்ளார்! ஆனால் விநோதரசமஞ்சரி கூறியவற்றைத்தான் கம்பர் கூறினர் என்று துணிய முடியவில்லை.

கம்பர், சரஸ்வதியிடம் அவளது சிலம்பினைப் பெற்று அம்பட்டன் தமக்குறவினனன்றென வெளிப்படுத்தியதாகக் கூறுதல், அவர்பால் தெய்விக சக்தி இருந்ததாகப் பலர் எண்ணுதல் பற்றியேயாம். கடவுள் கடாட்சமில்லாதார் அருட்கவிகள் பாட முடியாதென்பது யாவரும் உணர்ந்த விஷயமே. ஆயினும் அத்தகைய விஷயத்திற்கும் கடவுட் சம்பந்தம் உண்டாக்குதல் முற்கால வழக்குப் பற்றி இங்ஙனம் கூறினர். பின்னர் கம்பர் சிலம்பு காட்டியது மெய்யென்று கொள்ளின், அவர் தம்மிட மிருந்த ஒரு ஆபரணத்தைப் போன்றதொன்று அம்பட்டனிடமிரா தென்றெண்ணித் தம்மிடமிருந்த ஓர் ஆபரணத்தைக் காட்டி இத்தகைய சூழ்ச்சியைக்கைக் கொண்டனரென்றுகூறுதலேஏற்புடையதாம். இங்ஙனம் கொள்ளும் நமது அபிப்பிராயத்துக்கு ஆதாரம், கம்பர் இயற்றியதாக வழங்கும் சரஸ்வதிஅந்தாதியில் சிலம்பையேனும் அதனோடு சம்பந்தப்பட்டபிறவற்றையேனும் பற்றிய பிரஸ்தாபமே இல்லாமையே ஆம்.

கம்பர் இரண்டாமுறையும் மதுரைக்குச் சென்றாரென்று புலவர் புராண முடையார் அறிவிப்பது எத்துணை உண்மை உடையதோ நமக்குப் புலப்படவில்லை. தமிழ்நாவலர் சரிதை கம்பர் இரண்டாமுறை ஓரங்கல்லுக்குச் சென்ற

விஷயத்தை வெளியிடுவதாலும், அந்நூல்புலவர்புராணத் தினும்மூறப்பட்டதாதலாலும் அதனைச்சிறந்த ஆதாரமாகக் கொள்ள வேண்டியதிருக்கிறது. அங்ஙனம் கொள்ளின்கம்பர் மறுமுறை ஓரங்கல் சென்றூர் என்பதே உறுதிப்படும்.

ஆனால், கம்ப நிலயம் புதுவை ஸ்ரீசுப்பிரமணிய ஐயர் தாம் புதிதாய் வெளியிட்ட பாலகாண்டமுகவுரையில் இவ் விஷயசம்பந்தமாய்க் கூறியதும் இங்கு நோக்கத்தக்கது. கம்பர் தமது நூலில் சில இடங்களில் ஆந்திரமொழி உப யோகப்படுத்தியதி லிருந்து அவர்அம்மொழிவல்லுநர்என்று துணியக் கூடாதென்றும், ஒருவேளை கம்பருக்கு அப்பாஷை யிற் பயிற்சியிருப்பினும் பிரதாபருத்திரனுக்குத் தமிழிற் சிறந்த அறிவு இருந்த தென்று துணியக் கூடவில்லை யென் றும் அவர் கூறினர். கம்பருக்குத் தெலுங்கு தெரிந்திருப்பின் அப்பாஷையில் தமது இராமாயணத்தின் கருத்தை எடுத் துரைத்தால் அதனை அவ்வரசன் உணர்ந்துரசிக்கமாட்டானு? வடமொழி இராமாயணத்தின் கருத்தைத் தமிழிற் கூறி ஞல் வடமொழி அறியாதாரும் கூறப்பெற்ற விஷயரசத்தை அனுபவிப்பதில்லையா? அங்ஙனமேபிரதாபருத்திரனும் செய் தனன் என்று கூறுவதில் என்னதவறு இருக்கிறது? ஆதலால் கம்பர் பிரதாபருத்திரனிடம் சென்றனர் என்பதை நாம் மறுத்துரைக்கக் காரணம் இல்லை.



## 8 கம்பர் காலம்.

இப்புலவர் பெருமான் வாழ்ந்த காலத்தைப் பற்றி இரண்டுவித அபிப்பிராயங்கள் இருக்கின்றன. ஒரு சாரார் அவர் இற்றைக்கு எழுநூற்று இருபத்து ஐந்து ஆண்டுகளுக்கு முன் இருந்தனர் என்பர். இன்னொரு சாரார் அவர்தொளாயிரத்து இருபத்து ஐந்து ஆண்டுகளுக்கு முன் வாழ்ந்தனர் என்பர். இவ்விருதிறத்தாருள் ஒருசாரார் தங்கள் சார்புக்கு அநுகூலமாகக் கூறுங்காரணங்கள் எவையெனப் பார்ப்போம்.

கம்பரும், ஒட்டக் கூத்தரும், அவருடைய மாணாக்கனாகிய குலோத்துங்க சோழனும், புகழேந்திப் புலவரும்ஒரே காலத்தில் வாழ்ந்தனர் என்று கூறும் கர்ண பரம்பரைக் கதைகள் பலவுள. இவர்கள் காலத்தில் பிரதாபருத்திரனும் இருந்திருக்கிறானென்று அறியக்கிடக்கின்றது. இங்குக் கூறிய நால்வருள் ஒருவருடைய காலம் தெரிந்தால் அதுவே மற்றவர்களுடைய காலமுமாம். ஆதலால் ஒட்டக் கூத்தருடைய காலத்தைப் பற்றிச் சிறிது ஆராய்வாம். ஒட்டக் கூத்தர் பெண்பேசி மணமுடிப்பித்தது குமார குலோத்துங்கனுக்கு ஆம். குலோத்துங்கன் என்றபெயரோடு பலசோழர்கள் இருந்தாலும், அவர்களுள், இவன், அபய சோழனுக்குப் பேரனும், விக்கிரமசோழனுக்கு மகனுமானவனெனச் சரித்திரக்காரர்கள் நிச்சயித்திருக்கிறார்கள். அன்றியும் அச் சோழன், பவனி வரும் பொழுது கூத்தர் அவனைப் புகழ எண்ணி,

> "ஆடுங் கடைமணி நாவசை யாமல் அகிலமெங்கும்
> நீடுங் குடையைத் தரித்தபிரான் இந்த நீணிலத்தில்"

என்று முன்னிரண்டடியும் பாடவே, சோழன் அச்செய்யுளை முடிப்பான் எண்ணி,

"பாடும் புலவர் புகழ் ஒட்டக் கூத்தன் பதாம்புயத்தைச்
சூடுங்குலோத்துங்க சோழனென் றேஎன்னைச் சொல்லுவரே"

என்று கூறினன். இவ்விஷயத்தைப் புலவர் புராண முடையார்,

"எத்தனை புலவ சோழன் இறைவரை வயஞ்செய் தூற்றார்
அத்தனை பேருள் ஆரும் அருந்தமிழ் ஒட்டக் கூத்தன்
ஒத்தவர் முடிமேல் தந்தா ளூறவைத்த தில்லை இல்லை
இத்தனை அதிட்டம் அன்னூர்(கு) அமைந்தமை யோற்றாதானே"

என்று பாராட்டுகூறுர்.

ஒட்டக்கூத்தர் பாடிய உலாக்களில், விக்கிரம சோழன், அவன் குமாரன் குமாரகுலோத்துங்கசோழன், அவன்புதல்வன் ராஜ ராஜ சோழன் என்ற மூன்று அரசர்களையும் பாடியிருக்கின்றனர். எனவே, கூத்தர் குலோத்துங்கன் காலத்தில் வாழ்ந்ததல்லாமல், அவன்பிதாவின் காலத்திலும் பிள்ளையின் காலத்திலும் வாழ்ந்திருந்தனர் என்பது வெளியாகிறது.

இம்மூவர் காலத்தையும் சரித்திரக்காரர்கள் ஆராய்ச்சியுடன் வெளியிட்டபடி இங்குக் குறிப்போம்.

விக்கிரம சோழன் கி. பி. 1118—1132.
குமார குலோத்துங்க சோழன் கி. பி. 1132—1162.
ராஜ ராஜ சோழன் கி. பி. 1162—1200.

இனிக்கூத்தரும் கம்பரும் ஒரே காலத்தில் வாழ்ந்திருந்தனர் என்பதை வலியுறுத்தும் ஆதாரத்தை இங்குக் குறிப்போம்.

புதுவைச் சடையன் பொருட்கு சங்கரனுக்(கு)
உதவித் தொழில் புரிந்த ஒட்டக் கூத்தனைக்
கவிக்களி றுகைக்கும் கவிரா கூதனெனப்
புவிக்குயர் கவுடப் புலவனு மாகி
வேறுமங் கலநாள் வியாதுகாங் கேயன்மேல்
கூறுநா லாயிரக் கோவைகொண் டுயர்ந்தோன்

என்னுமிவ் வடிகளால், கூத்தர் சடையப்பவள்ளலுக்குத் தந்தையாகிய சங்கரன் என்பவருக்கு உதவித் தொழில் புரிந்தனர் என்று கூறப்படுகிறது. கம்பர், சங்கரன் மகனாகிய சடையப்பவள்ளலால் போற்றப் பெற்றதால், இவ்விருவரும் சற்றேறக்குறைய ஒரே காலத்தவர் என்று துணியலாம். அதாவது, கி. பி. 1118-க்கும் 1200-க்கும் உட்பட்ட 82வருஷங்கட்கு இடைப்பட்ட காலமாம். கூத்தர் சடையப்ப வள்ளலின் தந்தையாகிய சங்கரனுக்கு உதவித் தொழில் புரிந்தார் என்பதாலும், கம்பர் தாம் தெய்வமாந்தால் கவி பாடிய நாட்களில் முதல் முதலில் சடையப்பன் உரையையே புகழ்ந்திருத்தலாலும், கம்பர் அக்கவி பாடிய காலத்து சங்கரனது காலம் கழிந்ததாகக் கொள்ளவேண்டும். ஏனெனில், தந்தையிருக்க மகனைப் பாடாராகலின். அச்சமயம் கூத்தர் விக்கிரமன்பாற் சார்ந்து அவனைப் பாடினர் என்றுங் கொள்ள வேண்டும். இவற்றால் கம்பர் கூத்தருக்கு இளையவர் என்பது பெறப்படுகின்றது.

ஒரு உத்தேசமாகக் கூத்தர் பிறந்தது கி. பி. 1100ம் ஆண்டெனவும், சங்கரன் இறந்தது கி. பி. 1127ஐ அடுத்து என்றும் கொண்டால், கம்பர் பிறந்தகாலம் இவ்விரண்டுக்கும் உட்பட்டதென ஒருவாறு கொள்ளலாம். அங்ஙனம் கொள்ளின் கம்பர் சடையப்பனுக்குச் சுமார் 10 வருஷங்

ளுக்கு இளையவராதல் அல்லது ஒத்தபருவத்தினர் ஆதல் வேண்டும். ஆகவே கம்பர் சுமார் கி. பி. 1120 ஆண்டில் பிறந்தனர் என்று கொள்ளுதலே ஏற்புடைத்தாம். குலோத்துங்கனுடைய ஆட்சியின் முடிவில் அவருக்கு சுமார் 40 வயது இருக்கலாம். எனவே ராஜ ராஜ சோழன் காலத்தின் துவக்கத்தில் அவர் இராமாயணம் அரங்கேற்றினர் எனப் புலவர்கள் அபிப்பிராயப்படுகின்றனர். இவ்விராஜராஜ சோழனே கம்பரை வில் அம்பால் எய்து சொல்லம்பாகிய சாபத்தை அவர்பால் ஏற்றவன். இச்சோழன் தம்மேற்கொண்ட பகைமையாலேயே கம்புலவர் ஓரங்கல் பிரதாபருத்திரனிடம் சென்றார் என்ப.

பிரதாபருத்திரன் என்ற பெயரோடு இருவர் இருந்தனர் என்று துணியப்படுகிறது. ஒருவன் கி. பி. 1162 முதல் 1197 வரை ஆட்சிபுரிந்தவன். மற்றவன் கி. பி. 1288—1323 வரை ஆண்டவன். இவ்விருவருள் முதலாவது பிரதாபருத்திரனுடைய ஆட்சியின் பிற் பகுதியில் (அதாவது சுமார் கி. பி. 1190) கம்பர் அவனிடம் சென்று அவனைக் கொண்டு தமக்குச் சோழன்மேல் இருந்த பகைமையை முடித்துக்கொண்டார். இரண்டாவது பிரதாபருத்திரன் காலத்தே கம்பர் அவனிடம் சென்றாரென்பது பொருந்தாது. அவனுடைய ஆட்சியின் இறுதிக்காலம் 1323ம் ஆண்டு ஆதலாலும், அதுவரை கம்பர் உயிர்த்திருப்பின், அவருக்குமனித வயதுக்கு மேற்பட்ட ஆயுளைக்கற்பிக்க வேண்டுமாதலாலும் அது ஒவ்வாது. ஆதலால் கம்பர் முதலாவது பிரதாபருத்திரனிடம் சென்றதே ஒப்பத்தக்கதென விளங்கும்.

இத்திறத்தார் ஆராய்சசி இதுவாக, மற்றொரு சாரார், "எண்ணிய சகாப்தம், எண்ணூற்றேழின்மேல் சடையன் வாழ்வு நண்ணிய வெண்ணெய் நல்லூர் தன்னிலே கம்ப நாடன்" என்ற செய்யுளையே ஆதாரமாகக் கொண்டு, கம்பர் சகாப்தம் "எண்ணூற்றேழில்" அதாவது கி. பி. 885ல் வாழ்ந்தனர் என்பர். அங்ஙனம் கூறுவோர் முற்கூறிய ஆதாரங்களைக் கண்டிக்க வேண்டியது அவசியமாகும். சகாப்தம் "எண்ணூற்றேழு" ஒட்டக்கூத்தர் காலமுமன்று; அவர் உதவித் தொழில்புரிந்த சடையன் பொருந்து சங்கரன்காலமுமன்று; ஓரங்கல் பிரதாபருத்திரன் காலமுமன்று; இவையாவும் இல்லாத இடத்து அது கம்பர்காலமுமன்றும். கம்பரும் கூத்தரும் ஒரே காலத்தவர் அன்று என்போர்கள், பிரதாப உருத்திரன், சடையன், சங்கரன் என்ற பெயரே கொண்டு, கூத்தருக்கு சுமார் 200வருஷங்களுக்கு முன்பாக இம்மூவரும் இருந்தனர் என்று கொள்ளுவர். அப்படிக் கொள்ளும் கூற்றை ஆதாரமின்றி நம்புவதற் கிடமில்லை. இனிக் கம்பராமாயணத் தனியனுகிய "எண்ணிய சகாப்தம்" என்னும் செய்யுள் எக்காலத்தில் யாரால் எழுதப்பட்டதென்று தெரியவில்லை. "எண்ணூற்றேழு" என்பது தவறி எழுதப்பட்டதென்று கொள்ளல் வேண்டும், இன்றேல் பாட பேதமேனும், பொருட் பேதமேனும் அதற்கு இருத்தல் வேண்டும் என்பது ஒருதலை. இதுகிடக்க.

இனி இராமநாதபுரம் மகாவித்வான் ஸ்ரீராகவஐயங்கார் அவர்கள் "எண்ணூற்றேழின்மேல்" என்று பாடங்கொண்டு, "சகாப்தம் எண்கின்ற நூற்றேழின் மேல்" என்று பொருள் கொண்டு உலகவழக்கில் பேரெண்ணுகிய ஆயிரம்

என்பதை ஒழித்து, நூற்றேழு என்று கூறியதாகக்கொள்ள வேண்டுமென்றும்; 'எண்ணூற்றேழின் மேல்' என்றபாடமே சரியெனக் கொண்டால், அதுவே 'எண்ணப்படும் (ஆயிரத்து) நூற்றேழின்மேல்' என்று பொருள் படுமென்றும் விளக்கிக் காட்டினர். சகாப்தம் 1107 என்பது கி. பி. 1185 ஆகும். எனவே, முற்கூறிய ஆராய்ச்சியாற் கிடைத்த காலமும், இங்கு இச்செய்யுள் குறித்தகாலமும் பொருந்தியிருப்பதால், ஸ்ரீமான் ஐயங்காரவர்கள் கொண்ட காலம், ஆக்ஷேபணை யின்றி ஒப்பத்தக்கதாயிருக்கிறது.

அன்றியும், இராமாயணத்தில் ஈடுபட்ட இராமாநுஜ முனிவர் தழைக்கச் செய்த வைஷ்ணவம் ஓங்கிய காலமும் இதுவே ஆம். அக்காலம், சடகோபர் ஆழ்வாரது பிரபாவத் தைக் கூறும் அடியார்கள் மிகுந்த காலமாம். இவ்விஷயத் தையே, கம்பர் தாமியற்றிய சடகோபரந்தாதியில்,

> "கூட்டங்கள்தோறும், குருகைப்பிரான்குணம்கூறும் அன்பர்
> ஈட்டங்கள்தோறும் இருக்கப் பெற்றேம், இருந்தேம்முடைய
> நாட்டங்கள் தோறும் புனல்வந்து நாலப் பெற்றேம்"

என்று கூறினர். இதனால் சடகோபராகிய குருகைப் பிரான் குணம் கூறும் கூட்டங்கள் பல விருந்தனவென்றும், அவற்றுள் தாமுமிருந்து பத்தியிலாழ்ந்து, கண்களில் நீர் பெருகப் பெற்றின்புற்றிருந்தனரென்றும் 'நன்கு விளங்கு கிறது. அங்ஙனங் கூறக்கூடிய காலம் முற்கூறப் பெற்றதே ஆம். இவ்விஷயமும் ஸ்ரீமான் ஐயங்கார் அவர்கள் அபிப்பி ராயமே.

இதுகாறும் கூறியவாற்றால், கம்பர் இற்றைக்குச் சுமார் 725 ஆண்டுகளுக்கு முற்பட்டவரென்பது வெள்ளிடை மலைபோல் விளங்குகின்றது.

—:o:—

## 9. கம்பர் இயற்றிய நூல்கள்.

கம்பர் இயற்றிய இராமாயணத்தைப்பற்றி முன்னரே வேண்டிய அளவு விரித்துரைத்தோம். அதை அரங்கத்தில் அரங்கேற்றுகையில் சடகோபர் அந்தாதி பாடப்பட்டதென அறிந்தோம். சடகோபர் என்பார் வைணவ சமயத்துப் பன்னிரு ஆழ்வார்களில் நம்மாழ்வார் என்று சிறப்பித்துக் கூறப் பெற்றவர். அவர்பிரபாவத்தையே சடகோபர் அந்தாதி எடுத்துரைக்கின்றது.

ஏரெழுபது-சேம்போற் சிலை எழுபது—இவற்றுள் 'ஏரெழுப' தைப் பற்றி முன்னரே சிறிது கூறினோம். அது விவசாயத்துக் குரிய வர் முதலிய சாதனங்களைப் புகழுமாற்றால், மேன்மக்களாகிய வேளாண்மாந்தர்தம் சிறப்பை உரைக்கும் எழுபது பாடல்களால் ஆகியநூல். இந்நூல் விநாயக வணக்கத்தை அடியாகக்கொண்ட பத்துப்பாடல்களைப் பாயிரமாகக் கொண்டுள்ளது. ஏரெழுபதின் போக்கையேஅநுசரித்து சேம்போற் சிலை எழுபதும் அமைந்துள்ளது. இந்நூல் அக்கினிகுல அரசராகிய வன்னிய பூபதிகளுடைய சிலை முதலிய போர்ப்படைகளைப் புகழுமுகத்தால் அவர் சிறப்பை விளக்கும் எழுபது செய்யுட்களால் ஆகியது. இதற்கும் விநாயக வணக்கம் முதலியன கூறும் 8 செய்யுள்களால் ஆகிய பாயிரம் உண்டு. இந்நூலைக் கம்பர் யாத்தனர் என்பதற்கு ஏற்ற ஆதாரம் இன்றெனச் சிலர் அபிப்பிராயப்படுகின்றனர். இவ்விரண்டு நூல்களும், வெவ்வேறு நோக்கைக் கொண்டனவேனும், ஒரே போக்கையே கொண்டுள்ளன. அடியிற் காணப்படுவனவற்றைக் காண்க.

### ஏரெழுபது பாயிரம் 8.

தொழுங்குலத்திற் பிறந்தாலென் சுடா முடிமன்னவராகி
எழுங்குலத்திற் பிறந்தாலென் னவர்க்குப்பின் வணிகரேனும்

செழுங்குலத்திற் பிறந்தாலென் சிறப்புடைய ராணுலென்
உழுங்குலத்திற் பிறந்தவரே உலகுய்யப் பிறந்தவரே.

சிலை யெழுபது பாயிரம். 7.

மறைக்குலத்தில் உதித்தாலென் மறையுணர்ந்தாலென்வணிகர்
நிறைக்குலத்தில்உதித்தாலென் நிதிபடைத்தால் என்ஞன்காம்
முறைக்குலத்தில் உதித்தாலென் முயற்சிசெய்தா லென்வன்னி
இறைக்குலத்தில் உதித்தவரே இகபரனென் றியம்புவரே.

ஏரெழுபது. 9.

அழுங்குழவிக் கன்புடைய தாயேபோல் அனைத்துயிர்க்கும்
எழுங்கருணைப் பெருக்காளர் எளியரோ யாம்புகழ
உழுங்கழுவில் கருவீறி உலகமுதற் கருவாகச்
செழுங்கமலத் தவனிவரைச் செய்துலகம் செய்வானேல்.

சிலையெழுபது. 5.

............................................ஆகுதியோங்கித்
துங்கமனு நெறிதழைக்கத் துகளறுவன் னியின்றும்
பங்கயனு முதலிவரைப் படைத்துலகம் படைத்தனனுல்.

ஏரெழுபது ஊற்றாணிச் சிறப்பு .5.

நீற்றோனும் மலரோனும் நெடியோனும் என்கின்ற
தோற்றுள ரிவராலே தொல்லுலகம் நிறைபெறுமோ?
மாற்றுத காவேரி வளநாட ருழுங்கலப்பை
ஊற்றாணி உளதாயின் உலகுநிலை குலையாதே.

சிலையெழுபது. குதிரைப்படைச் சிறப்பு.26.

பூவேறி நான்முகனும் புள்ளேறித் திருமாலும்
சேவேறிக் கண்ணுதலும் செய்வதென்னே நிஞ்சவைகள்

பாவேறிப் புகழ்பெற்றுப் பாராளும் வணிகர்தழல்
மாவேறிப் பகைவென்று மாநிலங்காத் தருள்வாரே.

ஏரெழுபது உழவின்சிறப்பு. 20.

அலகிலா மறைவிளங்கும் அந்தணரா குதிவிளங்கும்
பலகலையாம் தொகைவிளங்கும் பாவலர்தம் பாவிளங்கும்
மலர்குலாம் திருவளரும் மறைவிளங்கும் மனுவிளங்கும்
உலகெலாம் ஒளிவிளங்கும் உழவருழும் உழவாலே.

சிலையெழுபது பதியிருத்தற் சிறப்பு. 56.

பண்ணுடர் தமதுபெரும் பதியிருப்ப தாலிமையோர்க்
கெண்ணுர்ந்த சிறப்பிருக்கும் இம்பர்மனு முறையிருக்கும்
கண்ணுமுத் தமிழிருக்கும் கற்றோர்க்குப் புகழிருக்கும்
விண்ணூர்ந்த மழையிருக்கும் மிடியிருக்க மாட்டாவே.

இச் செய்யுள்களின் போக்கைக் கொண்டு ஏரெழுபது பாடினவர், செம்பொற்சிலை யெழுபதைப் பாடியிருப்பாரா, இராரா என்று படிப்போர் அறிந்துகொள்க.

கம்பர் எழுதிய திருக்கை வழக்கம் என்னும் சிறுநூல், வேளாளருடைய கைவழக்கைக் கூறுவது; கலிவெண்பாவால் ஆகியது. புகழேந்திப்புலவர் இயற்றிய திருக்கைவழக்கம் என்னும் நூல் அச்சிலமைந்து அடியும் முடிவுமின்றி எமக்குக் கிடைத்தது. அது செங்குந்தர் கைவழக்கைக் கூறுவது போலும். புகழேந்தியார் அத்தகைய நூலை இயற்றியதாக இதுவரை யாம் கேள்விப்பட்டதில்லை. இவ்விஷயம் மிகை யாகாதென்றெண்ணி இச்சந்தர்ப்பத்திற் குறித்தோம். இது நிற்க.

கம்பர் இயற்றிய திருக்கை வழக்கத்து அச்சுப்பிரதிக்கும் ஏட்டுப்பிரதிகளுக்கும் வேறு பாடுகள் பல இருப்பன

வாகச் சொல்லப்பெறுவதால், அதைப்பற்றி நாம் இங்கொன்றும் எழுதவில்லை.

கலைமகள் அந்தாதி என்ற சரஸ்வதி அந்தாதியும், இலக்குமி அந்தாதியும்:—சரஸ்வதிஅந்தாதியைப்பற்றிமுன்னரே கூறினோம். அந்நூல் காப்புச் செய்யுளாகிய இரண்டு வெண்பாக்கள் நீங்கலாக, 30 கட்டளைக்கலித்துறைகளால்ஆகியது. இதைக் கம்பர் பாடியிருப்பின் இளமைப் பருவத்தில் எழுதியிருக்கலாம் என்று சொல்லக் கூடியதாக இருக்கிறது. இலக்குமி அந்தாதியில் கம்பர் வாக்கின் வளம் நூறு சிறிதும் காணப்படவில்லை என்னப் புலவர் சிலர் அபிப்பிராயப் படுகிறார்கள்.

இது காறும் கூறப் பெற்றவை அன்றி,கம்பர் பெயரால் வழங்கும் நூல்களும் சிலஉள.அவை:காஞ்சிப்புராணம், காஞ்சிப்பிள்ளைத் தமிழ்,சோழக்குறவஞ்சி,ஓரகராதி,இராமாயண வசனம் என்பனவாம். இவற்றுள் ஒன்றாவது நாளிதுவரை அச்சாகவில்லை. தற்போது கம்பராமாயணவசனம் எனவழங்கும் நூலையே கம்பர் எழுதியதாகச்சிலர் கருதி, கம்பர், இராமாயண வசனம் வரைந்தனர் எனக்கூறினர் போலும்.

கம்பர் இயற்றிய நூல்களைப்பற்றிக் கூறினோம். அவையன்றிப்பலவேறு சமயங்களில் கம்பர் பாடியபல தனிச்செய்யுள்களும் உண்டு. அவற்றுள் இடக்கரானவற்றை நீக்கிச்சிலவற்றைக் குறித்து இச்சரித்திரத்தில் ஆங்காங்கு உரைத்திருக்கின்றோம். அவைகள் நீங்க ஏனைய கவிகளில்சிலவற்றை இங்குத்தருவோம்.

'காவிரி எச்சிற்படப் பாடிய வெண்பா' என்னும் தலைப்பின்கீழ், 'மெய்கழுவி வந்து' என்னும் செய்யுளும் 'காவிரிப்பெருக்கடங்கப்பாடியவெண்பா' என்பதன் அடியில்

கன்னி யழிந்தனள் கங்கை திறம்பினள்
பொன்னி கரையழிந்து போனாளென்—றிந்நி
ருரைகிடக்க லாமோ வுலகுடைய தாயே
கரைகடக்க லாகாது காண்.

என்ற கவியும் தமிழ் நாவலர் சரிதையில் அமைந்துள்ளன.

இவற்றுள் முதற் செய்யுளில் அடங்கியதைச் சோழ மண்டல சதகத்தார்

விருந்துநுகர்வோர்கைகழுவ விளங்கும்புனற்காவிரியென்றோர்
தருந்தாயனையபுகழ்ப்புதுவைச்சடை யன்கொடையார்சாற்றவல்லார்
பருந்தார் எவர்க்கும் எப்போதும் பாலும் சோறும் பசிதீர
வருந்தா தளிக்க வல்லதன்றே வளஞ்சேர் சோழ மண்டலமே

என்று எடுத்தோதினர். அடியிற்காட்டப்படும்செய்யுள்கள் தனிப்பாடற்றிரட்டில் உள்ளன.

### சோழநாட்டெல்லை இதுவெனப்பாடியது.

கடல்கிழக்குத் தெற்குக் கரைபொரு வெள்ளாறு
குடதிசையிற் கோட்டைக் கரையாம்—வடதிசையில்
ஏணாட்டுப் பெண்ணை யிருபத்து நாற்காதம்
சோணாட்டுக் கெல்லையெனச் சொல்.

### பாண்டிய நாட்டெல்லை இதுவெனப்பாடியது.

வெள்ளா றதுவடக்கா மேற்குப் பெருவழியாம்
தெள்ளார் புனற்கன்னி தெற்காகும்—உள்ளார

பூண்ட கடல்கிழக்கா மைம்பத் தறுகாதம்
பாண்டிநாட் டெல்லைப் பதி.

சேரநாட்டெல்லை இதுவெனப்பாடியது.

வடக்குத் திசைபழனி வான்கீழ்தென் காசி
குடக்குத் திசைகோழிக் கோடாம்—கடற்கரையின்
ஓரமோ தெற்காகு முள்ளெண் பதின்காதம்
சேரநாட் டெல்லையெனச் செப்பு.

தொண்டைநாட் டெல்லை இதுவெனப் பாடியது.

மேற்குப் பவளமலை வேங்கட நேர்வடக்காம்
ஆர்க்கு முவரி யணிகிழக்கு—பார்க்குளுயர்
தெற்குப் பிணுகி திகழிருப தின்காதம்
நற்றொண்டை நாடெனவே நாட்டு.

கம்பர் காலத்திருந்த நான்கு நாடுகளின் விஸ்தீரணத்தை உணர்த்துவதால், இவற்றை நாம் இங்கெடுத்துரைத்தோம்.

'சீராமன் என்னும் வண்ணான் தமக்கு ஆடைவெளுத்துக் கொடுத்த நேர்த்தியை மெச்சிப்பாடியது' என்னும் தலைப்பின் கீழ்,

சிரம்பார்த்தா னீசன் அயன் தேவி தனைப்பார்த்தான்
கரம்பார்த்தான் செங்கமலக் கண்ணன்—உரஞ்சேர்
மலைவெளுத்த திண்புயத்து வண்ணான்சீ ராமன்
கலைவெளுத்த நேர்த்திதனைக் கண்டு.

என்ற வெண்பாவும்,

'தானும் தன் மனைவியும் பள்ளியறையிலிருக்கும்போது காற்றுக்கதவை மோத யாரோ கதவைத்தட்டுகிறார்களென்று

நினைத்துக் கதவைத் திறந்து பார்த்து யாருமில்லாதிருக்கை யால் கதவை மோதினது காற்றென்று தெளிந்து காற்றை முன்னிலையாக்கிப் பாடியது' என்பதன்கீழ்,

> கொற்கையான் மாறன் குலசே கரப்பெருமான்
> பொற்கையா னைகதை போதாதோ—நற்கமல
> மன்றலே வாரி மணிவா சலையசைக்கத்
> தென்றலே யேன்வந்தாய் செப்பு.

என்றவெண்பாவும் காணப்படுகின்றன. அச்சில் வாராத செய்யுள்களும் இத்தகையன பலவுண்டு. அவையிற்றை வெளியிடற்கு இது தக்க இடமன்றெனை இவ்வதிகாரத்தை இம்மட்டோடு நிறுத்தினோம்.



# 10. மரபும் மதமும்.

'அறிவார்யார் நல்லவன் பிறக்கும் குடி'
'நல்லோர்கள், எங்கே பிறந்தாலு மென்'

என்று கூறிய ஆன்றோர் வாக்கை நோக்கின், இப்புலவர் மரபு இன்னதென நாம் அறிய வேண்டுவதில்லை. ஆயினும் அவர் குலத்தைப்பற்றிப்பல அபிப்பிராயங்கள் உளவாகலின் அவற்றுள் எது சரியானதென நாம் ஆராய்வோம்.

கம்பர் செய்தனவாகக் கூறப் பெறும் இரண்டொரு வீரச் செயல்களையும், சிலை எழுபதுபாடியதையும், கம்ப நாடர்க்குக் கவிச் சக்கரவர்த்தி என்று பெயரிருப்பதையும் கருதி சிலர் அவரை அரசகுலத்தினர் என்பர். அது பொருந்தாது. எக்குலத்தினரும் சமயங்களில் கம்பரைக்காட்டிலும் பெரிய வீரச்செயல்களைச் செய்திருப்பதாலும் அரசர்க்குரிய மரபு, நாடு, அரச சின்னங்கள் முதலியன கம்பருக்கு இல்லாமையானும், சக்கரவர்த்தி என்றது அவர் கவிபாடும் திறத்தால் அடைந்த சிறப்புப் பெயர் ஆதலானும் அவர் அரசர் குலத்தினர் அல்லர் என்க. அவர் அரசர் இன்றேல் வேந்தர் அவருடன் பந்தி போஜனம் செய்வரோ என்று வினவுவோர்க்குக் 'கற்றவர்க்கு ஜாதியொன்றும் நன்மை தீமை இல்லை' என்பது பொதுமறையாதலின், அவ்வாறு செய்தனர் என்பது ஏற்ற சமாதானமாகு மென்று நினைக்கிறோம்.

கம்பரை உவச்சர் என்போர் "சீரணிச் சோழ நாட்டுத் திருவழுந்தூர்உவச்சன்" "கைம்மணிச்சீரன்றிச்சீரறியாக்கம்ப நாடன்" என்பனவற்றை ஆதார மாகக் காட்டுவர். உவச்சன் கம்பரை எடுத்து வளர்த்தான் என்று மட்டும் கேள்விப்படுத

லால், அவர் உவச்சகுலத்தினரன்று என்றும், முற்கூறிய மேற்கோள்கள் அவர் உவச்சன் வீட்டில் வளர்ந்ததையே குறிக்கும் என்றும் கொள்ள வேண்டியதிருக்கிறது.

இனிக் கம்பர் அந்தண குலத்திற்சேர்ந்தவர்என்பாரும் சிலர் உண்டு. அன்னார் தக்கநூற் பிரமாணங்களும் கர்ண பரம்பரை வழக்குகளும் அநுசரியாமல் அங்ஙனம் துணிந் தனர். இட்டமிலா (அல்லது முட்டிபுகும்) பார்ப்பார் அகத் தைப் பாராத(அல்லது பாடாத)கம்பர் அக்குலத்தவர்என்பது ஒப்பத்தக்கதா? அன்றியும்உவச்சர் இல்லத்திலும்,வேளாளர் மனையிலும் அவர் வளர்ந்தாரன்றோ? அவரும்அக்காலத்துள்ள மற்றோரும் அந்தணர் என்று அறிந்திருப்பின், அது கன்ன பரம்பரையில் நமக்கு எட்டியிருக்குமன்றோ? அதுஇல்லாத விடத்து, அவர் அந்தணர் எனத் துணிதற்குக் காரணமில்லை. தக்க ஆதாரங்களைக் காட்டாமல் அவரைப் பார்ப்பார் என்று சாதிப்போர், சாதி அபிமானம் பற்றிக்கூறியவர் ஆவர்.

பின்னர் கம்பரது குலமின்னதென அவர் இயற்றிய நூல்களை ஆதாரமாகக் கொண்டு நிச்சயித்தால், வேளாளரது சிறப்பினைக்கூறும் ஏரெழுபது, திருக்கை வழக்கம் என்னும் நூல்களைப்பாடியதாலும் 'காப்பார் உழவாளர் காண்'என்று கூறியிருப்பதாலும் வேளாளராகிய சடையப்பரை இராமாய ணத்திற் பலவிடங்களில் புகழ்ந்திருப்பதாலும், அவருடன் பந்திபோசனம் செய்ததாகச் சொல்லிக்கொள்ளப் படுதலா லும் அவரை வேளாளர் என்றே துணியவேண்டியதிருக் கிறது.

பெரும்புலவர் ஆதலால் சடையப்பர் முதலியோர் அவர் மாட்டு வேற்றுமை பாராட்டாமல் இருந்தார் என்றும், கூலிக்காக செம் பொற்சிலை எழுபது போலவே ஏரேழுபதும் பகர்ந்தனர் என்றும் கொள்ளலாம் ஆயினும், சடகோபர் அந்தாதியில், வேளாளகுலப் பெருமானுன நம்மாழ்வாரை,

விழுப்பாரினியெம்மையார் பிறவித்துயர் மெய்யுறவந்
தழுப்பாதொழிமினருவினைகாளும்மையப்புறத்தே
இழுப்பானொருவன்வந்தின்றுநின்றானினாருசங்கம்
கொழுப்பாய்மருதஞ்சுலாம்குருகூர்எம்குலக்கொழுந்தே

என்று மனமுருகி மொழிந்தபாடலில், 'குருகூர் எம் குலக் கொழுந்தே' என்று பொறித்ததால், அவர்வேளாளர் என்பதே உறுதிப்படுகிறது. கம்பநாடர் என்னும் அரியநூல் எழுதிய திருமணம் ஸ்ரீ செல்வகேசவராய முதலியார் அவர்களும் இம்முடிபையே மேற்கொண்டனர்.

நம் தமிழ்ப் புலவர்களின் சமயம் இன்னதென அவர் தாமும் கூறிப் போந்தனரில்லை. அவர் காலத்திருந்த பிறரும் அங்ஙனம் செய்யா தொழிந்தனர். ஆதலால் அவர்கள் சரித்திரங்களை எழுதப்புகுவோர், அவரியற்றிய நூல்களைக் கொண்டும், பிறவற்றைக் கொண்டுமே அவர் மதக் கோட்பாட்டை நிச்சயிக்க வேண்டியதாயிருக்கிறது. கம்பர் கைக்கொண்ட மதத்தைப்பற்றிப் பெரும் புலவர் பலர் ஒருவரோடொருவர் வாதிப்பதுண்டு. சிலர் அவரைச் சைவரே என்றும் வேறு சிலர் வைணவரே என்றும் தனித்தனி ஒரு தலையாகக் கூறுவர். அவரைச் சைவர் என்போர், கம்பர் என்ற பெயர் ஏகாம்பர் என்ற சொல்லின் திரிபென்றும் ஏரேழுபதிலும், சிலையெழுபதிலும், விநாயக வணக்கம் கூறியிருத்தலும், திருக்கை வழக்கத்தில்,

திங்களணி

எம்பிரான் எம்பெருமான் இந்திராதி யர்க்கரிய
தம்பிரா னுக்குறைத்த சந்தனக்கை.

அஞ்செழுத்தே ஒன்றாகி அப்பனெனத் தோன்றியான்
செஞ்சரணத் தேபூசை செய்யுங்கை.

என்பவற்றால் பரமசிவ னடியார்களைக் கூறியிருத்தலும், சிலையெழுபதில் துட்டநிக்கிரகச் சிறப்பைக் கூறும் செய்யுளில், "சிவநிந்தை செய்வோரையும்" என்று அமைத்திருத்தலும், இராமாயணப் பாயிரத்தில், வைஷ்ணவ சம்பிரதாயமான தெய்வ வணக்கம் கூறாதிருத்தலும் அவருடைய புதல்வர் பெயர் அம்பிகாபதி என்றிருத்தலும், எடுதலுக் கொண்ட நூலின் தன்மைக்கு ஏற்பத் திருமாலை சிறப்பித்துக் கூறினர் என்றலும், சிவபெருமானைக் கூறுமிடங்களிலெல்லாம் சிறப்பித்துக் கூறியிருத்தலும், பிறவும் காரணங்களைக் காட்டுவர். இனி இவரை வைணவரென்போர், திருமாலின் திரு அவதாரங்களில் ஒன்றாகிய இராமாவதாரத்தைக் கூறும் கதையைப் பாடியிருத்தலும், சடகோபர் அந்தாதியைச சாற்றியிருத்தலும், பக்தர் என்றபொருள் ஈயும் வைணவ சம்பிரதாயமொழியாகியஆழ்வார்என்ற பெயர் அவருக்கிருத்தலும், ஸ்ரீரங்கத்திலும், திருவழுந்தூரிலும் அமைந்த பெருமாள் கோயில்களிலேயே அவர் சிலையிருத்தலும் வைணவ சம்பிரதாயப்படி அவரைச் சமாதி செய்திருத்தலும் இவை போன்ற பிறவும் ஏதுக்களாக எடுத்துரைப்பர்.

இவர் சைவப்பற்றுடன் இராமாயணம் பாடினரோ என்றுபார்ப்போம். பாலகாண்டத்தில்,

ஊழ்கொண்ட சமயத் தன்றான் உருவுகண் டாரை ஒத்தார்
என்றும், ஆரண்யகாண்டத்தில் விராதன் வதைப்படலத்தில்,

பணிகின்ற பெரும்பிறவிக் கடல்கடக்கும் படிபற்றி
நனிநின்ற சமயத்தோர் எல்லாரும் நன்றென்னத்
தனிநின்ற தத்துவத்தின் தகைமூர்த்தி நீயாகில்
இனிநின்ற முதற்றேவர் என்கொண்டென் செய்வாரே.

பன்னலா மென்றுலகம் பலபலவு நினையுமால்
உன்னலால் பெருந்தெய்வம் உயர்ந்துளோர் ஒழுக்கன்றே
அன்னவூர் தியைமுதலா மந்தணர்மாட் டருந்தெய்வம்
நின்னல்லால் இல்லாமை நெறிநின்றார் நினையாரே.

மெய்யைத்தான் சிறிதுணர்ந்து நீவிதித்த மன்னுயிர்கள்
உய்யத்தா னாகாதோ உனக்கென்ன குறைஉண்டோ
வையத்தார் வானத்தார் மழுவாளிக் கன்றளித்த
ஐயத்தாற் சிறிதையம் தவிர்ந்தாரு முளரையா.

என்றும் கூறிய கம்பர் சைவரென்று கொள்வதெங்ஙனம்? அத்தகையர் எப்பெற்றியால் "ஆசை பற்றி அறையலுற்றேன்" என்றும், "அன்பேனும் நறவமாந்தி மூங்கையரன் பேசலுற்றான் என்ன யான் மொழியலுற்றேன்" என்றும், "பத்தர் சொன்னவும் பன்னப் பெறுபவோ" என்றும் இராமாயணப் பாயிரத்தில் கூறினர்?

காய்த லுவத்த லகற்றி ஒருபொருட்கண்
ஆய்தல் அறிவுடையார் கண்ணதே,

என்னும் மேலோர் வாக்கைத் துணையாகக்கொண்டு சமயப் பற்றின்றி நடுவு நிலைமையிலிருந்து இவ் விஷயத்தை ஆராய்ந் தால், முதலிற் சைவராயிருந்த கம்பர், விஷ்ணுபத்தி மேலிட்டு வைணவராஞரென்றே துணியவேண்டிய திருக்கிறது. ஏரெழுபதும், சிலையெழுபதும் இயற்றுகையில் விநாயகவணக்கம் கூறியகம்பர், இராமாயணம் பாடுகையில் அங்ஙனம் செய்யாத தன்மை நாம் முற்கூறிய முடிவையே வற்புறுத்துகிறது.

இராமாயணப் பாயிரத்துள்,

உலகம் யாவையும் தாமுள வாக்கலும்
நிலைபெ றுத்தலும் நீக்கலும் நீங்கலா
அலகி லாவிளை யாட்டுடை யாரவர்
தலைவர் அன்னவர்க் கேசரண் நாங்களே

எனவும், ஆரண்யகாண்ட ஆரம்பத்தில்,

வேதம்வேதியர் விரிஞ்சன் முதலோர் தெரிகிலா
ஆதி தேவர் எம தறிவினுக் கறிவரோ.

எனவும், கிஷ்கிந்தாகாண்டம் நாடவிட்ட படலத்தில்,

அரனதிக னுலகளந்த அரிஅதிகன் என்றுரைக்கும்
அறிவி லோர்க்குப்
பரகதிசென் றடைவரிய பரிசேபோல் புகலரிய
பண்பிற் றுமால்
சுரநதியின் அயலதுவான் தொடுகுடுமி சுடர்த்தொகைய
தொழுவோர்க் கெல்லாம்
வரனதிகம் தருந்தகைய வருந்ததியா னெடுமலையை
வணங்கி அப்பால்

எனவும், ஏரெழுபதில் 'திரிமூர்த்திகள்' என்னும் தலைப்பீட்டின் கீழ்,

> நிறைக்குரிய வந்தணர்க ணெறிபரவ மனுவிளங்கத்
> தறைக்குரிய காராளர் தமருவாம் பிணிதோங்க
> மறைக்குரிய பூமனையும் வண்டுளபத் தாமனையும்
> பிறைக்குரிய நெடுஞ்சலடிலப் பெம்மானை யுமபணிவாம்

எனவும் கூறிப்போந்தமையால் அவர் அரியையும், அரனையும் இரண்டு நயனங்களைப் போல ஒப்பநோக்கும் சமநோக்கமுடையவர் என்று கூறுவாரும் உளர்.



## II. கம்பரும் பிறபுலவரும்.

ஒரு சமயம் சோழனது சபையிலிருந்த வாணியனாகிய தாதன் என்னும் புலவன் ஒருவன் அவ்வரசன் மேற் கவி பாடிப் பரிசு பெற்று விருதாகிய எக்காளம் பிடித்துச் சிறப்போடு ஊர்தி இவர்ந்துவருதலைக் கண்ட கம்பர், தாதனுக்கு அத்தகைய மரியாதை செய்யலாகாதெனவெண்ணி அத் தாதனது குலத்தை இழித்து,

> கூளம் பிடித்தெள்ளின் கோதுவைப் பானங் குலக்கவிக்குக்
> காளம் பிடித்திடிற் சின்னம் படுமன்னர் காதலிமார்
> வேளம் பிடித்தகண் வெள்ளம் பிடிக்கவெம்பேய்க்கிளம்பேய்
> தாளம் பிடிக்கத் தனிவேல் பிடித்த சயதுங்கனே

என்று பாடினர். அத்தாதன் கம்பர்மேல் கோபங் கொண்டு "அரசனே நம்மீது இக்கம்பர் சொல்லியமும்மணிக் கோவை குற்றமுடைய சொல் அமைந்தது" என்று கூறியதோடு கம்பருடைய பூசாரித் தொழிலை இழித்தும்,

> கைம்மணிச் சீரன்றிச் சீரறியாக் கம்பநாடன்
> மும்மணிக் கோவை முதற்சீர்பிழை முள்ளெயிற்றுப்
> பைம்மணித் துத்திக் கனமணிப் பாந்தட் படம்பிதுங்கச்
> செம்மணிக் கண்பதம் பேர்க்குங்கொல்யானை செயதுங்கனே

என்று பாடினன். இதனைக்கம்பர் கேட்டுத் தாதன் தம்மீது பகைமை பூண்டனன் என்று நினைத்து,

> தாதரூவென்றாலும் தருவென்று சொன்னாலும்
> தாதாவென்றாலும் தருவாளோ தாராதான்
> தாதாவென்றாலும் தருவென்று சொன்னாலும்
> தாதாவென்றாலும் தருவனந் தாதனே

என்று பாடி அவனது கோபத்தைத் தணித்தார்.

கம்பர் சோழனோடு கோபித்துச் செல்லுகையில் வழியில் ஒரூரில் தங்கினர். அவ்வூரில் வசித்த சிலம்பி என்னும் தாசி ஒருத்தி கம்பர் தன்மேற் பாட்டுப்பாடின் தன் செல்வம் பெருகுமென்றெண்ணி அவரை நண்ணித் தன்னெண்ணத்தைச் சொன்னாள். கம்பர் தாம் பாடும் பாட்டிற்கு ஆயிரம்பொன் வேண்டுமெனக் கூறினர். அத்தாசி தானீட்டிய சொத்து முழுதையும் விற்றும் ஐந்நூறு பொன்னே சேர்ந்தது. அப்பொன்னை அவள் கம்பர் இடம் கொடுத்து வணங்க அவர்,

> தண்ணீரும் காவிரியே தார்வேந்தன் சோழனே
> மண்ணாவ துஞ்சோழ மண்டலமே

என்று பாடி அவள் வீட்டுச் சுவரில் எழுதிவிட்டுத்தமக்குக் கொடுக்கப்பட்ட ஐந்நூறு பொன்னும் இரண்டடிக்கே சரியென்று போய்விட்டார்.

சிறிது காலம் கழிந்தபிறகு, தற்செயலாய்ப் பசிதாகத்தால் அத்தாசி வீடடைந்த ஔவையார் 'என் பசிதீரக் கொஞ்சம் கூழ் கொடுப்பாயோ?' என்று கேட்டனர். அவள் தனக்கு வைத்திருந்த கூழை ஔவைக்கு ஊற்ற அவர் குடித்துக் களைதீர்ந்து தாசியின் செயலை மிகவும்பாராட்டினர். அப்புறம் அத்தாசியின் வீட்டுச் சுவரில் எழுதியிருந்த அரைப் பாட்டை ஔவையார் பார்த்தார். பார்த்ததும், அதன் விருத்தாந்தத்தைத் தாசிபால் வினவி அறிந்தார். உடனே,

—பெண்ணாவாள்

> *அம்பொற் சிலம்பி அரவிந்தத் தாளணியும்
> செம்பொற் சிலம்பே சிலம்பு

---

*'அம்பர்ச் சிலம்பி' என்றும் பாடம்.
'அரவிந்தமே மலராம்' என்றும் பாடம்.

என்று பாடிக் கம்பர் அரைகுறையாகப் பாடினதைப் பூர்த்திசெய்தார். அதனால்தாசி விரைவில் பணக்காரி ஆனாள். இக்கதை விநோதரசமஞ்சரியிற் கண்டது. இதனைப்புலவர் புராண முடையார்வேறுவிதமாகக் கூறுவர். அது யாதென அறிவோம்.

சோழநாட்டில் சிலம்பிஎன்ற ஒருபெண், எக்காரணத் தாலோ தனித்து ஒரூரிலவசித்தாள். அவ்வூரில் தன்பெயரை நிலைநிறுத்த வேண்டுமென்று துணிந்து அதற்கு என்ன செய்வது என்று விசாரித்தாள். தமிழ்ப் புலவர்களால் கவி பெறுபவர்களுடைய கீர்த்தி என்றும்அழியாதெனக் கேள்வி யுற்றுக் கம்பர் முன் சென்று தன்மேல்ஒருகவி பாடவேண்டு மென இசைத்தாள். தாம்விரும்பியபடி ஆயிரம் பொன் தந் தால் பாடத் தடையில்லையென்று கம்பர் சொன்னார். சிலம்பி தன் சொத்துக்களை யெல்லாம் திரட்டி விற்றும் ஐந்நூறு பொன்னே கிடைத்தது. அதைக் கம்பரிடம் கொடுக்க அவர் தாம் பெற்றதற்கேற்ப அரைப்பாட்டைப் பாடிக்கொடுத் தனர். அப்பாட்டில் தன் பெயர் வாராததால் மனம்புழுங்கிய சிலம்பி பொருள் விழைந்து கொட்டை நூற்றனள்.

அக்காலத்தில், தேசசஞ்சாரத் தொழிலைமேற்கொண்ட ஔவையார் சிலம்பியின் வீட்டிற்கு வந்து, சிறிது கஞ்சி கொடுக்குமாறு அவளை வேண்டினர். அவள்கொடுப்பதாய்க் கூறித் தான்கொட்டைநூற்க ஏற்பட்டவரலாற்றை, விளங்க உரைத்தாள். கம்பர் எழுதியபாட்டைப்பார்த்த ஔவையார் பொருளைநீகொடுத்தும், சோழனையும், அவனதுநாட்டையும், நதியையும்பாடினனே அன்றிஉன்பெயரைக்குறிப்பிடவில்லை. நான் பாடி, உன் கீர்த்தியைநிலைநாட்டுகிறேன் என்றாள். சில ம்பி, அப்பாட்டுக் கம்பருக்கு உவந்ததாமோ என்னலும்,

ஔவையார், 'கம்பன் என் பாடலை ஒப்புவன். அவன் ஒப்புக் கொண்டபிறகே உன் வீட்டைவிட்டு நான் போவேன்' என்னலும், சிலம்பி மனமகிழ்ந்தெழுந்து ஔவைக்குணவிட்டாள். உண்ட ஔவையார் கம்பர் விடுத்த வினையிரண்டடிகளையும் அவர்வரைந்த ஓர் ஓலையிலேயே எழுதிக் கொடுத்தனர். அதைப் பெற்றுக் கம்பரிடம் கடுகிச்சென்று 'இதுநீவிர் எழுதிய கவியின் பிற்பகுதி. இது நன்றாய் இருக்கிறதா?' என்று அவர் கையிற் கொடுத்துக் கேட்க, அவர் 'இப் பாட்டு மதுரமிக் குடையது. இதைப் பாடினவர் யார்?' எனச் சிலம்பி, 'வளைந்த முதுகினையுடைய வயது சென்ற ஒருகிழவி எழுதிக் கொடுததாள்' என்றாள். தமது பாட்டைப் பூர்த்தி செய்தவர் ஔவையார்என அறிந்தகம்பர், அவர்மீது அழுக்காறுகொண்டு சிலம்பியைப் பார்த்து, 'உனது அபீஷ்டம் இப்பாட்டால்நிறைவேறிற்று. இதனால் ஔவைக்கும் எனக்கும் பெரிய மனத்தாழ்வுஉண்டாயிற்று' என்றுகூறுதலும், சிலம்பி, "பொன்னடைந்தும் நீர் என்னைப்பாடவில்லை. எனது கூழையுண்ட கிழவி என் பெயரை அப்பாட்டில் மூன்றுமுறை உரைத்தாள்" என்று கம்பரைக் கடிந்துரைத்துச் சென்றாள். ஔவையின் வாக்குப் பொய்த்துப் போகாமல் அச்சிலம்பி பெரிய செல்வவதி ஆனாள் என்ப.

இங்குக் கூறிய சம்பவத்தால் கம்பருக்கும் ஔவைக்கும் உட்பகை உண்டாயிற்று. ஒருநாள் அவ்விருவரும் ஒரு பழனவழிப் படர்ந்தபோது, ஔவையை அவமானப்படுத்த எண்ணிய கம்பர் 'ஒரு காலில் நாலிலைப் பந்தலடி' என்றுகூறித் தாம் குறித்த தின்னதெனக் கூறுமாறு வேண்டியதுபோல் ஔவையாரை நோக்கினர். அவர்,

எட்டேகால் லக்ஷணமே எமனே றும்பரியே
மட்டில் பெரியம்மை வாகனமே—முட்டமேற்
கூரையில்லா வீடே குலராமன் தூதுவனே
யாரையடா சொன்னாய் அது.

என்று கூறிக், கம்பர் சுட்டியது ஆரைக்கீரை யென்று கூறியதோடு அவரை மிதமிஞ்சி வைதனர். இவ் விஷயமும் அடியில் வருவனவும் விநோதரசமஞ்சரியிற் கண்டனவாம்.

ஒருகால் கம்பர் சோழனுடைய சபையில் இராமாயணப்பிரசங்கம் செய்து கொண்டிருந்தனர். சோழன் அவருக்குச் சமானமான பெருங்கவி இல்லை என்று புகழ்ந்து பேசினன். அச்சபையில் வந்திருந்த ஔவையார் கம்பருக்கும் அத்தகைய எண்ணமுண்டாதலால் அவரைக் கொஞ்சம் தாழ்த்த வேண்டும் என்றெண்ணி, அடியில்வரும் பாடல்களைப் பாடினர்.

'கம்பரைப் போல் பாரகாவியம் பாடுகிறவரில்லை' என்றதற்கு,

வான்குருவி யின்கூடு வல்லரக்குத தொல்கறையான்
தேன்சிலம்பி யாவர்க்கும் செய்யரிதால்—யாம்பெரிதும்
வல்லோமே என்று வலிமைசொல வேண்டாம்காண்
எல்லோர்க்கும் ஒவ்வொன் றெளிது.

சித்திரமும் கைப்பழக்கம் செந்தமிழு நாப்பழக்கம்
வைத்ததொரு கல்வி மனப்பழக்கம்—நித்தம்
நடையு நடைப்பழக்கம் நட்பும் தயையும்
கொடையும் பிறவிக் குணம்.

என்பவற்றையும் 'கம்பரை யார் வெல்வார்' என்றதற்கு,

காணாமல் வேணவெல்லாம் கத்தலாம் கற்றோர்முன்
கோணாமல் வாய்திறக்கக் கூடாதே—நாணாமல்
பேச்சுப்பேச் சென்னும் பெரும்பூனை வந்தக்கால்
கீச்சுக்கீச் சென்னும் கிளி.

என்ற மறுமொழியும், 'கம்பர் பாட்டை வியந்ததற்கு'

விரகர் இருவர் புகழ்ந்திடவே வேண்டும்
விரனிறைய மோதிரங்கள் வேண்டும்—அரையதனில்
பஞ்சேனும் பட்டேனும் வேண்டும் அவர்கவிதை
நஞ்சேனும் வேம்பேனும் நன்று.

என்ற உத்தரமும் அறைந்தனர்.

அடியிற்காணும் விஷயம் புலவர் புராணமுடையார் கூற்றும். சோழனும் கம்பரும் வேட்டையாடக் காட்டிற்குச் சென்றிருந்தனர். அங்குச் சென்றிருந்த ஔவையார்,

கல்வி யுடையீர் கருங்கா னகத்திடையே
செல்வி யிலையுதிர்ந்து நிற்பதெவன்

என்று அவ்விருவரையும் கேட்கக், கம்பர்,

வல்லாய்கேள்

வெல்லா வழக்கை விலைவாங்கி வெல்விக்கும்
வல்லாளன் சுற்றம்போல் மாண்டு.

என்று கூறி அப்பாட்டைப் பூர்த்தி செய்தனர்.

ஔவையார் கம்பரைப் பார்த்துச் சிலம்பியின் நிமித்தம் உமது பாடலை முற்றுறச் செய்தேன் என என்னைக்கோபித்த நீர் கற்றோரைப் பொதுப்பட வினவியதற்கு இங்ஙனம்

உத்தரம் உரைத்தது நியதியோ என்று கேட்டார். மன்ன னும் மந்திரி முதலியோரும் ஔவையார் கேட்டதை அறிந்து மனமகிழ்ந்தார். கம்பர் வெட்கமுற்றுத் தமது குற்றத்தைப் பொறுக்குமாறு ஔவையாரை வேண்டிக்கொண்டார்.

கல்வியிற் பெரியோராகிய கம்பர தாதனை முற்கூறி யாங்கு இழித்துக் கூறியதற்குக் காரணமிதுவென விளங்க வில்லை. தாதனுக்கு மேம்பட்ட புலவர்க்குக் கொஞ்சப் பரிசி லும், அவனுக்கு அதிகப் பரிசிலும் அரசன் அளித்ததால் கம் பர் அங்ஙனம் உரைத்தனர் போலும். தாதன் வாணியகுலப் புலவன். இவனுக்குட்பட்ட கூவம் என்ற ஊர்வழிக் கம்பர் ஒரு சமயம் சென்றார். அவ்வூரார் அவ்வூரைப் பாட வேண்டு மென்று அபேக்ஷித்தனர். தாதனுக்குரிமைப்பட்ட அவ்வூ ரைப் பாடுவதில்லை என்று கம்பர் கூறினர். ஆயினும் அவர்கள் அவருடைய சிவிகையைத் தாங்கியும், அடைப்பை தூக்கியும் சென்றதால் புலவர் அவர்களுடைய விருப்பத்தைப் பூர்த்தி செய்தனர்.

இவ்விஷயத்துக்கு ஆதாரமானவை,

> பேணிய செந்தமிழ்த் தாதனுக் கேஅன்பு பெற்றமையான்
> நாணிய கம்பன் சிவிகையுந் தாங்கி நயந்ததமிழ்
> பூணிய நின்றதும் பொச்சாப்பி லாது புகுந்தபின்னும்
> வாணியன் தாதற்குத் தாதா னதுதொண்டை மண்டலமே.

> ஓங்கிய செந்தமிழ்த் தாதற் கடிமையில் வூரதனால்
> நாங்கவி சொல்வது மில்லையென் றேகம்ப நாடன் சொல்ல
> ஆங்கவ னேறும் சிவிகை சுமந்தும் அடைப்பையிட்டும்
> தாங்கவிகொண்டதும் கூவந்தி யாக சமுத்திரமே.

என்பனவாம். இவற்றால் கம்பர்க்கும் தாதனுக்கும் மன வருத்தம் இருந்ததென்பது உறுதிப்படுகிறது.

கம்பருக்கும் ஔவையாருக்கும் சம்பாஷணை நடந்ததாகச் சொல்லப்பட்டது. ஔவையார் என்ற பெயர் கொண்டு இருவர் அல்லது மூவர் இருந்திருக்க வேண்டுமெனக் கூறுவர் ஒரு சாரார். கி. பி. இரண்டாவது நூற்றாண்டில் அதாவது கடைச் சங்கத்தை ஒட்டிய காலத்தில் இருந்தவரும், சேரமான் பெருமாள் நாயனார் காலத்தில் இருந்தவரும், கம்பரொடு வாழ்ந்தவரும் ஒரே ஔவையார் என்று கொள்வதெங்ஙனமென அவர்கள் எண்ணுகிறார்கள். ஆயினும் செந்தமிழ்ப் பத்திராசிரியரும், ஸ்ரீமாந் கனகசபைப் பிள்ளை அவர்களும், அவ்வையார் என்ற நூலின் ஆசிரியராகிய ஸ்ரீமாந் அனவரதவிநாயகம் பிள்ளை அவர்களும், ஔவையார் ஒருவரே இருந்தனர் என்றும், அவர் முதலிற் கூறப்பெற்றவரே என்றும் துணிந்தனர்.

சிலம்பி விஷயமாய் ஏற்பட்டபாட்டில் முற்பாதியைப் பொய்யாமொழிப் புலவர் பாடினர் என்றும், பிற்பகுதியை ஔவையார் பாடினர் என்றும் தமிழ் நாவலர் சரிதை வெளியிடுகிறது. இந்நூல் ஔவையாருக்கும் கம்பருக்கும் சம்பாஷணை நடந்ததாகக்கூறவே இல்லை. இதுவே சரியெனத் தோன்றுகிறது. கம்பர் பாடிய பல செய்யுள்களுக்குச் சோழ மண்டல சதகத்தில் மேற்கோள் இருக்க, இம்முக்கிய விஷயத்திற்கு அதில் இல்லாமைக்குக் காரணம் கம்பர் அச்செய்யுளைப்பாடாமையே ஆம் எனத்தோன்றுகிறது. கம்பர், ஔவையாரை 'அடீ!' என்றதும், அவர், இவரை 'எட்டேகால் லட்சணமே' என்ற வசவுகளால் கூறினர் என்றதும், சிறிதும்

பொருந்ாதவைகள் ஆம். பள்ளிச் சிறுரும் கொள்ளக்கூசும் விடுகதையைப் பெரும்புலவர் கொண்டு ஒருவரை ஒருவர் தூஷித்தனர் என்பது அம்மம்ம! கற்றோர்க்கு நகைப்பை விளைக்காதிராது.

இனி 'வான்குருவியின் கூடு' என்றசெய்யுள், 'வல்லம்யாம்' என்று தற்புகழ்ந்தான் ஒருவனுக்குச் சொல்லப்பட்டதன்றிக் கம்பரை நோக்கிச் சொல்லப்பட்டதாகாது.' சித்திரமும் கைப் பழக்கம்' என்பது கம்பரை இழித்துக்கூறும் தகைமைத்து இல்லை. ஆனால் நட்பும்தயையும் இயற்கையாய் உடையவனைப் புகழ்வதற்கு ஏற்பட்டதாம் என்பது வெளிப்படை. 'காணா மல்'என்றசெய்யுளுக்கும் கம்பருக்கும் சம்பந்தம் சிருஷ்டிக்க விசுவாமித்திரரே வல்லவர். 'விரகரிருவர்' என்ற செய்யுள், ஒருவன் ஆடம்பரமாக வந்த கீழானபுலவன் கவியைக் கேட்டு இவள் (ஔவையார்) கவி கேளாதிருந்தான்; அப்போதுபாடிய வெண்பா என்ற முகவுரையின் கீழ்த்தமிழ்நாவலர் சரிதையில் அமைந்துளது. 'கல்வியுடையீர்' என்று தொடங்கும் பாடல் 'தூர்வியாச்யம் செய்வோன் சுற்றமழியும் என்றநீதிதோன்றப் பாடியது' என்பதன்கீழ்த் தனிப்பாடற்றிரட்டில் எழுதப்பட்டுள்ளது. கம்பருக்கு இச்செய்யுளில்சம்பந்த முண்டாக்கியது புலவர் புராணமே ஆம். எனவே முற்கூறியஐந்துபாடல்களுக்கும் கம்பருக்கும் எவ்விதசம்பந்தமுமில்லாதிருக்க, ஔவையாரை உயர்த்தியும் கம்பரைத்தாழ்த்தியும் கூறவிரும்பிச் சிலர் முன்மொழிந்த கதைகளைக் கட்டிவிட்டார்கள்.

இந்நூலிற் கூறப்பெற்றவற்றால், கம்பரொடு இருந்த புலவர்கள் தாதன், ஒட்டக்கூத்தர், அவருடன் இருந்த புகழேந்திப் புலவர், கம்பர் புதல்வனாகிய அம்பிகாபதி என்பவர்களே ஆவர். அம்பிகாபதியின் விஷயம் அடுத்த அதிகாரத்தில் கூறப்படும்.

---

# 12. அம்பிகாபதியும், கம்பர்முடிவும்.

கம்பருடைய புதல்வனும் கம்பராமாயணத்துக்குச் சிறப்புப்பாயிரம் ஈந்தவனுமாகிய அம்பிகாபதி சோழனுடைய மகள்பால் அன்புபூண்டொழுகியதாகக் கூறும் புலவர் புராணத்தின் வரலாற்றைச் சுருக்கி இங்குக்கூறுவோம்.

தன் மகட்கும் அம்பிகாபதிக்கும் நட்புண்டோ எனச் சோழன் சந்தேகித்தான் அது உண்மையாயின் தன் குலத்துக்கு ஈனமுண்டென எண்ணி அச்சந்தேகத்தை நீக்க நிச்சயித்துத் தானும் கம்பனும் அம்பிகாபதி முதலோரும் உண்ண உட்கார்ந்து தன் மகளைக் கொண்டு யாவர்க்கும் உணவு அளிக்கச் சொன்னான். அவள் கறிவகைகள் அமைத்த வட்டிலைச்சுமந்து வந்தாள். அம்பிகாபதி அவளைப் புகழ வெண்ணி, அடியிற் கூறும் வெண்பாவின் முன்னிரண்டடிகளைப் பாடக் கேட்ட கம்பர், தம்மகனுக்கு ஆபத்து வருமெனவெண்ணி அவனுக்குக் கிருபைகூருமாறு கலைமகளைத் தியானிக்க, அவள் ஒரு கிழவி வேடங்கொண்டு கொட்டிக் கிழங்கு விற்பவளாய்த் தெருவில் வரக்கண்ட அம்பிகாபதி பின்னிரண்டடிகளையும் அவள் விஷயமாகப் பாடினான். அச்செய்யுள்,

> இட்டவடி நோவ எடுத்தவடி கொப்புளிக்க
> வட்டில் சுமந்து மருங்கசையக்—கொட்டிக்
> கிழங்கோ கிழங்கென்று கூறுவாள் நாவில்
> வழங்கோசை வையம் பெறும்.

என்பதாம்.

அங்கு உண்டவர்கள் அக் கிழவி எங்கு என்று வினவுதலும், அவன் அரமனையின் தலைவாயிலில் உள்ள யானையின்

பக்கத்திலவளிருக்கிருள் என்றலும், யாவரும்சென்று அவள் அங்கிருக்கக் கண்டனர். பிறகு இத்தகைய இரண்டொரு பரீக்ஷைகள் சோழன் செய்தான். அவற்றால் அவனுடைய சந்தேகம் உறுதிப்பட்ட தன்றிக் குறைவுபட்டிலது. பிறகு அரசன் தன்குலகுருவாகிய ஒட்டக்கூத்தரை அழைப்பித்து,

> கண்டீரோ காண்அம்பி காபதிசெ யும்பிழையைக்
> கண்டீரோ நம்மீதிற் களங்கமில்லை—உண்டோநான்
> ஆற்றாது கோபம் அடங்கி இவனை ஒட்டக்
> கூத்தாவென் செய்திடலாங் கூறு.

என்னலும், ஒட்டக் கூத்தர்,

> பனிப்பலையும் திங்களுமே பார்த்த செயலாலுல்
> உனக்கியான் சொல்லுவதொன் றுண்டோ—கனத்த
> பிழைசெய்தான் அன்னைக்குப் பின்பார்க்க வேண்டாம்
> கழுவினிலே ஏற்றிவிடல் காண்.

என்றனர். இங்கு குறித்தது தனிப்பாடற்றிரட்டிற் கண்டது.

கடைசியில்'தருமம் தலைகாக்கும்' என்று நினைத்து அம்பிகாபதியை அழைத்து "இவ்வாண்மனையின் பேரெயிலைத் தாண்டுமுன், கடவுள் விஷயமாய் நூறு பாடல்கள் பாட வேண்டும். அவற்றுள் காதல் விஷயமாக ஒரு பாடல் இருப்பினும் நம்மைக் கழுவிலேற்றுவோம். சரியாய்க் கூறி விட்டால் எமது மகளை உமக்கு மணம் செய்விப்போம்" என்றான். அம்பிகாபதி 99-வது செய்யுளை முடித்து எயிலைச் சமீபிக்கும் காலத்து அரசிளங்குமரி அவனை எட்டிப் பார்க்க, அவனும் திரும்பிப் பார்த்து அவளைப் புகழ்ந்தொரு செய்யுள் பாடினன். உடனே அரசன் தான்முன் சொன்னபடி அம்பிகாபதியைக் கழுவிலேற்றக் கட்டளையிட்டனன்.

தமது புத்திரன் ஏற்ற சிரச்சேத தண்டனையைக் கேள்விப்பட்ட கம்பர்,

இந்நா ளிதுவிளையும் என்றெழுத்துத் தானிருக்க
என்னாலே யாவதொன்று மில்லையே—உன்னாலே
வந்ததுதான் அப்பா மகனே தவிர்ப்பார்யார்
முந்தையினீ செய்தவினை யே.

என்றலும், அதற்கு உத்தரமாக அம்பிகாபதி,

இந்நா ளிதுவிளையும் என்றெழுத்துத் தானிருக்க
என்னாலே யாவதொன்று மில்லையே—என்னாலே
வந்ததுகா ணையா வரும்விதியை யார்தடுப்பார்
எந்தைமக தேவன் செயல்

என்றான். ராஜ ஆக்கினைப்படி அம்பிகாபதி உயிர்துறந்ததைக் கம்பர் அறிந்து,

பட்டுப்பட் டாயினுநீ தேறவா யென்றெதிர்பார்த்திருந்தேன்
வெட்டுப்பட் டாய்மக னேதலை நாளின் விதிப்படியே

என வருந்தி,

பரப்போத ஞால மொருதம்பி யாளப் பனிமதியம்
துரப்போ னொருதம்பி பின்வரத் தானும்தன் துணைவியுடன்
வரப்போன மைந்தர்க்குத் தாதை பொறுதுயிர் மாய்ந்தனன்நெஞ்
சுரப்போ எனக்கிங் கினியா வருமை உரைப்பதற்கே

என்றுகூறித் துக்க சாகரத்துள் ஆழ்ந்தனர். இங்குக் கூறிய நான்கு செய்யுள்களின் விஷயம் தனிப்பாடலில் அமைந்தது. அம்பிகாபதி இறந்தபிறகும் அவனைமறவாத

அரசகுமாரியைச் சோழன் தவளா நீற்றறையில் தள்ளி நீற்றினன்.

இஃதிங்ஙனமாக, ஒருநாள் யானைக்குப் பயந்து, தன்பால் வரும் சோழன் மகனைத்தமது கையிலிருந்தஎழுத்தாணியால் கவியானைச் செயலிதுவெனக் கம்பர் குத்திக்கொன்றார். தன் மகனைக் கம்பர் கொன்றது உணர்ந்த சோழன், வாளாயுதத்தோடு அவரைக்கொல்ல ஓடினன். உடனே கம்பர், 'நெடியமாயனைநின்னடிக்குஞன் றுயபுவிநடந்தோடற்கிடங் கொடுக்கை நிகழ்த்துக' என்று கூறுதலும், அதன் செம் பொருளைக் கண்ட வளவன் 'இன்னமும் சில பிள்ளைகள் இருந்தால் கொடுத்து உமது கவிபெறுவேன்,' என்று கூறிக் கோபம் தணிந்து சென்றான். கம்பர் வீடுசென்று தமது செயற்குக் கழிவிரக்கங் கொண்டது மன்றி அம்பிகாபதியை எண்ணியும் அலமந்தார். அமபிகாபதியின் தாயும் தன் மகற்காக வருந்தினாள். அரசனும் அரசியும் தம்மிரு மக்களையும் இழந்து வருந்தியதை உணர்ந்து சொல்லயாரால் ஆகும்!

கம்பரைக் கொல்லாது முன்விடுத்த சோழன் தன் இயற்கைக் குணத்தால் அவரைக் கொல்லுதலே நேரியதென உறுதி கொண்டு, தன் மரபின் கொடியாம், பசியாலுழலும் ஒரு புலியைப் பெட்டிக்குள் வைத்து ஓரறையில் பத்திரப் படுத்தி வைக்கச்சொன்னான். பட்டினியாயிருந்த கம்பரை அப் பெட்டியிலிருக்கும் பொருளை வெளிப்படுத்தக் கட்டளை யிட்டான்: கம்பர் பெட்டியைத் திறத்தலும் அதனுள்ளிருந்த புலிதிடீரென வெளிப்பட்டுப் புலவரைப்புசிக்க எத்தனித்தலும், அவர்,

வெங்கண் சிவந்து வெடிவால் முறுக்கி வெகுண்டெழுந்தென்
அங்கம் பதைக்க வருபுலி யேஅன் றிரணியனைப்
பங்கம் படப்பட வாளுகி ரால்உரம் பற்றிஉண்ட
சிங்க மிருப்பது காண்கெடு வாய்என்றன் சிந்தையுள்ளே

என்றொரு கவிபாடித் தம்மனத்தில் நரசிங்க மூர்த்தியைத் தியானித்து ஓரெழுத்தாணியை அப்புலியின்மேல் எறிய, அது கம்பர் கூறியவாறே உயிர்துறந்தது. அங்கிருந்த அரசன் முதலோர் ஆச்சரியப்பட்டுக் கம்பரடியில் வீழ்ந்தார்.

பிறகு அரசன் தன் முயற்சியைத் தளர விடாது தனக்கு அந்தரங்கமான ஒருசிற்பியை யழைத்து, திறந்தாரின் உயிரை உடன் கவரும்படியான வில்லும் அம்பும் வைக்கப்பெற்ற ஒரு பெட்டியைச் செய்துதரச்சொன்னான். அப்படித்திறக்குமாறு அரசன் கம்பரைவேண்ட, அவர் அங்ஙனமே திறத்தலும், அவ்வம்பு புலவருடைய உயிரைக்கவரவந்தது. இதனை அறிந்து, கம்பர்,

வில்லம்பு சொல்லம்பு மேதினியி லம்பிரண்டாம்
வில்லம்பிற் சொல்லம்பே வெய்யதாம்—வில்லம்பு
பட்டதடா என்மார்பில் பார்த்திபா நின்குலத்தைச்
சுட்டதடா என்வாயிற் சொல்

என்று கூறிச் சபித்தனர்.

கம்பனை மாளச்செய்தவன் ராஜராஜ சோழனே என்று முன்னுரைத்தோம். இவ்விஷயம உண்மை என்றே கொள்ள வேண்டியதிருக்கிறது. தமிழ்நாவலர் சரிதையில் 'கம்பனைக் கொன்றானென்று பழிகூறப், பாண்டியனிடத்திற் சோழன் விட்ட புலவன் முடிசூட்டுமங்கலநாட்பாடியவசை' என்ற தலைப்பின் கீழ்,

பாண்டியரிற் பாண்டியரிற் பாழான பாண்டியரில்
ஈண்டிரென விட்ட எழுத்தல்ல—பூண்டதிருப்
போகவென்றும் வேற்றூர் புகுதவென்றும் நீஇவண்விட்
டேகவென்றும் விட்ட எழுத்து

என்னும் வெண்பா எழுதப்பட்டுள்ளது. இச்செய்யுளின் அடிக் குறிப்பாக 'இதுகேட்டு நன்றாகவே பொருள்கூறியும், பரிசில் கொடுக்க மறுத்தான்; நீவந்தகாரியம் வேண்டில் சோழன் பாற் போவென்றான்' என்பது காணப்படுகிறது. இதனாற் கம்பரைச் சோழன் கொன்றவிஷயம் நாடெங்கும் பரவி, பாண்டிய னுக்கும் எட்டிற்று என்றும், அவன்சோழனை அதற்காகப் பழிகூறினன் என்றும் தெரியவருகிறது.

கம்பருடைய வாய்ச்சாபத்தாலேயே ராஜராஜனொடு சோழகுலம் முடிந்ததென்றும், அவனுக்குப் பின் வந்த சில சோழர், பேர் மாத்திரையில் அரசராயிருந்து பிடிழந்து ஒழிந்தனர் என்றும் சரித்திரம் உணர்வோர் அறிவர். மேன் மக்களை வெகுளி மூட்டி அவர் சாப மேற்று அழிந்தவர்கள் மேதினியில் எத்தனைபேர்? இதனாலன்றோ தெய்வப் புலவர்,

வில்லேர் உழவர்பகை கொள்ளினும் கொள்ளற்க
சொல்லேர் உழவர் பகை

என்று மொழிந்தனர்? தமிழ் நாடுகள் மூன்றிலும் மிகுந்த பெருமை வாய்ந்த வளவநாடு இப் புலவர் சாபத்தால் அழிய வேண்டிய திருந்தது போலும். உயிர் நீங்கும் சமயத்திற் கம்பர் தம்மை ஆதரித்த சடையப்பர் செய்த நன்றியை மறவாதவராய்,

ஆன்பாலும் தேனும் அரம்பைமுதல் முக்கனியும்
தேன்பாய உண்டு தெவிட்டுமனம்—தீம்பாய்
மறக்குமோ வெண்ணெய் வருசடையா கம்பன்
இறக்கும்போ தல்லால் இனி.

என்றொரு பாடலைப் பகர்ந்தனர். இவ்விஷயம்,

ஆன்பா லறுந்தேன் முக்கனிநீ டமுதின் சுவையா னுடனருந்தித்
தான்பா லணைய மறப்பதிலைச் சடையா என்று தமிழோதும்
தேன்பா யலங்கற் கம்பனுக்குச் செழும்பா ரிடத்திற் செய்தான்றி
வான்பா லிருக்கச் செய்துாலம் வைத்தார் சோழ மண்டலமே

என்ற சதகச் செய்யுளால் வெளியாகின்றது.

கம்பருடைய சமாதி பாண்டிய நாட்டில் சிவகங்கைக்கு அடுத்த நாட்டரசன்கோட்டையில் இன்று மிருப்பதைக் காணலாம். பிள்ளைகளைப் படிக்கவைக்கும் பெற்றோர், முதலில் அச் சமாதியைத், தம்மக்கள் சுற்றிவரும்படி செய்கிறார்கள். பிள்ளைகள் பிறநதவுடன் சேனைவைக்கும்பொழுது கம்பர் சமாதி மண்ணையும் அதனோடு கலந்துவைக்கும் வழக்கு இன்றுமுண்டு. அப்படிச் செய்வதால் தம்மக்களும் கம்பரைப்போல் கல்வியிற் பெரியவராய் இருக்க வேண்டுமென்பது பெற்றோர் கருத்து.

இதுநிற்க, கம்பர் காலகதி அடைந்ததைக் கேள்வியுற்ற சோழனது சபைப் புலவர்கள்,

இன்றோநம் கம்பன் இறந்தநாள் இப்புவியில்
இன்றோநம் புன்கவிகட் கேற்றநாள்—இன்றேதான்
பூமடந்தை வாழப் புவிமடந்தை வீற்றிருப்ப
நாமடந்தை* நாவிழந்த நாள்,

*'நூலிழந்த' என்றும் பாடம்.

என்னும் கையறுநிலைக் கவியைப்பாடினர். இதனால் இப்புலவர் பெருமையும் இவருடைய ஆற்றலின்முன் ஏனைப் புலவர் வல்லமை சோபிக்காத் தன்மையும் நன்கு விளங்குகிற தன்றோ?

கம்பருடைய புதல்வனாகிய அம்பிகாபதிக்குத் தண்டி என்னும் பெயரையுடைய ஒரு புதல்வன் இருந்தான் என்றும், அவன் வடமொழியிலுள்ள தணடி அலங்காரம் என்னும் நூலை மொழிபெயர்த்தான் என்றும் கேள்வி உண்டு. காலஞ்சென்ற ஸ்ரீஸ்ரீநிவாசாசாரியார்தாம்வெளியிட்டதண்டி அலங்காரப் பழைய பதிப்பில் கண்டதை நமது விஷயத்துக்கு ஆதாரமாக இங்கு எழுதலானோம். அது வருமாறு:

வடதிசை இருந்து தென்மலைக் கேகி
மதிதவழ் குடுமிப் பொதிய மால்வரை
இருந்தவன் தன்பால் அருந்தமிழ் உணர்ந்த
பன்னிரு புலவரின் முன்னவன் பகர்ந்த
தொல்காப் பியநெறிப் பல்காப்பி யத்தும்
அணிபெறு மிலக்கணம் அரிதினிற் றெரிந்து
வடநூல் வழிமுறை மரபினின் வழாஅது
ஈரிரண் டெல்லையின் இகவா மும்மைப்
பாகத இலக்கணம் பண்புறத் தழீஇத்
திருந்திய மணிமுடிச் செம்பியன் அவையத்து
அரும்பொருள் யாப்பின் வகுத்தனன்
*ஆடக மன்றத்து நாடக நவிற்றும்
வடநூ லுணர்ந்த தமிழ்நூற் புலவன்
பூவிரி தண்பொழிற் காவிரி நாட்டு
வம்பவிழ் தெரியல் அம்பிகாபதி
மேவரும் தவத்தினிற் பயந்த
தாவரும் கீர்த்தித் தண்டி என் பவனே.

---

* 'நாடக' என்றும் பாடம்.

இச் செய்யுள் தமிழ்த் தண்டி அலங்காரத்தின் சிறப்புப் பாயிரமாம். வடமொழித் தண்டி ஆசிரியர் செய்த நூலைத் தமிழில் பெயர்த்து எழுதியதனாலும், அங்ஙனம் செய்தவர் பெயரும் தண்டி ஆதலாலும், இத் தமிழ் நூற்குத் தண்டி என்ற பெயர் வந்ததுஎன்று சிலர் கூறுப. இத்தண்டி கம்பருடைய பேரனாகவும்,வடமொழியில் வல்லவனாகவு மிருந்திருந்தால், கம்பர் குடும்பம் கல்வியில் மிக்கபுகழுடையதே.

முற் கூறிய சிறப்புப் பாயிரத்தில் தண்டியை அம்பிகாபதியின் புதல்வன் என்று கூறியிருப்பினும்,அவ்வம்பிகாபதி கம்பருடைய புதல்வன் என்பதற்கு அதில் ஆதாரமில்லை. ஆயினும், அம்பிகாபதி என்ற் பெயருடன் வேறொருவன் இருந்ததாகத் தெரியாததாலும், இப் பாயிரத்தின் போக்காலும் தண்டி என்பவன் அம்பிகாபதியின் புதல்வனாயிருக்கலா மென்று ஒருவாறு தோன்றுகிறது.

சோழன் கட்டளைப்படி அம்பிகாபதி, பாடிய கோவை 100 பாடல்களைக் கொண்டதெனக் கூறினோம். கர்ண பரம்பரையில் அங்ஙனமே வெளியாகிறது. ஆனால் அம்பிகாபதி கோவை எனவழங்கும் நூலொன்று 500 பாடல்களின்மேம்பட்ட அளவோடு வெளிவந்துளது. அம்பிகாபதி ஒரு கோவையே பாடவில்லை என்னும் அபிப்பிராயம் பலர் கொண்டுள்ளார். சோழன் மகளைக் கம்பர் குத்திக் கொன்றார் என்கிற விஷயம், புலவர் புராணத்திற்றான் காணப்படுகிறது. போதிய ஆதாரமின்றி அது நம்பும் திறத்ததன்று எனச் சிலர் அபிப்பிராயப்படுகிறார்கள். அம்பிகாபதிக்காகக் கலைமகள் கொட்டிக் கிழங்குடன் வந்ததாகக் கூறும் கதையை, அவள் கம்பருக்குச் சிலம்பு கொடுத்த கதையோடு சேர்க்கவேண்டியதே ஆம்.

## 13. முடிவுரை.

கம்பர் சரித்திரத்தை இது காறும் கூறிவந்த நாம், கம்பரைப் பற்றிய கதைகளையும் அவற்றின் உண்மையையும் ஒருவாறு ஆராய்ந்தோம். அவர் நாளொன்றுக்கு எழுநூறு பாடல்கள் பாடியதும் பிறவும் செய்தற்கு அசாத்தியம் என்று கண்டோம். ஆயினும் அத்தகைய கதைகள் உண்டானமைக்கு, 'கம்பர் எத்தகைய காரியங்களையும் சாதிக்கும் ஆற்றல் படைத்தவர்' என்று பலர் நம்பியதே காரணமாகும். நமது நாட்டில் இன்னார்கூறியது என்று தெரியாத மொழிகள் பல, ஔவையார் அல்லது கம்பர் பெயரால் வழங்கப்படுகின்றன. அதனால் ஜனங்கள் இக்கற்றோர் வாக்குக்கு எவ்வளவு கௌரவம் வைத்திருக்கிறார்கள் என்பது விளங்கும்.

கம்பர் உற்ற பெருமைக்குப் பல காரணங்கள் உண்டு: சோழன் அவரைக் கோபித்தபோது, அவர் சொல்லிய, 'மன்னவனும் நீயோ,' 'காத மிருபத்து நான்கோழிய,' என்ற இரண்டு செய்யுள்களும் பேரரசருக்கும் அஞ்சாத அவர் நெஞ்சுறுதியை வெளியிடுமன்றோ? தாம் பிழையா இடத்து, ஒரு புவியரசனைச் சிறிதும் லட்சியம் பண்ணாத இக் கவியரசரது துணிவுதான் என்னே!

மன்னனிற் சிறந்த இம் மாசறக் கற்றோர், வளவனையும் மதியாமைக்கு அவருடைய கல்விச் செருக்கு காரணம் ஆகாது. அவரது கல்வி ஆற்றலையும், உயர் குடிப்பிறப்பையும் கருதிச் சோழன் அவரைத் தண்டியாமல் இருந்தான் என்று துணியமுடியாது. அவரது களங்கம் இல் உளமும், உயர் குணங்களும், அறநெறியும், பிறவும் அவர்பால் அரசற்கும், எவர்க்கும் நன் மதிப்பையும், அச்சத்தையும் உண்டாக்கின என்று

கொள்ளல் இழுக்காது. அவர் செய்ந் நன்றி மறவாச் சீரியர் என்று முன்னரே மொழிந்தோம். சாந் தருணத்தும் 'ஆன்பா லும் தேனும்' என்று கூறியதால், உப்பிட்டவரை உள்ளளவும் மறவாத அவரது மேன்மைக்குணம் இனிது விளங்கும்.

சிதைவகல்காதற்றாயைத்தந்தையைக்குருவைத் தெய்வப்
பதவிஅந் தணரை ஆவைப் பாலரைப் பாவை மாரை
வதைபுரி குநர்க்கும் உண்டா மாற்றலா மாற்றன் மாயா
உதவிகொன்றார்க்கென்றேனும்ஒழிக்கலாமுபாயம்உண்டோ

என்று அவர் கூறிய இச்செய்யுளைத் தவிர வேறு இதற்கு என்ன ஆதாரம் வேண்டும்?

பிறரிடத்தில் உள்ள தொழிலையும் மேன்மைக் குணங் களையும் நாடுதலில் கம்பர் பின்னடைந்ததில்லை. ஏரெழுபதும், திருக்கை வழக்கமும், செம்போற் சிலையெழுபதும் இதனை விளக்குவன வன்றோ? கம்பர் இங்ஙனம் பிறரிடத்துள்ள நற் குணங்களை நாடியதால், பிறரும் இவரைப் பாராட்டினர் என்ப துறுதியாம்.

'முத்த மிழ்த்துறை யின்முறை போகிய
உத்த மக்கவி கட்கொரன் றுணர்த்துவேன்'
'தமிழெனும் அளப்பரும் சலதி தந்தவன்'
'எத்தி றத்தினும் ஏழுலகும் புகழ்முத்தமிழ்'

என்பனவும், இவை போன்ற பிறவும் தமிழிடத்து இவர்க்குள்ள மதிப்பை வெளியிடுவன அன்றோ?

ஒரு பாஷையிலுள்ள கவிகளையும் நூல்களையும் அத்தகைய பிறபாஷைகளிலுள்ளவற்றோடு ஒப்பிடுதல்

எளிதன்று. ஆயினும் அவ்விரண்டையும் கற்றோர்க்கு இது அசாத்தியமன்று. வால்மீகத்தை முதனூலாகக்கொண்டு இராமாயணம் இயற்றிய கம்பர் பல பெரும் பாகங்களைப் புதிதாய்ச் சிருஷ்டித்தார். பாலகாண்டமும், அயோத்தியா காண்டமும், முனிவர் வாக்கிலும் முறையே கம்பீரமாயும், உருக்கமாயும உள்ளனவென்று வடமொழியும் தென் மொழியும் ஒருங்கே கற்றுணர்ந்தவர்கள் சொல்லக் கேள்விப் பட்டிருக்கிறோம். மேனாடுகளில்,காலாந்தரங்களில்தோன்றிய ஹோமர், ஷேக்ஸ்பியர் மில்டன் முதலியோர், அணிநயங் களை அமைக்கும் திறனில, இப் புலவரினும் வல்லுநரென்று நாம் அறிந்ததுமில்லை; அறிந்தவர்கள் சொல்லக் கேள்விப் பட்டதுமில்லை. கமபர் நூலிற் கண்ட பல அலங்காரங்களை அனுபவித்தறியாதசிலர், பிறபாஷா நூல்களில் அபூர்வமாகக் காண்பனவற்றை மெச்சிக் கூறுவர். புறக்கடைப் பச்சிலையை அவமதிப்பதைவிட்டு இவர் கம்பர் நூலைத் திருப்பிப் பார்த் தால் எவ்வளவு சந்தோஷம் அடையக்கூடும் என்பதை நாம் கூறிய வேண்டியதின்று.

'அறம்பொருள் இன்பம்வீ டடைதல் நூற்பயனே' என்று கூறிய ஆன்றோர் மொழியைக் கம்பர் உறுதியாய்க் கடைப் பிடித்தவர் ஆவர். இராமபிரானுடைய திவ்விய தேஜ ஸையும், அநந்த கல்யாண குணங்களையும், நெறி முறைகளை யும் கூறும் பாகங்களில் ஈடுபட்டு, பக்தி சாகரத்தில்மூழ்காத வர் எவர் உளர்! சமயத்துக் கேற்ற சந்தமும், சொற்பிரயோ கங்களும், ஆழ்ந்த கருத்துக்களும், இராமாயணம் கொண்டுள்ளமையாலன்றோ, பெரியோர்,

இம்பர்நாட்டிற் செல்வமெல்லாம் எய்திஅரசாண் டிருந்தாலும்
உம்பர்நாட்டிற் கற்பகக்கா ஓங்குநீழல் இருந்தாலும் (கதையில்
செம்பொன் மேரு வனையபுயத் திறல்சேர் இராமன் திருக்
கம்பநாடன் கவிதையிற்போற் கற்றோர்க் கிதையம் களியாதே

என்று அதனைப் பாராட்டினர்?.

சிலர் தாம்பாடத் தேர்ந்தெடுத்தவிஷயத்தின்பிரதானத் தாலும், வேறு சிலர் தம்கவித்திறத்தாலும் சிறப்படைந்த துண்டு. இவ்விரண்டாலும் சிறப்புற்றார் கம்பர். அவர் இயற்ற எடுத்துக் கொண்ட நூலோ, கருணையங் கடலாகிய திருமால் தசாவதாரங்களில் ஒன்றைக் கூறும் இராமாயணம். அவரது கவித்திறமோ அபாரமானது.

ஆன்றோர் கவியிலக்கணத்தைக் கம்பர்,

பவியினுக் கணியாய ஆறை பொருடந்து புலத்திற் றூகி
அவியகத் துறைகள் தாங்கி ஐந்திணை நெறிய ளாவிச்
சவியுறத் தெளிந்து தண்ணென் றொழுக்கமும் தழுவிச் சான்றோர்
கவியெனக் கிடந்த கோதா விரியினை வீரர் கண்டார்.

என்ற செய்யுளில் அழகாகக் கூறியிருக்கின்றனர். சான்றோர் கவிகதி அவர் எங்ஙனம் இருக்கவேண்டுமெனக் கூறினரோ, அங்ஙனமே அதனை அவரது நூலில் நாம் எங்கும் காணலாம். கம்பரைப் பின்பற்றியே பிற்காலத்தார், பல நூல்களை யாத்தனர் எனினும், அவருடைய வாக்குவளம் எவர்க்கும் வாய்ந்திலது. அதனாலேயே அவர்க்குப் பின்னும் அவரது புகழ் மங்காத தாயிற்று.

இராமாயணத்தைப் படிப்போர் தம்வய மழிந்து அந் நூல் வழிச் சாருவர்: சந்தோஷமான இடங்களில் ஆனந்தக் கடலுள் மூழ்குவர்; துக்கமான சந்தர்ப்பங்களில் துயர்த் தாழ்ந்து கண்ணீர் தாரைதாரையாய் விடுவர். இதற்குக் காரணம் இவருடைய கவித்திறனன்றோ? கம்பர் பெருமை இவ்வளவேயோ? கம்ப ராமாயணத்தில் ஒரு காண்டத்தை யேனும் முறையே கற்றுணர்ந்தோர், அவர்க்கு அடிமை களே ஆவர் என்பது திண்ணம். கவிச் சக்கரவர்த்தி என்ற சிறப்புப் பெயரை, அவர் காலத்திய ஒட்டக்கூத்தரைத்தவிர அவருக்கு முன்னும் பின்னும் இருந்த தமிழ்ப் புலவர்களில் வேறெப்புலவரும் வகியாமையே அவரது பெருமையை நிலைநிறுத்து மென்க.

முற்றிற்று.



# செய்யுட் குறிப்புகள்.

பக்கம் 11. 'ஈடார்' என்ற பாட்டு. பீடு ஆரும்-பெருமை தங்கிய. கோடாமல்-தவறாமல்.

'கம்பத்தின் அருகோர்' கம்பம்-தூண். அம்பு அத்தனையும் வென்ற விழிஉற்ற-எல்லா அம்புகளையும் வென்ற கண்களைக் கொண்ட. நல்கினன்-கொடுத்தான் நம் பத்தி-நம்முடைய பக்தி அருள் செல்வம்-கொடுதத செல்வம்.

பக்கம் 12.'கம்பன் பிறந்தவூர்' கும்பமுனி-அகஸ்தியர். செம் பதுமம் தாது அகத்து நான்முகனும் தாதையும்-செந்தாமரைப் புஷ்பத்தின் பூவிதழிலுள்ள பிரமனும் அவனுடைய தந்தையாகிய திருமாலும். ஓது அகத்தார்-வேதங்களாற் புகழப்படும் அகமுடைய பரமசிவன்.

'சீரணிச் சோழ நாட்டு' தாரணிக் கொடையான்-தாரணியைக் கொடையாகக் கொண்டவன். காரணக் கொடையான்-மேகம்போலும் ஈகையை உடையவன்.

'ஆவின்' சீரார் குணதித்தன்-சிறப்புள்ள குணமுடைய ஆதித்தன் என்பவன். சேய்-பிள்ளை. (கம்பன்) காரார் காகுத்தன்-இராமன்.

பக்கம் 13. 'தாரதலத்திலுள்ள'-தாரதலம்-பூமி. அரசவும்-ராவுகிற. அரம்-ஊா ஆயுதம்.

'இம்பரும் உம்பரும்' இம்பர் உம்பர்-மண்ணுலகோரும் விண்ணுலகோரும். ஏத்திய-சிறப்பித்த. தம்பமாம் முத்தி-நிலைபெற்ற மோக்ஷம். அம்பரம்-ஆகாயம்.

பக்கம்15.'முட்டிலட்டில்' குறைதலில்லாத சமையல் வீட்டில் ஒலிக்கின்ற வார்க்கப்பட்ட பெரிய உலைகளின் கமுகீராகிய

மிருந்த வெள்ளமானது குளங்களிலும் மெல்லிய பாக்கு மரங்கள் உயர்ந்திருக்கிற சோலைகளிலும் போய் நடப்பட்டிருக்கிற செந்நெல் நாறுகளை வளரும்படி செய்யும்.

பக்கம் 8. 'வாய்ந்தவயிரபுர' வளங்கள் வாய்க்கப்பெற்ற வயிரவபுரத்தில் வாழுகின்ற என் தாயாகிய காளி தேவியே! ஆரா ய்ந்த மலையில் அழகு பெறும்படி விளைந்திருந்ததினை (கம்பு)க்கதிர் களை அழியும்படி மேய்கிற காளிங்கராயன் ஏறுகிற குதிரையானது இறக்கும்படி அதைக் கொண்டு போவாயாக.

பக்கம் 9. 'மோட்டெருமை' — நாட்டில் மூடாத பெரிய கதவையும், பயப்படாதே என்ற சொல்லையும் கொண்டவராகிய சடையப்பருக்கு ஊராவது, பெரிய எருமைகள் தடாகங்களில் பிரவேசித்து முட்டுகிற வரால் மீன்களைத் தம் கன்றுகள் என்று நினைத்து வீடு போமளவும் பால் சுரந்து நிலத்தில் பொழிந்து கொண்டே செல்லுகிற திருவெண்ணெய் நல்லூர் ஆம்.

பக்கம் 20. 'கண்ணொடு'—ஒருவர்கண்களோடு ஒருவர்கண்கள் நோக்கால் ஒக்குமாயின், அவர் வாய்மை தோன்றச் சொல்லும் சொற்கள் ஒருபயனுமுடையன அல்ல.

'எண்ணரு நலத்தினள்' — நினைத்தற்கரிதான அழகைக் கொண்ட சீதாபிராட்டி இப்படி இருந்த காலத்தில் ஒருவர்கண்ணொடு மற்றொருவர் இரண்டு கண்களையும் பற்றி, ஒன்றை மற்றொன்று அனுபவித்துக் கொண்டிருக்கவும் தத்தம் இடங்களில் நிலைபெற்றிராமல் இருவரறிவும் ஒற்றுமைப்படும்படி ஸ்ரீராமனும் நோக்கினான்; சீதையும் நோக்கினாள்.

'மயிர்நீப்பின்' தம்மயிர்த்திரளில் ஒருமயிர் போனாலும் உயிர்வாழாத கவரி மானை ஒப்பார், உயிர் நீக்க மானம் வரும் காலம் வந்தால் அதைத் தாங்கமாட்டார்கள்.

பக்கம் 21. 'தேனிரைத்துயர்'—வான் ஒன்றாகாமல் நிறைத்துத்தம்மிற் கூடித் தேனிறால் நிறைத்துயர்ந்த மலைமேல் வெள்ளியாற் செய்த வெள்ளிய கோல்களை ஆகாயத்திற் பொருந்தும்படி நிறைத்தாற் போலத் தாரைகளை நிறைத்துச் சொரிந்தன.

'புள்ளிமால்வரை' சிறப்பித்துக் கூறப்படும் புகழுள்ள பெரிய அந்த இமயமலையானது பொன்மலையின்மேல் வீழ்த்திருற்போலக்காணும்படி ஆலோசித்துத்தம்மிடத்துள்ள பொருள்களை யெல்லாம் சந்தோஷத்தோடு கொடுக்கிற அந்த வள்ளியோர்போல மழைத்தாரைகளை மேகங்கள் சொரிந்தன.

பக்கம் 24. 'குமுதனிட்ட' குமுதன் பூமியினின்று வேரோடு பிடுங்கி வந்து விட்டெறிந்த மலையானது வந்து விழுந்து கூத்தாடிகள் போல நிமிதமென்றொலித்துச் சுழலுதலால், திரிகின்ற அலைகளையுடைய சமுத்திரத்தின் துளிகள், தங்கள் இருப்பிடமான சொர்க்கத்திற் பிரவேசிக்கத் தேவர் இன்னும் அமிர்தம் உண்டாகும், (காமதை உண்ணலாம்) என்ற ஆசையால் துள்ளினார்கள்.

பக்கம் 25. 'மலையெடுத்து' அக்கீத்தம்-அந்தவெள்ளமானது. நிலை-நிலைமையை உடைய; கவிகீத்தம்-வானரக்கூட்டம். கடல் தலை-கடலில்.

தேவபாடை' தேவபாடை - சமஸ்கிருதம். மூவரானவர்-வால்மீகர், அத்யாத்மர், ஆனந்தர். முந்தியாசவினுர்-வால்மீகர்.

பக்கம் 26. 'பருதுமந் நோக்கேனும்' பாசத்தாற் பிணித்து-கயிற்றுற்கட்டி. ஈர்த்தலால் - இழுத்தலால். வார்கண்கழலை-சீதை.

பக்கம் 27. 'என்றெ ராநயிர்'—சீதை இராமனிடம் சொல்லுமாறு அனுமான்பாற்கூறிய அடையாளங்களில் ஒன்றை இச்

செய்யுள் உணர்த்தும். 'ஒரு இவரிக்கு என்ன பெயரிடுவதென்று சீதை இராமரைக் கேட்க அவர்தம் சிற்றன்னையாகிய கைகேசியின் பெயரிடச் சொன்னார்' இவ்விஷயத்தை இராமபிரானிடம் சொல்லும்படி சீதை அனுமானிடம் சொன்னாள்.

'விழுந்த ஞாயிறு' அஸ்தமித்த சூரியன் உதிக்கு முன்னர் பிராமணர்களோடு ஆராய்ந்து, உதித்த சூரியன் அஸ்தமிக்குமுன் கம்பர் பாடிய செய்யுள்களின் தொகை எழுநூறாகும்.

பக்கம் 29. 'ஆசைபற்றி' ஏசுதலில்லாத வெற்றியையுடைய இராமகதையை நான் ஆசைபற்றிக் கூறினேன்.

'ஆங்கவன்' அவ்விதம் அந்த வால்மீகர் விசேஷமாகச் சொன்ன அயோத்தி நாட்டை அன்பு என்கிற மதுவை உண்டு ஊமையன் பேசுதல்போல, நான் இராமயணம் பாடினேன்.

பக்கம் 34. 'ஆழியான் பள்ளி' சக்கராயுத முடைய திருமால் சயனிக்கும் படுக்கையே! அத்திருமால் கடைந்த திருப்பாற்கடலில் மத்தாகநாட்டப்பட்ட மந்திரமலையில் சுற்றிய கடைகயிறே! விபூதி அணியும் பரமசிவனது ஆபரணமே! திரிபுரங்களையும் எரித்தற்கு ஏதுவாகிய வில்லிற் பூட்டிய கயிறே! நீ தூரப்போவாயாக.

'மங்கை யொரு பாகர்' உமாதேவியை வாம பாகமாக வுடைய பரமசிவனது அழகிய மார்பிலுள்ள ஆரமே! பொங்குகிற பாற்கடலைக் கடைந்த அழகிய கயிறே! சந்திரனையும் கோபித்து அதன்மேல் தவழுகின்ற அழகிய பாம்பே! நீஏறியபடியே இறங்கு.

'பாரைச் சுமந்த' பூமியைத் தாங்குகிற படத்தையுடைய பாம்பே! திருமால் படுத்துறங்கும் மெல்லிய படுக்கையே! குளிர்ந்த சந்திரனை அணிந்த சிவந்த சடாபாரத்தையுடைய பரமசிவன்

தரிக்கும் அழகிய ஆபரணமே! விஷத்தையுடையவனே! நீ தூர நடப்பாயாக.

பக்கம் 36.'அம்பராவணி'-கங்கையையும்பாம்பையும்அணிந்த சடாபாரத்தையுடைய பரமசிவன்முதல், தேவர்களாலும் முனிவர்களாலும் உயர்ந்த இவ்வுலகத்துள்ளவரால், சட்டமுடியாத இராமனுகிய யானையானது சேர்ந்த கம்பராகிய புலவரை மனதில் அமைப்போம்.

பக்கம் 37. 'கம்ப நாடன்' பரமசிவன் பூர்வ காலத்தில் தனக்குரியளான உமாதேவியின் காதுகளில் உபதேசித்த, பூங்கொம்பு போல்பவளாகிய சீதையினுடைய நாயகனுகிய இராமரது நாமமானது வியாபிக்க, எக்காலத்தும் வடமொழியில் விருத்தியடைகிற இராம சரிதத்தைத் தமிழ்ச் செய்யுளாகச் செய்தருளிய கம்ப நாடனுடைய பாதமலர்களை யாம் சிரசிற் சூடுவோம்.

பக்கம் 38. 'வேதத்தின் முன் செல்க' பழமையானதாயும் எல்லாவற்றுக்கும் மூலகாரணமாயும் மேலானதாயுமுள்ள ஜோதிஸ்வரூபமாய் விளங்குகிற திருமால், வேதங்களைத் தாண்டிப் போனாலும் போகட்டும்;தத்துவங்களை ஆராய்ந்தறியும் முனிவர் பிரமன் முதலியோர்தக்க,ஞானத்தின் முடிவைக் கடந்து சென்றாலும் செல்லட்டும்; அளவு கடந்த ஞானம் நிறைந்த கடலாகிய அழகிய திருக்குருகூரில் அவதரித்த பரிசுத்தராகிய நம்மாழ்வார் அருளிச் செய்த பாசுரத்தினது ஓரடியைக் கடந்து செல்லமாட்டுவனோ? (மாட்டான்)

பக்கம் 39.'எண்ணிய சகாப்தம்' சகாப்தம் Era. அத்தநாள்-அஸ்தநக்ஷத்திரம். கண்ணிய அரங்கர்-தியானிக்கத்தக்கஅரங்கநாதர் அல்லது அரங்கத்திலுள்ளவர்கள்.

பக்கம் 40'நடையினின்றுயர்'-நல்லொழுக்கத்தினின்று உயர்ந்த இறைவனது அவதாரங்களுள் நடந்ததாகிய இராமாவதாரத்தைக் குறித்தபிரசித்தமான கவித் தொடைகள்நிறைந்தகுற்ற

மற்ற பெருமை பொருந்திய சரித்திரமானது சடையப்பனது திருவெண்ணெய் நல்லூரிற் செய்யப்பட்டது.

'அமுடத்தையர்'—தெய்வ மாதரும், கற்பகவிருக்ஷங்களும், ஒன்பதுவகை நிதிகளும், அமுதமும், காமதேனுவும், அச்சைசுவரியம் என்ற குதிரையும், ஐராவதமும் இந்திரனிடத்திலிருந்து நீங்கி ஒரு பொருள்கூட இல்லாமல் சமுத்திரத்தில் மறைய, கண்ணினை யடையாதவர்களைப் போல தேவர்கள் பயந்தோடினார்கள்.

பக்கம் 41. 'வண்ணமாலை'—தேவர்கள் போன பிற்பாடு பரந்த பூ மாரியால் குளிர்ச்சியாயிருக்கும் அக்காட்டில் இருந்து பிரிந்து பிறரால் அடைய முடியாத அரியதவத்தினை மிகுதியாகக் கொண்ட விசுவாமித்திரர் மனிதருடைய தரித்திரமாகிய வியாதிக்கு மருந்தை ஒத்த சடையனுகிய திருவெண்ணெய் நல்லூரில் இருந்த வள்ளலின் சொல்லைப் போன்ற ஆயுதங்களைக் கொடுத்தார்.

பக்கம் 53 'நேற்படி'—நன்மலி (நென்மலி)ஒரூரின் பெயர். தச்சன்பெயர் கங்கணகணகணவன், அவன் மனைவியின் பெயர் மின்மினிமினிமினிமி; சொற்படி வேலை செய்பவள், துர்துமி துரிதுரிதி.

பக்கம் 57 'அன்றையிலும்'—அந்நாளிலும் இன்று பூமிவிசாலித்ததோ, அல்லது குன்றுகளை நீக்கிவிட்டு நீதிருத்திக் கொண்டாயோ? எக்காலும் அடைந்தவரைக் காப்பாற்றும் குற்ற மில்லாத வளுகிய சோழனே! நாலாறு அடி தூரம் நடந்தாயே.

'காதமிருபத்து' — 24 காததூரமொழிய மீதியுள்ள பூமியை குளிர்ந்த கடல்கொண்டு மறைந்ததோ? உலகத்தில் கொல்லிமலை தேன் பொழிகின்ற அரசனே! நீ கோபித்தால் எங்களுக்கு இருக்க இடமில்லையா?

பக்கம் 64. 'உமையவளும்' உமாதேவியும் நீயும் முற்றும் நிகர்ப்பீர்; ஆனாலும் அந்த உமாதேவிக்கு ஓர் ஊனம் உண்டு; உமாதேவியைத் தன் பாகமாகக்கொண்டதனால் பரமசிவன் பிச்சைக்குப் போனார்; பாண்டியன் உன்மார்பிற் படிந்து அரசாட்சி செய்தான்.

பக்கம் 73. 'ஆடுங்கடை மணி' வாசலிற் கட்டிய ஆராய்ச்சி மணியின் நாவசையாத வண்ணம் இவ்வுலக மெங்கும் பெரிய குடையைத் தரித்து நிழலைச் செய்கிற பெருமான்; இப் பெரிய பூமியில் பாடும் புலவர்களால் புகழப்படுகின்ற ஒட்டக் கூத்தனுடைய திருவடித் தாமரையைத் தலையிற் சூடுகிற குலோத்துங்க சோழன் என்று சொல்வார்கள்.

பக்கம் 75. 'புதுவைச் சடையன்' கவிராக்ஷஸன்-கவி பாடுதலில் ராக்ஷஸனைப் போன்றவன்; புவிக்கு உயர்-பூமியில் உயர்ந்த; கவுடம்-ஒரு வகைக்கவி மாாகசம்; சொல் வளமேபடத் தொடுக்கும் செய்யுட் போக்கு. காங்கேயன் ஒருபிரபுவின் பெயர். கூத்தர் பாடிய நாலாயிரக் கோவை அவர்மேற் பாடப்பட்டது.

பக்கம் 78 'கூட்டங்கள் தோறும்'—குருகைப் பிரான்-திருக்குருகையில் எழுந்தருளிய பெருமான். சட்டம்-கூட்டம். நாட்டங்கள் தோறும்-இரண்டுகண்களிலும். புனல் வந்து நாலப் பெற்றோம்-ஆனந்தக் கண்ணீர் வந்து வழியப் பெற்றோம்.

பக்கம் 80 'நீற்றோனும்'-நீற்றோன்-விபூதி அணிந்த பரமசிவன். மலரோன்-பிரமன். நெடியோன்-திருமால்.

'பூ வேறி நான் முகன்' பூவேறி நான்முகன்-திருமாலின் உந்தித் தாமரையிலுதித்த பிரமன். புள்ளேறித் திருமால்-கருடன் மேல் ஆரோகணிக்கும் விஷ்ணு. சேவறி கண்ணுதல்-விருஷபாரூடரான நெற்றிக்கண்ணை யுடைய பரமசிவன்.

பக்கம் 83. 'கன்னிஅழிந்தனள்'—குமரிஆறுகடற்பெருக்கால் அழிந்தது. மேலுலகத்திருந்த கங்காநதி கீழுலகத்துக்கு இறங்கினள். காவிரிநதியும் கரை கடந்து போனதென்னும் இத்தன்மையானவார்த்தையைப் பெறலாமோ? உலக மாதாவாகிய காவிரியே! நீ கரைகடக்கலாகாது.

பக்கம் 84. 'சிரம்பார்த்தான்'-சிரமன் என்ற வண்ணான்வஸ்திரம் வெளுத்த சேர்த்தியைப் பார்த்து பரமசிவன் தன் தலையைத் தொட்டுப் பார்த்தான். பிரமன் தன் மனைவியைப் பார்த்தான். சிவந்த தாமரைப் புஷ்பம் போலும் கண்களையுடைய திருமால் தன் கையைப் பார்த்தான். ஏனெனில் சந்திரன் அல்லது கங்கை கலைமகள், சங்கு இவற்றின் வெண்மைபோல் கலை இருந்தமையால் ஒருவேளை அவற்றின் தன்மை நீங்கப் பெற்றதோ என்று மும் மூர்த்திகளும் ஐயுற்றனர்.

பக்கம் 85. 'கொற்கையான் மாறன்' கொற்கையை அரசாளும் பாண்டியனாகிய பெரியோன், பொற்கையான் ஆனகதை காணுதா? இனிமையாகிய தாமரைமலரின் வாசனையைவாரிக் கொண்டு அழகிய கதவை அசைப்பதற்காக ஏன் வந்தாய் சொல்லு.

பக்கம் 88. 'விழப்பாரினி'—அரிய வினைகளே! இளம் பெண் சங்குகளுடனே ஆண் சங்குகள் கொழுப்புக் கொண்டு மருத நிலமெங்கும் திரியப் பெற்ற திருக்குருகூரில் அவதரித்த எங்கள் வேளாள குலத்திற் செல்வரம் கொழுந்து போன்ற நம்மாழ்வார் உங்களை இழுத்து அப்புறத்தில் ஏறியவல்ல ஒருவராய் எழுந்தருளி இப்போது நின்றருளினர்; இனிமேல் எங்களைப் பிறவித் துன்பங்களில் ஆழ்த்த வல்லவர் எவர்? ஒருவருமில்லை.

பக்கம் 89. 'தம்பிரானுக் குறைந்த சந்தனக்கையை உடையவரது வரலாற்றைப் பெரியபுராண வசனத்திற் காண்க.

பக்கம் 90. 'பனிநின்ற'—பயம் தரும்படி நின்ற பிறப்பாகிய பெரிய கடலை நீந்தித்தாண்டும்படி புணையாகக் கொண்டு மிகுதி யாய்ப் பற்றிநின்ற எல்லா சமயததாரும் உய்வதற்கு நல்ல உபாய மென்று சொல்லும்படி ஒப்பற்று நின்ற பெரியதத்துவஸ்வரூபி நீயே ஆனல், அவ்வுச்சமயங்களுக்குத் தலைவராய் நின்ற தேவர் கள் என்னபெருமையைக்கொண்டு என்ன செய்வார்கள்.

'பன்னலாம்'—உலகத்திலுள்ள ஜனங்கள் துதிக்கலாம் என்று பற்பலதெய்வங்களையும் நினைப்பார்கள். உன்னையல்லாமல் வேறொரு பெரிய தெய்வமுண்டென்று எண்ணுதல் உயர்ந்தோர் களுடைய ஒழுக்கம் அன்று. பிரமனை முதலாகவுடைய மேலோ ரால் ஆராதிக்கத்தக்க அரிய கடவுள் உன்னையல்லாமல் இல்லா மையை சாஸ்திரமார்க்கத்தில் நிற்பவரான அம்மேலோர் ஆராய்ந் தறிவரோ? அறியார்கள்.

'மெய்யைந்தான்'—ஐயா! நீபடைத்த நிலைபேறுடைய உயிர் கள் நீயேபரதத்துவம் என்னும் உண்மையைக் கொஞ்சமேனுந் தெரிந்து உஜ்ஜீவிக்கல் ஆகாதோ! அதில் உனக்கேதேனும் குறைவுண்டோ? பரமசிவனுக்கு (பிரம கபாலத்தை ஏந்திப் பிச்சை யேற்றுத்திரிந்த) அக்காலத்தில், நீ கொடுத்தருளிய பிச்சையினல் சிறிய சந்தேகமு நீங்கப்பெற்றவர்கள் பூலோகத்தவருள்ளும் தேவலோகத்தவருள்ளும் உண்டு.

பக்கம் 91. 'உலகம்யாவையும்'—உலகங்கள் எல்லாவற்றை யும் உண்டாக்குதலும், நிலைபெறும்படி செய்தலும், அழித்தலும் ஆகிய இவற்றை நீங்காத திருவிளையாட்டாகவுடைய தலைவராகிய அவருக்கு நாங்கள் சரணம்.

'வேதம் வேதியர்'—வேதங்களாலும், வேதியர்களாலும் பிரமன் முதலியோர்களாலும் ஆராய்ந்து அறியப்படாமல் நின்ற ஆதிபகவனே எமது அறிவுக்கு அறியப்படும் பொருள்.

'அரனதிகன்'—அரன்—பரமசிவன். உலகு அளந்த அரி—உலகத்தைத் தம்திருவடியால் அளந்த திருமால். பாகதி சென்று அடைவரிய பரிசேபோல்-நற்கதியைச் சென்றடைவது அருமையானதன்மையுடையதாதல் போல, பிரவேசித்தற்கு அரியதன்மையுள்ளதாகிய தேவகங்கையின் அருகிலுள்ளதும் ஆகாயத்தை அளாவிய தனது சிகரங்களிலே சூரியசந்திரர்களாகிய இரண்டு சுடர்களும் சேர்தலையுடையதுமான அருந்ததி என்ற பெரிய மலையை வணங்கி.

பக்கம் 104. 'பாப்போத ஞாலம்'—விஸ்தாரமாகிய கடல் சூழ்ந்த பூமியை ஒரு தம்பியாகிய பாதன் ஆளவும், குளிர்ச்சியான சந்திரனை நிறத்தால் வெல்வோனாகிய ஒரு தம்பியாகிய இலக்ஷ்மணன் பின் தொடர்ந்து செல்லவும், தானும்ஜானகியாகியமனைவியோடுகூடி வா நினைத்துப்போன புதல்வனாகிய இராமனுடைய பிரிவுக்காகத் தந்தையாகிய தசரதன் சகிக்காமல், உயிர் விட்டான்; அப்படியிருக்க அநியாயமாய் என் புதல்வன் இறந்ததைக் குறித்து (நான் இறவாதிருத்தலால்) கல்மனதைக் கொண்டிருத்தலில், எனக்குவமை எடுத்துச் சொல்வதற்கு இவ்வுலகத்தில் இனியாவருளர்?

பக்கம் 106. 'வெங்கண் சிவந்து'—கொடிய கண்கள்சிவந்து வெடித்தவாலே முறுக்கிக் கோபிததெழுந்து என்னுடம்பைப் பிளக்க வருகிற புலியே! அந்நாளில் இரணிய கசிபனைப் பங்கமடைய நகங்களால் உரம் பற்றி உண்ட நாசிங்கன் என் மனத்தில் இருப்பதை நீ உணர்வாயாக; நீ அழிவாயாக.

பக்கம் 108. 'ஆன்பாலும்'—அரம்ப்பமுதல் முக்கனி-வாழை, மா, பலாப்பழங்கள்.

பக்கம் 109,—மதிதவழ் குடுமி-சந்திரன் உராயும்படியான உயர்ந்த சிகரத்தையுடைய. பல் காப்பியத்தும்-பல்நூல்களிலும். பாகதம்- எல்லாநாட்டும் மேலோர் மொழி. செம்பியன்-சோழன்.

பக்கம் 114. 'இம்பர் நாட்டில்'—இவ்வுலகத்தில் எல்லா இன்பங்களையும் அடைந்து அரசாட்சி செய்திருந்தாலும், இந்திரலோகத்தில் கற்பக விருக்ஷத்தின் நிழலில் இருந்தாலும் செம்பொன்னாலாகிய மகாமேரு மலையை ஒத்தவலிமைபொ[illegible]ய இராமனுடைய அழகிய கதையில், கம்ப நாடன் பாடியகவிகளிற்போற் பிறவற்றில் கற்றோர்க்கு மனம் களிப்படையாது.

'புவியினுக்கணிபாய்' — இராம லக்ஷ்மணர்கள், பூமிக்கு அலங்காரமாயிருந்த வஸ்துக்களைக் கொடுத்து பக்கத்தே விளைநிலங்களைக் கொண்டதாகி, ஐவகை நிலத்தின் வழிக்கலந்து, தெளிவினை அடைந்து குளிர்ந்த ஒழுகுதலையும் பொருந்தி அறிஞர்களாற் சொல்லப்பட்ட கவிகளைப்போல இருந்த கோதாவரி நதியைக் கண்டார்கள்' (நதியை உணர்த்துகையில் இங்ஙனம் பொருள் கொள்ளல் வேண்டும்) பூமியிலுள்ளவர்களுக்கு அலங்காரம் ஆகி அமைந்த சதுர்வித புருஷார்த்தங்களையும் கொடுத்து, அறிவினதாகி, தேவருணவினையொத்த அகப்பொருட்டுறைகளைக் கொண்டு, ஐவகை நிலத்தின் மார்க்கத்திலே கலந்து, மனம் புளி பெறத் தெளிந்து தண்ணளி பூண்டு, அந்தந்த வருண நிலைகட்கு ஏற்ற ஒழுக்கமும் தழுவிய சான்றோருடைய கவியென நின்ற கோதாவரியை வீரர்கள் கண்டார்கள். (கவிக்குச் சிலேடையாகக் கொள்ளுகையில் இப்படிப் பொருள் கொள்ள

